# அல்லாஹ்வின் சிங்கம்

# ஹழரத் அலீ

## கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்



ஸய்யத் மன்ஜூர் அஹ்மத் இஷ்ஃகி ஷாஹ்

ஹூஸைனி ஆமிரி

நூரியா பதிப்பகம்

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்

مَوْلَايَ صَلِّ وَ سَلِّمْ دَاءِمًا اَبَدًا
عَلَى حَبِيْبِكَ خَيْرِ الْخَلْقِ كُلِّهِمِ

# அல்லாஹ்வின் சிங்கம் ஹழரத் அலீ

கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்

ஸய்யத் மன்ஜூர் அஹ்மத் இஷ்ஃகி ஷாஹ் ஹுஸைனி ஆமிரி

# முன்னுரை

படைத்து, காத்து இரட்சிக்கின்ற வல்ல அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறியவனாகவும் ஆரம்பம் செய்கிறேன்.

நீண்ட காலமாக (அஸதுல்லாஹ்) அல்லாஹ்வின் சிங்கம் ஹழரத் அலீ இப்னு அபி தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் வரலாற்றை எழுத வேண்டும் என்னும் ஆசை மனதில் இருந்துக் கொண்டே இருந்தது. வல்ல அல்லாஹ் தனது அன்பாலும், அருளாலும் அந்த ஆசையை பூர்த்தி செய்திருக்கிறான். அல்ஹம்துலில்லாஹ்!

பாதி புத்தகத்தை எழுதிக் கொண்டிருந்த போது எனது உடல்நிலை கெட்டுப் போனது. மூச்சுத் திணறலும் அதைத் தொடர்ந்து மாரடைப்பும் ஏற்பட்டன. என்னை மருத்துவ மனைக்கு கொண்டு சென்று ஐ.சி.யூ வார்டில் சேர்த்து விட்டார்கள். மறுநாள் நான் கண் விழித்த போது எனக்கருகில் எனது முர்ஷித் ஹழரத் ரஷீதிஷாஹ் ஆமிரி கலீமீ அவர்கள் அமர்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியமுற்றேன். எனது முர்ஷித் அவர்கள் எனக்கு தைரியம் கூறினார்கள். எனக்காக துஆவும் செய்தார்கள். தொடர்ந்து திக்ரு மஜ்லிஸ் நடக்கும் போது எனக்காக துஆவும் செய்துள்ளார்கள். வல்ல அல்லாஹ் இந்த நல்லோர்களின் துஆ பரக்கத்தினால் எனக்கு நலத்தைக் கொடுத்தான்.

பத்து நாட்கள் மருத்துவ மனையில் இருந்துவிட்டு வீடு திரும்பினேன். ஆயினும் உடல் பலஹீனத்தால் என்னால் எழுந்து உட்காரவும் முடியவில்லை. மணிக்கட்டுவரை இரண்டு கைகளும் மரத்துப் போயின. இந்த நிலையில் நான் படுத்துக் கொண்டே மீதி புத்தகத்தை எழுதி முடித்துள்ளேன். அல்ஹம்துலில்லாஹ்!

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பேரிலும், அண்ணலாரின் உற்ற சகோதரர் மௌலா அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் பேரிலும் நான் கொண்டுள்ள நேசத்தைக் கொண்டு வல்ல அல்லாஹ் எனக்கும், இந்த புத்தகத்தைப் படிப்போருக்கும் நற்பாக்கியங்களைத் தந்தருள்வானாக! இம்மை, மறுமை பேறுகளையும் தந்தருள்வானாக! மேலும், இது போன்ற நூல்களை எழுத எனக்கு அறிவையும், ஆற்றலையும், உடல் நலத்தையும் தந்தருள்வானாக! ஆமீன்!

அன்பு சகோதரன்,

ஸையத் மன்ஜூர் அஹ்மத் இஷ்க்கிஷாஹ் ஆமிரி ஹுஸைனி

# பொருளடக்கம்

# சிறப்புகள்

## திருக்குர் ஆனில் ஹழரத் அலீ (கரம்) பற்றி

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் மேன்மையைப் பற்றி திருக்குர்ஆனில் முன்னூறு வசனங்களில் கூறப்பட்டுள்ளதாக ஹழரத் இமாம் ஸுயூத்தி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது தாரீக் குலஃபா என்னும் நூலில் கூறியுள்ளார்கள். அவற்றை ஹழரத் இமாம் தப்ரானி ரஹ்மதுல்லாஹி அலைஹி, ஹழரத் இமாம் அபீ ஹாத்திம் ரஹ்மதுல்லாஹி அலைஹி, ஹழரத் இப்னு அஸாகிர் ரஹ்மதுல்லாஹி அலைஹி போன்றோர் தொகுத்து எழுதியுள்ளனர். (பக் 175)

ஹழரத் ஹஸீஃபா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், “மனிதர்களில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடைய ஸ்தானம், திருக்குர்ஆனில் குல்ஹுவல்லாஹு ஸூராவைப் போன்றதாகும்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 76)

**வசனம்:**

(நபியே!) இதுபற்றிய முழு விபரமும் உமக்கு வந்து சேர்ந்த பின்னரும் எவரேனும் ஒருவர் உம்மிடம் இது குறித்து தர்க்கம் செய்தால்: "வாருங்கள்! எங்கள் புதல்வர்களையும், உங்கள் புதல்வர்களையும், எங்கள் பெண்களையும், உங்கள் பெண்களையும்; எங்களையும், உங்களையும் அழைத்து (ஒன்று திரட்டி வைத்துக் கொண்டு) 'பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்' என்று நாம் பிரார்த்திப்போம்" என நீர் கூறும்.

فَمَن حاجَّكَ فيهِ مِن بَعدِ ما جاءَكَ مِنَ العِلمِ فَقُل تَعالَوا نَدعُ أَبناءَنا وَأَبناءَكُم وَنِساءَنا وَنِساءَكُم وَأَنفُسَنا وَأَنفُسَكُم ثُمَّ نَبتَهِل فَنَجعَل لَعنَتَ اللَّهِ عَلَى الكاذِبينَ

என்னும் அத்தியாயம் 3, ஸூரத்துல் ஆல இம்ரான், வசனம் 61 அருளப்பட்டபோது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹுதஆலா அன்ஹு ஆகியவர்களை

அழைத்து, "இறைவனே! இவர்கள்தாம் என்னுடைய அஹ்லுல்பைத்தினர் (குடும்பத்தினர்)" என்று கூறினார்கள். இதை அறிவிப்பவர்: ஹழரத் ஸஃதுப்னு அபீவக்காஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: திர்மிதீ. இது பற்றிய முழு விவரம் கீழ்கண்டபடி கூறப்பட்டுள்ளது:

மேற்கண்ட வசனத்தின் தஃப்ஸீரில் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இவ்விதம் கூறியுள்ளார்கள், ஒருமுறை நஜ்ரானைச் சேர்ந்த கிறிஸ்தவ குழு ஒன்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருச்சமூகத்தில் வாதம் செய்யும் எண்ணத்துடன் வருகை தந்தது. அவர்கள், ஹழரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பற்றி, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "ஹழரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள், அல்லாஹ்வின் அடியாராகவும், (வேத நூல் அருளப்பட்ட) ரஸூலாகவும் இருக்கிறார்கள். அவர்கள் ஹழரத் மர்யம் அலைஹிஸ்ஸலாம் என்னும் பரிசுத்த தாயாரின் மூலம் பெறப்பட்டார்கள்" என்று கூறினார்கள்.

அதற்கு கிறிஸ்தவர்கள், "இல்லை, ஏசுநாதர் (ஹழரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் (நஊதுபில்லாஹ்) அல்லாஹ்வின் பிள்ளை ஆவார்" என்று கூறினார்கள். "அது எப்படி?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்டார்கள். அதற்கு கிறிஸ்தவர்கள், "தந்தை இல்லாமல் பிறந்த மனிதர் எவரையாவது நீங்கள் சான்றாக கூறமுடியுமா?" என்று கேட்டார்கள்.

"நீங்கள் ஹழரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? ஹழரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களாவது தாயாரின் மூலமாக பிறந்தார்கள். தந்தையார் மட்டுமே இல்லை. ஆனால், ஹழரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தாயும் இல்லாமல் தந்தையும் இல்லாமல் பிறந்தார்களே! அது எப்படி?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அதற்கு கிறிஸ்தவர்களிடம் எந்த ஒரு பதிலும் இல்லாததால், அவர்கள் வீணாக தர்க்கம் புரிய ஆரம்பித்தனர்.

உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நீங்கள் ஒருவருக்கொருவர் சாபமிட்டுக் கொள்ளுங்கள். எவர் உண்மையாளராக இருக்கிறாரோ அவர் தப்பித்துக் கொள்வார். எவர் தவறு செய்தாரோ அவர் அழிந்து போவார். இதன் மூலம் உண்மையும் பொய்யும் வெளிப்பட்டுவிடும்" என்று கூறினார்கள். அந்த சமயத்தில் ஸூரத்துல் ஆல இம்ரானின் 61வது வசனம் இறக்கியருளப்பட்டது.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் பதிலைக் கேட்ட கிறிஸ்தவ குழுவினர், தங்களுக்கு மூன்று நாட்கள் அவகாசம் வேண்டும் என்றார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஒப்புக் கொண்டனர். மூன்று நாட்கள் கழித்து கிறிஸ்தவ குழுவினர், விலை உயர்ந்த ஆடைகளை அணிந்துக் கொண்டும், தங்களுடைய பிரசித்தி பெற்ற பாதிரிமார்களை அழைத்துக் கொண்டும் வந்தார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களும் அங்கு வருகைப் புரிந்தார்கள். அவர்களின்ன் புனித மடியில் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அமர்ந்திருந்தார்கள். இடது புறத்தில் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அமர்ந்திருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின்னால் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களும், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களும் அமர்ந்திருந்தனர். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தம் குடும்பத்தினரிடம், “நான் துஆ கேட்கும் போது நீங்கள் அனைவரும் ஆமீன் என்று கூறுங்கள்” என்று கூறினர். பிறகுப் தமது இரு கரங்களையும் ஏந்தி, “யா அல்லாஹ்! இவர்கள் என்னுடைய அஹ்லுல் பைத்தினர் ஆவார்கள்” என்று கூறினார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களையும், அவர்களுடைய அஹ்லுல் பைத்தினரையும் கண்ட பெரிய பாதிரியார், “நிச்சயமாக நான் இவர்களுடைய திரு முகங்களில் புனிதத்தைக் காணுகிறேன். இவர்கள் தங்களுடைய கரங்களை ஏந்தி தங்களுடைய இறைவனிடம், “இறைவா! இந்த மலைகளை அவற்றின் இடத்தை விட்டும் நகர்த்திவிடு” என்று துஆ கேட்டால், அந்த மலைகளும் நகர்ந்துவிடும். எனவே நீங்கள் இவர்களை சபிக்காதீர்கள். அவ்விதம் சபித்தால் நீங்கள் அனைவரும் அழிந்துவிடுவீர்கள். பிறகு இந்த பூமியில் ஒரு கிறிஸ்தவர் கூட மீதமிருக்க மாட்டார்கள்” என்று கூறினார்.

பெரிய பாதிரியாரின் பேச்சைக் கேட்ட கிறிஸ்தவ குழுவினர், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம், “நாங்கள் இனி சபிக்கமாட்டோம். மேலும் நாங்கள் ஜிஸ்யாவை ஏற்றுக் கொள்கிறோம். இனி எங்கள் மதம் எங்களுக்கு. உங்கள் மதம் உங்களுக்கு” என்று கூறினார்கள். (ஸீரதே பாக் ஹழரத் அலீயுல் முர்துஜா, பக்கம் 143)

**வசனம்:**

## وَيَقولُ الَّذينَ كَفَروا لَولا أُنزِلَ عَلَيهِ آيَةٌ مِن رَبِّهِ ۗ إِنَّما أَنتَ مُنذِرٌ ۖ وَلِكُلِّ قَومٍ هادٍ

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரே ஆவீர். மேலும் ஒவ்வொரு சமூகத்தவருக்கும் ஒரு நேர்வழிகாட்டி உண்டு என்னும் அத்தியாயம் 13, ஸூரத்துர் ரஃது, வசனம் 7 அருளப்பட்ட போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "நான் அச்சமூட்டி எச்சரிப்பவனாக இருக்கிறேன். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் நேர்வழிகாட்டியாக இருக்கிறார். அலீயே! உமது பொருட்டாலேயே நேர்வழியை பெறுபவர்கள், நேர்வழியைப் பெறுகிறார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஊன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 87)

**வசனம்:**

## يا أَيُّهَا الَّذينَ آمَنوا إِذا ناجَيتُمُ الرَّسولَ فَقَدِّموا بَينَ يَدَي نَجواكُم صَدَقَةً ۚ ذٰلِكَ خَيرٌ لَكُم وَأَطهَرُ ۚ فَإِن لَم تَجِدوا فَإِنَّ اللَّهَ غَفورٌ رَحيمٌ

"ஈமான் கொண்டவர்களே! நீங்கள் நம் தூதருடன் இரகசியம் பேச நேரிட்டால் உங்கள் இரகசியத்திற்கு முன்னர் ஏதேனும் தான தர்மத்தை முற்படுத்துங்கள். இது உங்களுக்கு நன்மையாகவும், (உள்ளத்திற்கு) தூய்மையாகவும் இருக்கும். ஆனால் (தான தர்மம் செய்வதற்கு) நீங்கள் வசதி பெற்றிராவிட்டால் – நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவன்; மிக்க கிருபையுடையவன். (அத்தியாயம் 58, ஸூரத்துல் முஜாதலா, வசனம் 12.)

இந்த வசனம் அருளப்பட்டது பற்றி ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறும் போது, "முஸ்லிம் பெருமக்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருச் சமுகத்தில் வந்து பல்வேறு விஷயங்களைக் கேட்பார்கள். இரகசியங்களைக் கூறுவார்கள். இதனால் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஓய்வு இன்றி கடும்துயரம் அடைந்தார்கள். அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலா தன்னுடைய ஹபீபின் துயரை குறைக்கும் பொருட்டு இந்த வசனத்தை

அருளினான். இந்த வசனம் அருளப்பட்டதும் இரகசியம் கேட்போரின் எண்ணிக்கை கணிசமாக குறைந்தது.

ஹழரத் இமாம் திர்மிதீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் அலீ இப்னு அல்கமா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாக அறிவிக்கிறார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள், “மேற்கண்ட வசனம் அருளப்பட்ட போது நான், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், (ஸதகா) எவ்வளவு என்று கேட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், (ஒரு) தீனாரைப் பற்றி உம்முடைய கருத்து என்ன?” என்று கேட்டார்கள். அதற்கு நான், “அவர்கள் அதற்கு சக்தி பெறமாட்டார்கள்” என்று கூறினேன்.

அரை தீனாரைப் பற்றி உம்முடைய கருத்து என்ன?” என்று கேட்டார்கள். “அதற்கும் சக்தி பெறமாட்டார்கள்” என்றேன். “அப்படியானால் எவ்வளவு (ஸதகா நிர்ணயிக்கலாம்) என்று கேட்டார்கள். நான், “வாற் கோதுமை எடை அளவு” என்றேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், நீர் பற்றுறுதி மிக்கவராக ஆகிவிட்டீர்” என்று கூறினார்கள்.

உடனே அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலா, ‘நீங்கள் உங்கள் இரகசியப் பேச்சுக்கு முன்னால் தான தர்மங்கள் முற்படுத்தி வைக்க வேண்டுமே என்று அஞ்சுகிறீர்களா? அப்படி நீங்கள் செய்ய (இயல) வில்லையெனில் (அதற்காக தவ்பா செய்யும்) உங்களை அல்லாஹ் மன்னிக்கிறான்; என்னும் 13வது வசனத்தை அருளினான். மேலும், என்னுடைய பொருட்டு அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத், இந்த உம்மத்துகள் மீது (இந்த ஸதகாவை) இலேசாக்கினான்” (என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள்)

ஹழரத் முஜாஹித் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், “மேற்கண்ட 12வது வசனம் அருளப்பட்டதும் முதன் முதலாக ஸதகாவைக் கொடுத்தவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தான். ஹழரத் குஷைரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களும் மற்றும் சில உலமாக்களும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மூலமாக கூறுகிறார்கள், “திருக்குர்ஆனில் ஒரு வசனம் இருக்கிறது. அதனை எனக்கும் முன்னால் வேறு எவரும் அமல் (செயல்) ஆற்றவில்லை. எனக்குப் பிறகும் வேறு எவரும் செயலாற்றமாட்டார்கள். அது, அத்தியாயம் 58ன், 12வது வசனமாகும்” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள்.

“என்னிடம் ஒரு தீனார் இருந்தது. அத்தியாயம் 58ன், 12வது வசனம் அருளப்பட்டதும் நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம் அவர்களிடம் இரகசியமாக கேட்கும் ஒவ்வொரு கேள்விக்கும் ஒரு திர்ஹம் (ஸதகாவாக) கொடுத்து வந்தேன். இவ்விதமாக என்னிடமிருந்த திர்ஹம்களும் தீர்ந்து போயின. அதே சமயம் அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத், 'நீங்கள் உங்கள் இரகசியப் பேச்சுக்கு முன்னால் தான தர்மங்கள் முற்படுத்தி வைக்க வேண்டுமே என்று அஞ்சுகிறீர்களா? அப்படி நீங்கள் செய்ய (இயல) வில்லையெனில் (அதற்காக தவ்பா செய்யும்) உங்களை அல்லாஹ் மன்னிக்கிறான்;" என்னும் 13வது வசனத்தை அருளினான். (எனவே, 12வது வசனத்தை என்னைத் தவிர வேறு எவரும் செயலாற்ற இயலவில்லை" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள்.) (தஃப்ஸீர் அல் குர்துபி, பாகம் 9, பக்கம் 306)

**வசனம்:**

وَقِفوهُم ۖ إِنَّهُم مَسئولونَ

ஹழரத் அபூ ஸயீத் அல் குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "இன்னும், அவர்களை (அங்கே) நிறுத்திவையுங்கள். அவர்கள் நிச்சயமாக (கேள்விக் கணக்குக்) கேட்கப்பட வேண்டியவர்கள் (என்று மலக்குக்களுக்கு கூறப்படும்). என்னும் அத்தியாயம் 37, ஸூரத்துஸ் ஸாஃப்ஃபாத், வசனம் 24 அருளப்பட்டபோது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "இந்த வசனம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் விலாயத்து (என்னும் உயர்ந்த ஸ்தானம்) பற்றி அவர்களிடம் கேட்கப்படும் என்பதை விளக்குகிறது" என்று கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 84)

**வசனம்:**

۞ يا أَيُّهَا الرَّسولُ بَلِّغ ما أُنزِلَ إِلَيكَ مِن رَبِّكَ ۖ وَإِن لَم تَفعَل فَما بَلَّغتَ رِسالَتَهُ ۚ وَاللَّهُ يَعصِمُكَ مِنَ النّاسِ ۗ إِنَّ اللَّهَ لا يَهدِي القَومَ الكافِرينَ

ஹழரத் பராஉ பின் ஆஸிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "தூதரே! உம் இறைவனிடமிருந்து உம் மீது இறக்கப்பட்டதை (மக்களுக்கு) எடுத்துக் கூறிவிடும்" என்னும் அத்தியாயம் 5, ஸூரத்துல் மாயிதா, வசனம் 67 அருளப்பட்ட போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "தூதரே! நீங்கள் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களின்

ஃபளாயில்களை (சிறப்புகளை) விளக்குங்கள்" என்பது அதன் பொருளாகும் என்று கூறினார்கள். அதன்படி அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் 'கதீர் கும்' என்னுமிடத்தில் குதுபா பேருரை நிகழ்த்தினார்கள். அதில், "மன் குன்து மவ்லாஹு ஃப அலிய்யும் மவ்லாஹு (நான் யாருக்கெல்லாம் மவ்லாவாக இருக்கிறேனோ, அவர்களுக்கெல்லாம் அலீயும் மவ்லாவாக இருக்கிறார்) என்று மக்களிடையே கூறினார்கள்.

அதை செவிமடுத்த ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "அலீ அவர்களே! உங்களுக்கு வாழ்த்துக்கள். தாங்கள் எனக்கும், முஃமினான ஒவ்வொரு ஆணுக்கும், பெண்ணுக்கும் வலியாக (நேசராக) ஆகிவிட்டீர்கள்" என்று கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 92)

**வசனம்:**

وَقَرنَ في بُيوتِكُنَّ وَلا تَبَرَّجنَ تَبَرُّجَ الجاهِلِيَّةِ الأولىٰ ۖ وَأَقِمنَ الصَّلاةَ وَآتينَ الزَّكاةَ وَأَطِعنَ اللَّهَ وَرَسولَهُ ۚ إِنَّما يُريدُ اللَّهُ لِيُذهِبَ عَنكُمُ الرِّجسَ أَهلَ البَيتِ وَيُطَهِّرَكُم تَطهيرًا

ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறினார்கள், "ஒருநாள் காலையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஒட்டகச் சேணத்தின் உருவம் பொறிக்கப்பட்ட கறுப்பு நிற கம்பளிப் போர்வை அணிந்துக் கொண்டு புறப்பட்டார்கள். அப்போது (அண்ணலாரின் பேரர்) ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வந்தார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை (தமது போர்வைக்குள்) நுழைத்துக் கொண்டார்கள். பிறகு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்களையும் தமது போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள்.

பிறகு, (சுவனத் தலைவியும், அருமை மகளுமான) ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வந்த போது, அவர்களையும் (தமது போர்வைக்குள்) நுழைத்துக் கொண்டார்கள். அதன் பிறகு, (தமது மருமகர்) ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் வந்த போது அவர்களையும் தங்களின் போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள். பிறகு, "(நபியின்) வீட்டையுடையவர்களே! உங்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் நாடுகிறான்"

என்னும் அத்தியாயம் 33, ஸூரத்துல் அஹ்ஜாப், வசனம் 33ஐ ஓதிக் காட்டினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

**வசனம்:**

**وَيُطۡعِمُونَ الطَّعَامَ عَلٰى حُبِّهٖ مِسۡكِيۡنًا وَّيَتِيۡمًا وَّاَسِيۡرًا**

"மேலும், அ(வ்விறை)வன் மீதுள்ள பிரியத்தினால் ஏழைகளுக்கும், அநாதைகளுக்கும், சிறைப்பட்டோருக்கும் உணவளிப்பார்கள். அத்தியாயம் 76, ஸூரத்துத் தஹ்ர், வசனம் 8.

மேற்கண்ட வசனத்தின் தஃப்ஸீரில் ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஒரு முறை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தமது உணவுத் தேவைக்காக இரவு முழுவதும் உழைத்தார்கள். காலையில் கிடைத்த கூலியைக் கொண்டு மாவு வாங்கிக் கொண்டு வீட்டிற்குச் சென்றார்கள். மூன்றில் ஒரு பங்கு மாவைக் கொண்டு ஹரீரா என்னும் உணவைத் தயாரித்தார்கள். ஹரீரா தயாரான போது, ஒரு ஏழ்மையானவர் வந்து (உணவைக்) கேட்டார். உடனே ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், தாம் சமைத்து வைத்திருந்த ஹரீரா முழுவதையும் அந்த ஏழைக்கு கொடுத்து விட்டார்கள்.

பிறகு, மூன்றில் இரண்டாவது பங்கு மாவைக் கொண்டு மீண்டும் ஹரீராவை சமைத்தார்கள். சமைத்து முடித்தபோது, அநாதை ஒருவர் வந்து உணவு கேட்டார். உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஹரீரா முழுவதையும் அநாதைக்கே கொடுத்து விட்டார்கள். மீதமிருந்த மூன்றாவது பங்கு மாவைக் கொண்டு மீண்டும் ஹரீராவை சமைத்தார்கள். சமைத்து முடித்த போது ஒரு முஷ்ரிக் கைதி வந்து உணவு கேட்டார். எனவே, மூன்றாம் முறை சமைத்த ஹரீராவையும் கைதிக்கே கொடுத்து விட்டார்கள். அப்போது இந்த வசனம் அருளப்பட்டது. இதை ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் கத்தாதா ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரும் கூறியுள்ளார்கள். (ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 328)

**வசனம்:**

**وَالنَّجۡمِ اِذَا هَوٰى**

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நாங்கள் புனித மக்காவில் இளைஞர்களின் ஒரு கூட்டத்தினருடன் அமர்ந்திருந்தோம். எங்களுக்கு நடுவில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வீற்றிருந்தார்கள்.

அப்போது ஒரு நட்சத்திரம் வானத்திலிருந்து விழுந்தது. உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “இந்த நட்சத்திரம் யாருடைய வீட்டிற்கு அருகில் விழுந்ததோ அவர் எனக்குப் பிறகு என்னுடைய வஸீ (வஸீயத்தை பூர்த்தி செய்பவர்) ஆக இருப்பார்” என்று கூறினார்கள். ஜனங்கள் எழுந்து சென்று பார்த்தபோது, அந்த நட்சத்திரம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் வீட்டருகே விழுந்திருந்தது. அதைக் கண்ட ஜனங்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, “தங்களுக்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடைய நேசம் வழிதவறச் செய்துவிட்டது” என்று கூறினார்கள். உடனே, “விழுகின்ற நட்சத்திரத்தின் மீது சத்தியமாக” என்னும் அத்தியாயம் 53, ஸூரத்துந் நஜ்ம், வசனம் 1,2 அருளப்பட்டது. (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 93)

**வசனம்:**

وَيَقولُ الَّذينَ كَفَروا لَستَ مُرسَلًا ۚ قُل كَفىٰ بِاللَّهِ شَهيدًا بَيني وَبَينَكُم وَمَن عِندَهُ عِلمُ الكِتابِ

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான், அத்தியாயம் 13, ஸூரத்துர் ரஃது, வசனம் 43, “வேத ஞானம் யாரிடமிருக்கிறதோ அவர்களும் போதுமானவர்கள்” என்னும் வசனம் பற்றி அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டேன். அதற்கு அண்ணலார் அவர்கள், “அது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பற்றி கூறப்பட்டதாகும்” என்று கூறினார்கள்.

**வசனம்:**

ذٰلِكَ الَّذي يُبَشِّرُ اللَّهُ عِبادَهُ الَّذينَ آمَنوا وَعَمِلُوا الصّالِحاتِ ۗ قُل لا أَسأَلُكُم عَلَيهِ أَجرًا إِلَّا المَوَدَّةَ فِي القُربىٰ ۗ وَمَن يَقتَرِف حَسَنَةً نَزِد لَهُ فيها حُسنًا ۚ إِنَّ اللَّهَ غَفورٌ شَكورٌ

“உறவினர்கள் மீது அன்பு கொள்வதைத் தவிர, இதற்காக நான் உங்களிடம் யாதொரு கூலியும் கேட்கவில்லை!” என்னும் அத்தியாயம் 42, ஸூரத்துஷ் ஷூறா, வசனம் 23 அருளப்பட்ட போது, ஸஹாபா பெருமக்கள் ரிழ்வானுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, “யா

ரஸூலுல்லாஹ்! இந்த வசனத்தில் குறிப்பிட்டுள்ள தங்களின் 'உறவினர்கள்' என்பது யார் யாரைக் குறிக்கும்? எந்த எந்த உறவினர் மீது அன்பு கொள்வது எங்களுக்கு வாஜிபு ஆக்கப்பட்டுள்ளது?" என்று கேட்டார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "அலீயுல் முர்துஜா கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம், எனது திருப் புதல்வியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, அவருடைய இரண்டு பிள்ளைகள் ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர்" என்று பதில் கூறினார்கள். இதை ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் அறிவித்துள்ளார்கள். ஹழரத் அல்லமா ஜலாலுத்தீன் சுயூத்தி அவர்கள் பதிவு செய்துள்ளார்கள்.

**வசனம்:**

**وَمَن يُطِعِ اللَّهَ وَالرَّسولَ فَأُولٰئِكَ مَعَ الَّذينَ أَنعَمَ اللَّهُ عَلَيهِم مِنَ النَّبِيّينَ وَالصِّدّيقينَ وَالشُّهَداءِ وَالصّالِحينَ ۚ وَحَسُنَ أُولٰئِكَ رَفيقًا**

யார் அல்லாஹ்வுக்கும் (அவன்) தூதருக்கும் கீழ்படிந்து நடக்கிறார் களோ அவர்கள் அல்லாஹ்வின் அருளைப் பெற்ற நபிமார்கள், ஸித்தீகீன்கள் (சத்தியவான்கள்) ஷுஹதாக்கள் (உயிர்த்தியாகிகள்) ஸாலிஹீன்கள் (நற்கருமங்களுடையவர்கள்) ஆகியவர்களுடன் இருப்பார்கள் - இவர்கள் தாம் மிக்க அழகான தோழர்கள் ஆவார்கள். அத்தியாயம் 4, ஸூரத்துன்னிஸாவு, வசனம் 69.

மேற்கண்ட வசனத்தின் தஃப்ஸீரில் ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கீழ்கண்டபடி கூறியுள்ளார்கள். ஒரு நாள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம், "யா ரஸூலுல்லாஹ்! இந்த உலகத்தில் உங்களை தரிசித்ததைப் போன்றும், உயர்ந்த இடத்தைப் பெற்றது போன்றும் சுவனத்திலும் பெற முடியுமா?" என்று கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "ஒவ்வொரு நபிக்கும் ஒரு ரஃபீக் (தோழர்) உண்டு. அவர் அந்த உம்மத்துக்களில் முதலாவதாக ஈமான் கொண்டவராக இருப்பார்" என்று கூறினார்கள். அப்போது இந்த வசனம் அருளப்பட்டது.

உடனே, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம், "அலீயே! உமது கேள்விக்கு வல்ல அல்லாஹ் பதிலளித்து விட்டான். உம்மை எனது ரஃபீக்காக ஆக்கியுள்ளான். ஏனெனில்,

நீர்தாம் முதலில் இஸ்லாத்தை ஏற்றவர். நீர்தாம் ஸித்தீக் அக்பர்” என்று கூறினார்கள். (ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 330, தஃப்ஸீர் இப்னு ஹாகிம்)

**வசனம்:**

وَالَّذِي جاءَ بِالصِّدقِ وَصَدَّقَ بِهِ ۙ أُولٰئِكَ هُمُ المُتَّقونَ

“அன்றியும், உண்மையைக் கொண்டு வந்தவரும், அவ்வுண்மையை ஏற்(று உறுதிப்படுத்து)பவர்களும் – இவர்கள் தாம் – பயபக்தியுடையவர்கள் ஆவார்கள். (அத்தியாயம் 39, ஸூரத்துஜ் ஜூமர், வசனம் 33)

இந்த வசனத்திற்கான தஃப்ஸீரில் ஹழரத் முஜாஹித் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், “இந்த வசனத்தில், ‘உண்மையைக் கொண்டு வந்தவர்’ என்பது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களைக் குறிக்கும். ‘அவ்வுண்மையை உறுதிப் படுத்துபவர்’ என்பது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைக் குறிக்கும்” என்று கூறியுள்ளார்கள். (இப்னு அஸாகிர், அபூ நுஅய்ம் ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 330)

**வசனம்:**

يا أَيُّهَا الَّذينَ آمَنُوا اتَّقُوا اللَّهَ وَكونوا مَعَ الصّادِقينَ

“ஈமான் கொண்டவர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; மேலும், உண்மையாளர்களுடன் நீங்களும் ஆகிவிடுங்கள். (அத்தியாயம் 9, ஸூரத்துத் தவ்பா, வசனம் 119)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இந்த வசனத்திற்கான தஃப்ஸீரில், ‘உண்மையாளர்களுடன் நீங்களும் ஆகி விடுங்கள்’ என்று கூறப்பட்டிருப்பது, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுடன் ஆகிவிடுங்கள் என்னும் பொருளை வெளிப் படுத்துகிறது, என்று கூறியுள்ளார்கள். ஏனெனில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தாம் ஸாதிக்குகளின் தலைவராக இருக்கிறார்கள். (இப்னு அஸாகிர், இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 330)

**வசனம்:**

أَفَمَن كانَ عَلىٰ بَيِّنَةٍ مِن رَبِّهِ وَيَتلوهُ شاهِدٌ مِنهُ وَمِن قَبلِهِ كِتابُ موسىٰ إِمامًا وَرَحمَةً ۚ أُولٰئِكَ يُؤمِنونَ بِهِ ۚ وَمَن يَكفُر بِهِ مِنَ الأَحزابِ فَالنّارُ مَوعِدُهُ ۚ فَلا تَكُ في مِريَةٍ مِنهُ ۚ إِنَّهُ الحَقُّ مِن رَبِّكَ وَلٰكِنَّ أَكثَرَ النّاسِ لا يُؤمِنونَ

“எவர் தன் இறைவனிடமிருந்து (பெற்ற) தெளிவின் மீது இருக்கிறாரோ, மேலும் இறைவனிடமிருந்து ஒரு சாட்சியாளர் எவரிடம் (பக்க பலமாய் வந்திருக்கிறாரோ; (அத்தியாயம் 11, ஸூரத்துல் ஹூது, வசனம் 17)

ஹழரத் ஆத் இப்னு அப்துல்லாஹ் அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மிம்பரில் (பிரசங்க மேடை) நின்று, “திருக்குர்ஆனில் ஒன்று அல்லது இரண்டு வசனங்கள் அருளப்படாத குரைஷியர் இல்லை” என்று கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து, “அமீருல் முஃமினீன் அவர்களே! உங்கள் மீது எந்த வசனம் அருளப்பட்டது?” என்று கேட்டார். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், நீர் ஸூரத்துல் ஹூதை படிக்க வில்லையா?” என்று கேட்டுவிட்டு, மேற்கண்ட வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள். பிறகு, “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் இறைவனின் தெளிவின் மீது இருக்கிறார்கள். நான் அவர் புறத்திலிருந்து சாட்சியாளனாக இருக்கிறேன்” என்று கூறினார்கள். இதை நான் செவியுற்றேன்.

இதை இமாம் இப்னு அபீ ஹாத்திம், இமாம் இப்னு அஸாகிர், இமாம் ஸுயூத்தி, இமாம் இப்னு ஜரீர், இமாம் தப்ரீ போன்றவர்கள் பதிவு செய்துள்ளனர். (ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 332)

**வசனம்:**

إِن تَتوبا إِلَى اللَّهِ فَقَد صَغَت قُلوبُكُما ۖ وَإِن تَظاهَرا عَلَيهِ فَإِنَّ اللَّهَ هُوَ مَولاهُ وَجِبريلُ وَصالِحُ المُؤمِنينَ ۖ وَالمَلائِكَةُ بَعدَ ذٰلِكَ ظَهيرٌ

“நிச்சயமாக அல்லாஹ் – அவருடைய எஜமானன் (அவருக்கு உதவுவான்; அன்றியும்) ஜிப்ரீலும், ஸாலிஹான முஃமின்களும் (உதவுவார்கள்)

(அத்தியாயம் 66, ஸூரத்துத் தஹ்ரீம், வசனம் 4)

ஹழரத் அஸ்மா பின்த் உமைஸ் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், “(மேற்படி வசனத்தில்) ஸாலிஹான முஃமின் என்று கூறப் பட்டிருப்பது ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைத்தான்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸஸ்ல்லம் அவர்கள் கூறியதை நான் செவியுற்றேன்.

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “ஸாலிஹான முஸ்லிமீன் என்பது ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களேயே குறிக்கும்” என்று, மேற்படி வசனத்திற்கான தஃப்ஸீரில் கூறியுள்ளார்கள். (இமாம் இப்னு அஸாகிர், இமாம் இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 333)

**வசனம்:**

۞ أَجَعَلتُم سِقايَةَ الحاجِّ وَعِمارَةَ المَسجِدِ الحَرامِ كَمَن آمَنَ بِاللَّهِ وَاليَومِ الآخِرِ وَجاهَدَ في سَبيلِ اللَّهِ ۚ لا يَستَوونَ عِندَ اللَّهِ ۗ وَاللَّهُ لا يَهدِي القَومَ الظّالِمينَ

“(ஈமான் கொள்ளாத நிலையில்) ஹாஜிகளுக்குத் தண்ணீர் புகட்டுவோரையும், கஃபத்துல்லாஹ்வை நிர்வாகம் செய்வோரையும், அல்லாஹ்வின் மீதும் இறுதி நாள் மீதும் ஈமான் கொண்டு , அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிந்தோருக்குச் சமமாக ஆக்கிவிட்டீர்களா? அல்லாஹ்வின் சமூகத்தில் (இவ்விருவரும்) சமமாக மாட்டார்கள் – அநியாயக்காரர்களை அல்லாஹ் நேர்வழியில் செலுத்த மாட்டான்? (இவ்விருவரும் சமமாக மாட்டார்கள்)”. (அத்தியாயம் 9, ஸூரத்துத் தவ்பா, வசனம் 19)

“இந்த வசனம் ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் மேன்மையை வெளிப்படுத்தும் விதத்தில் அருளப்பட்டுள்ளதாக ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள். (இப்னு மர்தூயா)

ஹழரத் இமாம் அபூ ஹாத்திம், ஹழரத் இமாம் அப்துர் ரஜ்ஜாக், ஹழரத் இப்னு அபீ ஷைபா, ஹழரத் இமாம் இப்னு ஜரீர், ஸஅலபீ, வாஹிதி, இப்னுல் அஸீர், ஹழரத் இமாம் நஸாயீ, ஹழரத் இமாம் ஸுயூதி, ஹழரத் இமாம் அபூ நுஅய்ம் ரஹ்மதுல்லாஹி அலைஹிம் ஆகியோர் கூறுகிறார்கள், "நான் (புனித) கஃபாவின் முத்தவல்லியாக இருக்கிறேன். நான் விரும்பினால் அதில் இருக்கவும் செய்வேன்" என்று ஹழரத் தல்ஹா அவர்கள் கூறினார்கள். ஹழரத் அப்பாஸ் அவர்களோ, "நான் ஜம்ஜம் உடைய முத்தவல்லியாகவும், பாதுகாவலனாகவும் இருக்கிறேன்" என்று கூறினார்.

ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களோ, "நான் (மற்ற) மக்கள் தொழுவதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பாக தொழுதிருக்கிறேன். நான் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் (ஜிஹாத்) புரிந்தவனாகவும் இருக்கிறேன்" என்று கூறினார்கள். அப்போது மேற்கண்ட வசனத்தை வல்ல அல்லாஹ் இறக்கியருளினான். அதன் பிறகு ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அந்த வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.

**வசனம்:**

**الَّذينَ يُنفِقونَ أَموالَهُم بِاللَّيلِ وَالنَّهارِ سِرًّا وَعَلانِيَةً فَلَهُم أَجرُهُم عِندَ رَبِّهِم وَلا خَوفٌ عَلَيهِم وَلا هُم يَحزَنونَ**

"யார் தங்கள் பொருள்களை, (தான தர்மங்களில்) இரவிலும், பகலிலும்; இரகசியமாகவும், பகிரங்கமாகவும் செலவு செய்கிறார்களோ, அவர்களுக்கு அவர்களுடைய இறைவனிடத்தில் நற்கூலி இருக்கிறது; அவர்களுக்கு அச்சமும் இல்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (அத்தியாயம் 2, ஸூரத்துல் பகரா, வசனம் 274)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "இந்த வசனம் ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் பேரில் அருளப்பட்டது. ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் நான்கு திர்ஹம்கள் இருந்தன. அவற்றில் ஒரு திர்ஹமை இரவு நேரத்தில், அல்லாஹ்வின் பாதையில் (தானமாக) கொடுத்தார்கள். ஒரு திர்ஹமை பகலிலும், ஒரு திர்ஹமை மறைவாகவும், ஒரு திர்ஹமை பகிரங்கமாகவும் கொடுத்தார்கள். அப்போது இந்த வசனம் அருளப்பட்டது. (ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 334)

**வசனம்:**

# إِنَّ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصّالِحاتِ سَيَجعَلُ لَهُمُ الرَّحمٰنُ وُدًّا

“நிச்சயமாக எவர்கள் ஈமான் கொண்டு ஸாலிஹான (நல்ல) செயல்களைச் செய்கிறார்களோ அவர்களுக்கு அர்ரஹ்மான் (யாவரின்) நேசத்தையும் ஏற்படுத்துவான்”. (அத்தியாயம் 19, ஸூரத்து மர்யம், வசனம் 96)

ஹழரத் பரா இப்னு ஆஸிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், “அலீயே! நீர் துஆ செய்யும். என்னுடைய இறைவனே! மக்களின் மனங்களிலே என்னுடைய நேசத்தை ஏற்படுத்துவாயாக (என்று துஆ செய்வீராக)” என்று கூறினார்கள். அச்சமயம் வல்ல அல்லாஹ் இந்த வசனத்தை இறக்கியருளினான். இமாம் அஹ்மத், இமாம் புகாரீ, இமாம் அபூ தாவூத், இமாம் அபூ நுஅய்ம், இமாம் ஸஅலபீ, இமாம் இப்னு மர்தூயா, இமாம் இப்னு ஹஜர் ரஹ்மதுல்லாஹி அலைஹிம் ஆகியோர் இதை பதிவு செய்திருக்கிறார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திருப் புதல்வர்களில் ஒருவரான ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேற்கண்ட வசனத்தைப் பற்றிக் கூறும் போது, “எந்த ஒரு முஃமினும் ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வ்ஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மீதும், அஹ்லுல்பைத்தினர் மீதும் நேசம் கொள்ளாமல் இருக்க மாட்டார்” என்று கூறியுள்ளார்கள்.

“மேற்கண்ட வசனம் ஹழரத் அலீ கர்ரால்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பேரில் அருளப்பட்டது” என்று ஹழரத் நக்காஷ் அவர்கள் கூறியுள்ளார். (அல்ஹாபிழ் அஸ்ஸலபீ, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், 336)

**வசனம்:**

# وَمِنَ النّاسِ مَن يَشري نَفسَهُ ابتِغاءَ مَرضاتِ اللَّهِ ۗ وَاللَّهُ رَءوفٌ بِالعِبادِ

“இன்னும் அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை நாடித் தன்னையே தியாகம் செய்பவனும் மனிதர்களில் இருக்கிறான்; அல்லாஹ் (இத்தகைய தன்) நல்லடியார்கள் மீது அளவற்ற அன்புடையவனாக இருக்கின்றான். (அத்தியாயம் 2, ஸூரத்துல் பகரா, வசனம் 207)

ஹுஜ்ஜதுல் இஸ்லாம் ஹழரத் இமாம் கஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது இஹ்யாவு உலூமுத்தீன் என்னும் நூலில் இவ்விதம் கூறியுள்ளார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் செய்த இரவில், ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், அண்ணலாரின் படுக்கையில் படுத்து நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலா ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் மற்றும் ஹழரத் மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம் ஆகியோர் மீது வஹீ இறக்கினான். “நான் உங்கள் இருவரையும் ஒருவருக்கொருவர் சகோதரனாக ஆக்கியுள்ளேன். உங்கள் இருவரில் ஒருவருடைய ஆயுளை அதிகமாகவும் ஆக்கியுள்ளேன். இப்போது உங்களில் ஒருவர் தமது ஆயுளில் ஒரு பகுதியை மற்ற சகோதரனுக்கு கொடுப்பீரா?” என்றும் கேட்டான். ஆனால், அவ்விருவரில் எவரும் தமது ஆயுள் குறைவதை விரும்பவில்லை!

அப்போது அல்லாஹு ஸுப்ஹானஹு வத ஆலா, “நீங்கள் இருவரும் (ஹழரத்) அலீக்கு நிகராக இருக்கவில்லை. நான் (ஹழரத்) அலீயை, எனது ஹபீப் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுடைய சகோதரனாக ஆக்கினேன். அதோ பாருங்கள், அவர் தமது சகோதரனுடைய (அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய) படுக்கையில் படுத்து நிம்மதியாக உறங்குவதை! அவர் தமது உயிரை என்னுடைய ரஸூல் மீது (குர்பான்) தியாகம் செய்தவராக இருக்கிறார். தமது வாழ்க்கையை, சகோதரர் மீது அர்ப்பணித்தவராக இருக்கிறார். நீங்கள் இருவரும் உடனே அங்கு சென்று அவரை, அவருடைய பகைவரை விட்டும் காப்பாற்றுங்கள்” என்று கூறினான்.

உடனே, அவ்விரு மலக்குகளும் பூமிக்கு வந்தார்கள். ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் தலைப்பகுதியிலும், ஹழரத் மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கால் பகுதியிலும் பாதுகாப்பாக நின்றுக் கொண்டார்கள். மேலும், “மிக நன்று அலீ இப்னு அபீ தாலிப் அவர்களே! இறைவனும், இறைவனுடைய மலக்குகளும் உம்மீது பெருமைக் கொள்கிறார்கள்” என்றும் கூறினார்கள். அப்போது வல்ல அல்லாஹ் இந்த வசனத்தை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பேரில் இறக்கி அருளினான். (ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 337)

**வசனம்:**

وَلَسَوفَ يُعطيكَ رَبُّكَ فَتَرضىٰ

“இன்னும், உம்முடைய இறைவன் வெகு சீக்கிரம் உமக்கு (உயர் பதவிகளைக்) கொடுப்பான். அப்பொழுது நீர் திருப்தியடைவீர். (அத்தியாயம் 93, ஸூரத்துள் ளுஹா, வசனம் 5)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரல்யல்லாஹு அன்ஹு அவர்கள் மேற்படி வசனத்துக்கான தஃப்ஸீரில், “அஹ்லுல் பைத்துக்களில் எவரையும் நரகத்தில் புக விடமாட்டேன்” என்று வல்ல அல்லாஹ் உறுதியளித்தான். அதைக் கொண்டு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருப்தியுற்றார்கள்” என்று கூறினார்கள். (இமாம் இப்னு ஜரீர், இமாம் ஸுயூத்தி, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 337)

**வசனம்:**

بَينَهُما بَرزَخٌ لا يَبغِيانِ

يَخرُجُ مِنهُمَا اللُّؤلُؤُ وَالمَرجانُ

“அவனே, இரண்டு கடல்களையும் ஒன்றோடொன்று சந்திக்கச் செய்தான். (வசனம் 20) அவ்விரண்டிலிருந்தும் முத்தும் பவளமும் வெளியாகின்றன. (வசனம் 22). அத்தியாயம் 55, ஸூரத்துர் ரஹ்மான், வசனம் 20 மற்றும் 22.

ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேற்படி வசனங்களின் தஃப்ஸீரில் கூறுகிறார்கள், “வசனம் 20ல் கூறப் பட்டிருக்கும் இரன்டு கடல்கள் என்பது ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்றும் சுவனத்தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோரைக் குறிக்கும். வசனம் 22ல் கூறப்பட்டிருக்கும் முத்தும் பவளமும் என்பது ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரைக் குறிக்கும்” என்று கூறியுள்ளார்கள். (ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் பக்கம் 337)

**வசனம்:**

وَاجعَل لي لِسانَ صِدقٍ فِي الآخِرينَ

“இன்னும் பின் வருபவர்களில் எனக்கு நீ நற்பெயரை ஏற்படுத்துவாயாக. (அத்தியாயம் 26, ஸூரத்துஷ் ஷுஃரா, வசனம் 84)

ஹழரத் இமாம் அபூ அப்துல்லாஹ் ஜஃபர் ஸாதிக் பின் இமாம் முஹம்மத் பாகிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், மேற்படி வசனத்தில் ‘நற்பெயர் ஏற்படுத்துபவர்’ என்று கூறப்பட்டிருப்பது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையே குறிக்கும். மேலும், ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் விலாதத்தை (பிறப்பை) ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முன் வெளிப் படுத்தப்பட்டது. அப்போது அவர்கள், “இறைவா! அவரை என்னுடைய சந்ததிகளிலிருந்து ஆக்குவாயாக! ”என்று வல்ல அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள். வல்ல அல்லாஹ் அவருடைய துஆவை ஏற்று அவ்விதமே செய்தான். (இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 338)

**வசனம்:**

وَالعَصرِ

إِنَّ الإنسانَ لَفي خُسرٍ

إِلَّا الَّذينَ آمَنوا وَعَمِلُوا الصّالِحاتِ وَتَواصَوا بِالحَقِّ وَتَواصَوا بِالصَّبرِ

“காலத்தின் மீது சத்தியமாக! நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கின்றான். ஆயினும், எவர்கள் ஈமான் கொண்டு ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்து, ... (அத்தியாயம் 103, ஸூரத்துல் அஸ்ரி, வசனம் 1 – 3)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள், “மேற்படி வசனத்தில் ‘நிச்சயமாக மனிதன் நஷ்டத்தில் இருக்கின்றான்’ என்று கூறப்பட்டிருப்பது அபூ ஜஹ்லைக் குறிக்கும். ‘எவர்கள் ஈமான் கொண்டு’ என்பதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையும், முஸ்லிம்களையும் குறிக்கும்” என்று கூறியுள்ளார்கள். (அபூ நுஅய்ம், இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 338)

**வசனம்:**

وَالنَّجمِ إِذا هَوىٰ

ما ضَلَّ صاحِبُكُم وَما غَوىٰ

وَما يَنطِقُ عَنِ الهَوىٰ

إِن هُوَ إِلّا وَحيٌ يوحىٰ

"விழுகின்ற நட்சத்திரத்தின் மீது சத்தியமாக. உங்கள் தோழர் வழி கெட்டு விடவுமில்லை; அவர் தவறான வழியில் செல்லவுமில்லை. அவர் தம் இச்சைப்படி எதையும் (எதையும்) பேசுவதில்லை. அது அவருக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டதே அன்றி வேறில்லை. அத்தியாயம் 53, ஸூரத்துந் நஜ்ம், வசனம் 1 – 4.

"அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கதவைத் தவிர்த்து, அனைத்து ஸஹாபாக்களின் (ரிழ்வானுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன்) கதவுகளை அடைத்துவிடும்படி உத்தரவிட்டபோது, ஸய்யதினா ஹழரத் ஹம்ஸா பின் அப்துல் முத்தலிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தார்கள். அவர்களது கண்களில் கண்ணீர் வழிந்துக் கொண்டிருந்தது. அவர்கள், "யா ரஸூலுல்லாஹ்! தாங்கள் இந்த சித்தப்பாவை புறந்தள்ளிவிட்டு, சித்தப்பாவின் பிள்ளையை உள்ளே சேர்த்துக் கொண்டீர்களே!" என்று கூறினார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள், "சிறிய தந்தையே! நான் காரியஸ்தனாக இருக்கிறேன். எனக்கு இந்த காரியத்தில் எந்த ஒரு அதிகாரமும் இல்லை. இறைவன் மீது ஆணையாக! நான் கதவை அடைக்கவுமில்லை, கதவை திறக்கவுமில்லை. நான் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களை உள்ளே அனுமதிக்கவுமில்லை. அவரை அல்லாஹ்வே (உள்ளே) அனுமதித்தான்" என்று கூறினார்கள். மேலும், மேற்கண்ட வசனத்தையும் ஓதிக் காண்பித்தார்கள். (ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 338)

**வசனம்:**

وَنَزَعنا ما في صُدورِهِم مِن غِلٍّ إِخوانًا عَلىٰ سُرُرٍ مُتَقابِلينَ

“சகோதரர்களாக ஒருவரையொருவர் முன்னோக்கி அரியாசனங்களில் அமர்ந்திருப்பார்கள். அத்தியாயம் 15, ஸூரத்துல் ஹிஜ்ர், வசனம் 47.

ஹழரத் ஸைத் இப்னு அபீ அவ்பா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நீர் என்னுடன் என்னுடைய வீட்டிலும், கியாமத்து நாளில் சுவனத்தில் என்னுடைய திருப் புதல்வி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுடனும் சேர்ந்திருப்பீர்கள். நீர் என்னுடைய சகோதரரும், தோழரும் ஆவீர்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கூறிவிட்டு, மேற்கன்ட வசனத்தை ஓதினார்கள். (இமாம் அஹ்மத், ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 339)

**வசனம்:**

وَأَقِيمُوا الصَّلَاةَ وَآتُوا الزَّكَاةَ وَاركَعوا مَعَ الرّاكِعينَ

“தொழுகையை கடைப் பிடியுங்கள்; ஜகாத்தையும் (ஒழுங்காகக்) கொடுத்து வாருங்கள்; ருகூஃ செய்வோரோடு சேர்ந்து நீங்களும் ருகூஃ செய்யுங்கள். அத்தியாயம் 2, ஸூரத்துல் பகரா, வசனம் 43.

ஹழரத் முஜாஹித் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கிறர்கள். “இந்த வசனம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேரிலும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் பேரிலும் தனிப்பட்ட முறையில் அருளப்பட்டதாகும். ஏனெனில், இவ்விருவரும்தான் முதன் முதலாக தொழுகையை தொழுதவர்கள். குனிந்து ருகூஃவும் செய்தவர்கள்”. (இமாம் தப்ரானீ, இமாம் அபூ நுஅய்ம், இமாம் இப்னுல் ஜவ்ஸி, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 339)

**வசனம்:**

يا أَيُّهَا الَّذينَ آمَنوا توبوا إِلَى اللَّهِ تَوبَةً نَصوحًا عَسىٰ رَبُّكُم أَن يُكَفِّرَ عَنكُم سَيِّئَاتِكُم وَيُدخِلَكُم جَنّاتٍ تَجري مِن تَحتِهَا الأَنهارُ يَومَ لا يُخزِي اللَّهُ النَّبِيَّ وَالَّذينَ آمَنوا مَعَهُ ۖ نورُهُم يَسعىٰ بَينَ أَيديهِم وَبِأَيمانِهِم يَقولونَ رَبَّنا أَتمِم لَنا نورَنا وَاغفِر لَنا ۖ إِنَّكَ عَلىٰ كُلِّ شَيءٍ قَديرٌ

“(தன்) நபியையும் அவர்களுடன் ஈமான் கொண்டார்களே அவர்களையும் அந்நாளில் அல்லாஹ் இழிவு படுத்த மாட்டான்”. (அத்தியாயம் 66, ஸூரத்துத் தஹ்ரீம், வசனம் 8)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ‘கலீலுல்லாஹ்’வாக இருப்பதால், கியாமத்து நாளில் முதலாவதாக சுவனத்து உடைகளை அணிந்துக் கொண்டு வெளிப்படுவார்கள். பிறகு நான். (அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்) எங்கள் இருவருக்கும் இடையில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் இருப்பார். சுவனத்தில் எங்களுடன் உலா வருவார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். பிறகு மேற்கண்ட வசனத்தை ஓதினார்கள். (இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 341)

**வசனம்:**

فِي مَقعَدِ صِدقٍ عِندَ مَليكٍ مُقتَدِرٍ

“உண்மையான இருக்கையில் சர்வ வல்லமையுடைய அரசனின் (அருள்) அண்மையில் இருப்பார்கள். அத்தியாயம் 54, ஸூரத்துல் கமர், வசனம் 55.

ஹழரத் அபூ துஜானா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், “யா ரஸூலுல்லாஹ்! தாங்கள் சுவனத்தில் பிரவேசிப்பதற்கு முன்பாக, சுவனம் மற்ற நபிமார்களுக்கு விலக்கப்பட்டதாக இருக்கும். அதைப்போலவே, தங்களுடைய உம்மத்துக்கள் சுவனத்தில் பிரவேசிக்காதவரை மற்ற உம்மத்துகளும் சுவனத்தில் பிரவேசிக்க மாட்டார்கள். இதை தாங்கள் எங்களுக்கு அறிவித்துள்ளீர்கள்” என்று கூறினேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “அபூ துஜானாவே! நீர் உண்மையே கூறினீர்” என்று கூறினார்கள். பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை நோக்கி, “மகிழ்ச்சி கொள்ளும் யா அலீயே! எந்த அடியார் உம்மீது நேசம் கொண்டவராக இருக்கிறாரோ, அவரை கியாமத்து நாளில் வல்ல அல்லாஹ் நம்முடன் சேர்த்து அவரையும் எழுப்புவான்” என்று கூறினார்கள். பிறகு மேற்கண்ட வசனத்தை ஓதினார்கள். (இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 345)

**வசனம்:**

الَّذينَ آمَنوا وَعَمِلُوا الصّالِحاتِ طوبىٰ لَهُم وَحُسنُ مَآبٍ

“எவர்கள் ஈமான் கொண்டு நற்கருமங்கள் புரிகின்றார்களோ, அவர்களுக்கு (எல்லா) நற்பாக்கியங்களும் உண்டு; இன்னும் அழகிய இருப்பிடமும் உண்டு. அத்தியாயம் 13, ஸூரத்துர் ரஃது, வசனம் 29.

ஹழரத் முஹம்மத் இப்னு ஸீரீன் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அறிவிக்கிறார்கள், “இந்த வசனத்தில் ‘தூபா’ என கூறப்பட்டிருப்பது, சுவனத்தில் உள்ள ஒரு மரமாகும். இந்த மரத்தின் வேர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வீட்டில் இருந்து ஆரம்ப மாகிறது. சுவனத்தில் இந்த மரத்தின் கிளைகள் இல்லாத எந்த ஒரு வீடும் இருக்காது”. (இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 345)

**வசனம்:**

أَكَانَ لِلنَّاسِ عَجَبًا أَنْ أَوْحَيْنَا إِلَىٰ رَجُلٍ مِنْهُمْ أَنْ أَنْذِرِ النَّاسَ وَبَشِّرِ الَّذِينَ آمَنُوا أَنَّ لَهُمْ قَدَمَ صِدْقٍ عِنْدَ رَبِّهِمْ ۗ قَالَ الْكَافِرُونَ إِنَّ هَٰذَا لَسَاحِرٌ مُبِينٌ

“இறைவனிடத்தில் நிச்சயமாக பெரும் பதவி கிடைக்கும் என்று நன்மாராயம் கூறுவதற்காகவும்” அத்தியாயம் 10, ஸூரத்து யூனுஸ், வசனம் 2.

ஹழரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “இந்த வசனம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் மேன்மையை வெளிப்படுத்தும் வகையில் அருளப் பட்டுள்ளது. இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 346

**வசனம்:**

۞ وَلَمَّا ضُرِبَ ابْنُ مَرْيَمَ مَثَلًا إِذَا قَوْمُكَ مِنْهُ يَصِدُّونَ

“இன்னும் மர்யமுடைய மகன் உதாரணமாகக் கூறப்பட்ட போது உம்முடைய சமூகத்தார் (பரிகசித்து) ஆர்ப்பரித்தார்கள்” அத்தியாயம் 43, ஸூரத்துஜ் ஜுக்ருஃப், வசனம் 57.

ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள்,”யா அலீ! உம்மில் ஹழரத் ஈஸா

அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உதாரணம் இருக்கிறது. ஒரு கூட்டத்தார் ஹழரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மீது தீவிரமாக அன்பு கொண்டார்கள். அதன் காரணமாகவே அவர்கள் அழிவைக் கண்டார்கள். ஒரு கூட்டத்தார் அவர்கள் மீது பகைமைக் கொண்டார்கள். அதன் காரணமாகவே அவர்களும் அழிவைக் கண்டார்கள். எனவேதான் முனாஃபிக்குகள் (நயவஞ்சகர்கள்) இந்த உதாரணத்தை விரும்புவதில்லை" என்று கூறினார்கள். அப்போது மேற்கண்ட வசனம் அருளப்பட்டது. (இமாம் ஹாகிம், அபூ யஃலா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 346)

**வசனம்:**

## وَأَذانٌ مِنَ اللَّهِ وَرَسولِهِ إِلَى النّاسِ يَومَ الحَجِّ الأَكبَرِ أَنَّ اللَّهَ بَريءٌ مِنَ المُشرِكينَ ۙ وَرَسولُهُ ۚ فَإِن تُبتُم فَهُوَ خَيرٌ لَكُم ۖ وَإِن تَوَلَّيتُم فَاعلَموا أَنَّكُم غَيرُ مُعجِزِي اللَّهِ ۗ وَبَشِّرِ الَّذينَ كَفَروا بِعَذابٍ أَليمٍ

"அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் முஷ்ரிக்குகளுடன் (செய்திருந்த உடன்படிக்கையை) விட்டும் நிச்சயமாக விலகிக் கொண்டார்கள் என்பதை ஹஜ்ஜுல் அக்பர் (மாபெரும் ஹஜ்ஜுடைய) நாளில் மனிதர்களுக்கு அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் வெளிப் படையாக அறிவிக்கின்றனர்; (அத்தியாயம் 9, ஸூரத்துத் தவ்பா, வசனம் 3)

'பராஆ' (அத்தியாயம் ஒன்பது) ஸூரத்துத் தவ்பாவில் தபூக் போரைப் பற்றிய பல்வேறு வசனங்கள் அருளப்பட்டன. அவற்றில் சில போருக்கு முன்பும், சில போரின் போதும், சில போர் முடிந்த போதும் அருளப்பட்டன. திருக்குர்ஆனில் "ஈமான் கொண்டவர்களே! நிச்சயமாக இணை வைத்து வணங்குவோர் அசுத்தமானவர்களே; ஆதலால், அவர்கள் இவ்வாண்டிற்குப் பிறகு சங்கை மிகுந்த இப்பள்ளியை (கஃபத்துல்லாஹ்வை) அவர்கள் நெருங்கக்கூடாது" என்னும் 28வது வசனம் அருளப் பட்டதையும், நிர்வாணமாக தவாஃப் செய்யக் கூடாது என்பதையும் அரஃபாவில் கூடும் மக்களிடையே ஓதிக் காட்டிட ஹழரத் அபூபக்ர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களை அமீருல் ஹஜ்ஜாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.

அவர்கள் புறப்பட்டுச் சென்ற பிறகு ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, 'ஒப்பந்தங்கள்

எழுதப்படுவதைப் போலவே, அவற்றை நீக்கும் பொழுதும் அல்லது மாற்றும் பொழுதும் அவை ஒப்பந்தம் செய்தவராலோ அல்லது அவருக்கு நெருங்கிய உறவினராலோதான் அறிவிக்கப்பட வேண்டும்' என்பதை நினைவு படுத்தினார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை அனுப்பி அரஃபாவில் அவ்வசனங்களை ஓதிக்காட்டும்படி கூறினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் நபிபெருமானாரின் தூதராகச் சென்று, ஒன்பதாவது அத்தியாயத்தை மக்களுக்கு ஓதிக் காண்பித்தார்கள்.

**வசனம்:**

**أَحَسِبَ النَّاسُ أَن يُتْرَكُوا أَن يَقولوا آمَنَّا وَهُم لا يُفْتَنونَ**

"நாங்கள் ஈமான் கொண்டிருக்கின்றோம்" என்று கூறுவதனால் (மட்டும்) அவர்கள் சோதிக்கப்படாமல் விட்டு விடப்படுவார்கள் என்று மனிதர்கள் எண்ணிக் கொண்டார்களா?" அத்தியாயம் 29, ஸூரத்துல் அன்கபூத், வசனம் 2.

ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம், "யா ரஸூலுல்லாஹ்! இது எப்படிப்பட்ட சோதனை?"என்று கேட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "உமது காரணத்தால் மக்கள் சோதிக்கப் படுவார்கள். நீர் அவர்களுடன் சண்டை போடுவீர்கள். எனவே சண்டை போட தயாராக இருங்கள்" என்று கூறினார்கள். இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 348.

**வசனம்:**

**إِلَّا الَّذينَ آمَنوا وَعَمِلُوا الصّالِحاتِ وَتَواصَوا بِالحَقِّ وَتَواصَوا بِالصَّبرِ**

"மேலும் பொறுமையைக் கொண்டும் ஒருவருக் கொருவர் உபதேசிக்கிறார்களோ அவர்களைத் தவிர (அவர்கள் நஷ்டத்திலில்லை) அத்தியாயம் 103, ஸூரத்துல் அஸ்ரி, வசனம் 3.

"மேற்கண்ட வசனம் ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் மேன்மையை வெளிப்படுத்தும் விதமாக அருளப்பட்டுள்ளது என்று ஹழரத் இப்னு

அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள். இப்னு மர்தூயா, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 348.

**வசனம்:**

وَيَقولُ الَّذينَ كَفَروا لَستَ مُرسَلًا ۚ قُل كَفىٰ بِاللَّهِ شَهيدًا بَيني وَبَينَكُم وَمَن عِندَهُ عِلمُ الكِتابِ

“எனக்கும் உங்களுக்கும் இடையே சாட்சியாக இருக்க அல்லாஹ்வும் வேதஞானம் யாரிடமிருக்கிறதோ அவர்களும் போதுமானவர்கள்” என்று நீர் கூறிவிடுவீராக. அத்தியாயம் 13, ஸூரத்துர் ரஃது, வசனம் 43.

ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “இந்த வசனத்தில் ‘வேதஞானம் யாரிடமிருக்கிறதோ’ என்று குறிப்பிட்டுக் கூறியிருப்பது, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைத்தான்! (அபூ நுஅய்ம், ஸஅலபி, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 348)

**வசனம்:**

يا أَيُّهَا النَّبِيُّ حَسبُكَ اللَّهُ وَمَنِ اتَّبَعَكَ مِنَ المُؤمِنينَ

“நபியே! உமக்கும், முஃமின்களில் உம்மைப் பின்பற்று வோருக்கும் அல்லாஹ்வே போதுமானவன்”. அத்தியாயம் 8, ஸூரத்துல் அன்ஃபால், வசனம் 64.

ஹழரத் இமாம் முஹம்மத் பாகிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், மேற்படி வசனத்துக்கான தஃப்ஸீரில்,”இந்த வசனம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் பேரில் அருளப்பட்டது” என்று கூறியுள்ளார்கள்.

**வசனம்:**

اَمْ نَجْعَلُ الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ كَالْمُفْسِدِيْنَ فِى الْاَرْض اَمْ نَجْعَلُ الْمُتَّقِيْنَ كَالْفُجَّارِ

“ஈமான் கொண்டு (ஸாலிஹான) நல்ல அமல்கள் செய்வோரை பூமியில் குழப்பம் செய்வோரைப் போல நாம் ஆக்கிவிடுவோமா?

அல்லது, பயபக்தியுடையோரைப் பாவிகளைப் போல் நாம் ஆக்கிவிடுவோமா?” அத்தியாயம் 38, ஸூரத்துஸ் ஸாத், வசனம் 28.

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேற்படி வசனத்திற்கான தஃப்ஸீரில் கீழ்கண்டபடி கூறியுள்ளார்கள். “இந்த வசனத்தில் நல்ல அமல் செய்வோர், பயபக்தியுடையோர் என்று கூறியிருப்பது, பத்ரு போரில் கலந்துக் கொண்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், ஹழரத் ஹம்ஸா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் உபைதா இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரைக் குறிக்கும்.

குழப்பம் செய்வோர் மற்றும் பாவிகள் என்று கூறப்பட்டிருப்பது, காஃபிர்கள் சார்பாக பத்ரு போரில் கலந்துக் கொண்ட உத்பா, ஷைபா, வலீத் ஆகியோரைக் குறிக்கும் என்று கூறியுள்ளார்கள். (இமாம் இப்னு அஸாகிர், இமாம் ஸுயூத்தி, ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 349)

## நபி மொழிகள்

### முஃமின்களின் மவ்லா:

مَنْ كُنْتَ مَوْلَاهُ فَعَلِيٌّ مَوْلَاهُ

ஸவூதி அரேபியாவில் ஜுஹ்ஃபா நகருக்கு அருகில் இருக்கும் ஒரு இடமே ‘கதீர் கும்’ ஆகும். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரீ 11, துல் ஹஜ்ஜா மாதம், பதினெட்டாம் நாள், ஹஜ்ஜதுல் விதாவை முடித்துக் கொண்டு திரும்பும் பொழுது, கதீர் கும் என்னும் அந்த இடத்தில் ஒரு சொற்பொழிவு ஆற்றினார்கள். அச்சமயம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திருக் கரத்தைப் பிடித்து மேலே உயர்த்தி, “மன் குன்து மவ்லாஹு ஃப அலிய்யுன் மவ்லாஹு” (நான் யாருக்கு மவ்லாவோ அவர்களுக்கு அலீயும் மவ்லா ஆவார்) என்று கூறினார்கள். அது பற்றி ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள்,’கஸாயிஸ் அலீ’ என்னும் நூலில் கீழ்கண்டபடி கூறியுள்ளார்கள்.

ஹழரத் ஆயிஷா பின்தே ஸஅத் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் தமது தந்தை கூற தான் செவியுற்றதாகக் கூறுகிறார்கள்: எனது தந்தை கூறினார்கள், “நான் ஜுஹ்ஃபா நாளில் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறக் கேட்டேன், இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரம்ல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கரத்தைப்

பற்றியவர்களாக குத்பா பேருரை நிகழ்த்தினார்கள். ஹம்து ஸனாவை ஓதிய பிறகு, "ஜனங்களே! நான் உங்களுடைய வலீ (பொறுப்பாளர்) ஆக இருக்கிறேன் (என்று கூறினார்கள்.) ஜனங்கள்,"இறைத்தூதர் அவர்களே! தாங்கள் உண்மையே கூறினீர்கள்" என்றனர். பிறகு இறைத்தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் கரத்தைப் பற்றி உயர்த்தியபடி, "இவர் என்னுடைய வலீ (பொறுப்பாளர் ஆவார்! எனக்காக என்னுடைய கடனை அடைப்பார். எவர் இவருடன் நட்பு கொள்கிறாரோ, நான் அவருடைய நண்பனாவேன். எவர் இவருடன் பகைமை கொள்கிறாரோ, நான் அவருக்கு பகைவனாவேன்" என்று கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில், ஹழரத் ஜைத் இப்னு அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், 'அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹஜ்ஜதுல் விதாவை முடித்துக் கொண்டு திரும்பும் வழியில் 'கதீர் கும்' என்னும் இடத்தில் தங்கினார்கள். மரத்தின் நிழலில் இடத்தை சுத்தம் செய்யவும் சொன்னார்கள். தோழர்கள் அவ்விதமே சுத்தம் செய்தார்கள். பிறகு அங்கு கூடியிருந்தவர் களிடையே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் சொற்பொழிவாற்றினார்கள். "அண்மையில் எனக்கு (மரண) அழைப்பு வரவிருப்பதாக நான் உணர்கிறேன். அதை நான் ஏற்றுக் கொள்வேன். நான் உங்களுக்கிடையே முக்கியத்துவம் வாய்ந்த இரண்டு விஷயங்களை விட்டுச் செல்கிறேன். அவை ஒன்று, மற்றொன்றைவிட முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். ஒன்று, அல்லாஹ்வின் திருவேதமாகும். இரண்டாவது, எனது குடும்பத்தார்களாகிய அஹ்லுல் பைத்துகளாகும். எனக்குப் பிறகு இந்த இரண்டைக் கொண்டும் நீங்கள் எந்த அளவு இணக்கம் கொள்கிறீர்கள் என்பதை இனிமேல்தான் பார்க்க வேண்டும்" என்று கூறினார்கள்.

மேலும், ஹவ்லுல் கவ்ஸரில் என்னை அடையும் வரை இவ்விரண்டும் ஒன்றை விட்டு ஒன்று பிரியாது. நிச்சயமாக அல்லாஹ் என்னுடைய மவ்லாவாக இருக்கிறான். நான் ஒவ்வொரு முஃமினுக்கும் ஒலியாக இருக்கிறேன்" என்று கூறிய பிறகு, ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்களின் கரத்தைப் பிடித்தபடி, "எவருக்கு நான் ஒலியாக இருக்கிறேனோ, அவருக்கு இவரும் ஒலியாக இருக்கிறார். யா அல்லாஹ்! எவர் இவர் மீது நேசம் கொள்கிறாரோ, அவர் மீது நீயும் நேசம் கொள்வாயாக. எவர் இவர் மீது பகைமை கொள்கிறாரோ, அவர் மீது நீயும் பகைமை கொள்வாயாக" என்று துஆ செய்தார்கள். இதை ஹழரத் இமாம் நஸாயீ, ஹழரத் இமாம் ஹாகிம், ஹழரத் இமாம் தப்ரானீ ரஹ்மதுல்லாஹி அலைஹிம் பதிவு செய்திருக்கிறார்கள். ஹழரத் இமாம் ஹாகிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இதை ஸஹீஹ் என்று கூறியுள்ளார்கள். "எனது

ஷைக் ஹழரத் அபூ அப்துல்லாஹ் தஹபீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இந்த ஹதீஸ் ஸஹீஹ்" என்று கூறியதாக ஹழரத் இமாம் இப்னு கதீர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஹழரத் ஸஅத் பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "எவருக்கு நான் மவ்லாவாக இருக்கிறேனோ, அவருக்கு அலீயும் மவ்லா ஆவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூற நான் செவியுற்றேன். "நீர் எம்மிடம் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இருந்த இடத்தில் இருக்கின்றீர் என்பது உமக்கு திருப்தி அளிக்கவில்லையா? அறிந்து கொள்ளும், எனக்குப் பிறகு யாதொரு நபியும் இல்லை" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பற்றி அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதையும் நான் செவியுற்றேன். கைபர் போரின் போது, "நாளை நான் கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதையும் நான் செவியுற்றேன்". இதை ஹழரத் இமாம் இப்னு மாஜா, ஹழரத் இமாம் நஸாயீ, ஹழரத் இமாம் இப்னு அபீ ஷைபா ரஹ்மதுல்லாஹி அலைஹிம் ஆகியோர் பதிவு செய்திருக்கிறார்கள்.

ஹழரத் இம்ரான் பின் ஹஸீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அலீ என்னிலிருந்து இருக்கிறார். நான் அவரிலிருந்து இருக்கிறேன். எனக்குப் பிறகு அவர் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஒலி (பொறுப்பாளர், நேசர்) ஆக இருக்கிறார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களுடன் யமன் போர் ஒன்றில் கலந்துக் கொண்டேன். அப்போது சில விஷயங்களில் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பேரில்) எனக்கு சில மனக் குறைகள் ஏற்பட்டன. நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் திரும்பி வந்தபோது, அண்ணலாரிடம் அது பற்றி கூறி குறைபட்டுக் கொண்டேன். என் குறையைக் கேட்டவுடன் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முகம் (சினத்தால்) நிறம் மாறியது. பிறகு, "புரைதாவே! முஃமின்களின் ஆத்மாக்களுக்கு நெருக்கமானவனாக நான் இல்லையா?" என்று கேட்டார்கள். அதற்கு நான், நிச்சயமாக (தாங்கள் முஃமின்களின் ஆத்மாக்களுக்கு மிக நெருக்கமானவர்களாகவே) இருக்கிறீர்கள்" என்று கூறினேன். உடனே, "எவருக்கு நான் மவ்லாவாக

(பொறுப்பாளனாக) இருக்கிறேனோ, அவருக்கு அலீயும் மவ்லாவாக இருக்கிறார்" என்று கூறினார்கள். இதை ஹழரத் இமாம் அஹ்மத், ஹழரத் இமாம் நஸாயீ, ஹழரத் இமாம் இப்னு அபீ ஷைபா ஆகியோர் அறிவித்திருக்கிறார்கள். ஹழரத் இமாம் ஹாகிம் அவர்கள் இதை ஸஹீஹ் என்பதாக கூறியுள்ளார்கள்.

ஹழரத் ரியாஹ் இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "ஒரு ஆட்பேர்க் குழு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைச் சந்தித்து, "எங்களின் மவ்லாவே! தங்கள் மீது சாந்தி உண்டாவதாக!" என்று கூறினார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "நான் எவ்விதம் உங்களுக்கு மவ்லாவாக இருக்கிறேன்? நீங்களோ எவருடைய மேலாண்மையையும் சீக்கிரத்தில் ஒப்புக் கொள்ளாத அரப் நாட்டவராக இருக்கிறீர்களே!" என்று கூறினார்கள்.

அதற்கு அவர்கள், "நாங்கள் கதீர் கும் நாளன்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "எவருக்கு நான் மவ்லாவாக இருக்கிறேனோ, நிச்சயமாக அவர்களுக்கு இவரும் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும்) மவ்லாவாக இருக்கிறார்" என்று கூறியதை நாங்கள் செவியேற்றோம்" என்று கூறினார்கள். பிறகு, அவர்கள் அங்கிருந்து புறப்பட்டுச் சென்ற போது ஹழரத் ரியாஹ் இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அவர்களைப் பின் தொடர்ந்து சென்று,"நீங்கள் எல்லோரும் யார்?" என்று விசாரித்தார்கள். அதற்கு அவர்கள், "நாங்கள், அன்ஸார் குழுவைச் சேர்ந்தவர்கள். எங்களில் ஹழரத் அபூ அய்யூப் அன்ஸாரி அவர்களும் இருக்கிறார்கள்" என்று கூறினார்கள். (அஹ்மது, தப்ரானீ, இப்னு அஸாகிர்)

ஹழரத் ஸஅத் பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், முஆவியா ரலி அவர்கள் ஹழரத் ஸஅத் பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அமீராக நியமித்தார். அப்போது முஆவியா ரலி அவர்கள், "ஸஅதே! நீர் அபூதுராப் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களை பழித்துரைப்பதை விட்டும் உம்மை தடுப்பது எது?" என்று கேட்டார். அதற்கு ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய மூன்று விஷயங்கள் எனது நினைவில் உள்ளன. எனவே, நான் ஒருபோதும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை பழித்துரைக்கவே மாட்டேன். அந்த மூன்று விஷயங்களில் ஒன்றாவது என்னில் அமைந்திருக்குமேயானால், அது எனக்கு சிவப்பு ஒட்டகங்களை விட உவப்பானதாக இருந்திருக்கும்.

ஒரு போரின் போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அவர்கள் விட்டு விட்டுச் சென்ற போது, “தாங்கள் என்னை பெண்களிடமும், பிள்ளைகளிடமும் விட்டுச் செல்கிறீர்களா?” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கேட்டார்கள். அப்போது, "நீர் எம்மிடம் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இருந்த இடத்தில் இருக்கின்றீர் என்பது உமக்கு திருப்தி அளிக்கவில்லையா? அறிந்து கொள்ளும், எனக்குப் பிறகு யாதொரு நபியும் இல்லை" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதை நான் செவியேற்றுள்ளேன்.

இரண்டாவதாக, கைபர் போரின் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று கூறினார்கள். நாங்கள் அனைவரும் அந்தக் கொடி தத்தமக்கே கிடைக்க வேண்டும் என்று விரும்பி, எங்கள் கழுத்துக்களை உயர்த்தி கொடியையே பார்த்துக் கொண்டிருந்தோம். ஆனால், காலையில் “அலீ இப்னு அபீதாலிப் (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள் எங்கே?” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் விசாரித்தார்கள்.

“அவர்கள் கண் வலியால் அவதிபட்டுக் கொண்டிருக்கிறார்கள்” என்று சக தோழர்கள் கூறினார்கள். “அவரை எம்மிடம் அழைத்து வாருங்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அழைத்து வரப்பட்ட போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தமது புனிதமான உமிழ்நீரை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் கண்களில் தடவினார்கள். உடனே, கண்வலி முற்றிலுமாக குணமானது. அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கொடியை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் கொடுத்தார்கள்.

மூன்றாவதாக, “(நபியின்) வீட்டையுடையவர்களே! உங்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிடவே அல்லாஹ் நாடுகிறான்” என்னும் அத்தியாயம் 33, ஸூரத்துல் அஹ்ஜாப், வசனம் 33, அருளப்பட்ட போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ, சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா, ஹழரத் இமாம் ஹஸன், ஹழரத் இமாம் ஹுஸைன் அலைஹிமுஸ் ஸலாம் ஆகியோரை அழைத்து, “யா அல்லாஹ்! இவர்கள் தாம் என்னுடைய அஹ்லுல் பைத்கள்” (என்று கூறினார்கள். (எனவே நான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ

வஜ்ஹஹூல் கரீம் அவர்களை பழிக்கமாட்டேன் என்று ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள்.)

ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களே அறிவித்துள்ள மற்றொரு ஹதீஸில் மூன்றாவதாக, “எவருக்கு நான் மவ்லாவாக இருக்கிறேனோ, அவருக்கு அலீயும் மவ்லாவாக இருக்கிறார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூற நான் செயுற்றேன் என்று கூறியுள்ளார்கள். இந்த இரண்டு ஹதீஸ்களையும், ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது கஸாயிஸ் அலீ என்னும் நூலில் பதிவு செய்திருக்கிறார்கள்.

மற்றொரு அறிவிப்பில், ஹழரத் அம்ர் பின் மைமூன் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாக கூறுகிறார்கள், “எவருக்கு நான் மவ்லாவாக இருக்கிறேனோ, நிச்சயமாக அவருக்கு அலீயும் மவ்லாவாக இருக்கிறார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இதை ஹழரத் இமாம் அஹ்மத், ஹழரத் இமாம் ஹாகிம், ஹழரத் இமாம் தப்ரானீ, ஹழரத் இமாம் இப்னு அஸாகிர் ரஹ்மதுல்லாஹி அலைஹிம் ஆகியோர் பதிவு செய்திருக்கிறார்கள். “மன் குன்து மவ்லாஹூ ஃப அலிய்யுன் மவ்லாஹூ” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியது பற்றி தொன்னூற்று எட்டு ஸஹாபா பெருமக்கள் ஹதீஸ்களை அறிவித்திருக்கிறார்கள்.

## ஹழரத் அலீ (கரம்) அவர்களை திட்டாதீர்:

ஹழரத் அபீ அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான் உம்முல் முஃமினீன் ஹழரத் உம்மு ஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் சமுகத்தில் ஆஜரானேன். அப்போது அவர்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை யாராவது திட்டி, பழிக்க முடியுமா?” என்று கேட்டார்கள். நான், “ஸுப்ஹானல்லாஹ்” என்றோ, அல்லது “அல்லாஹ் அவரை பாதுகாப்பானாக!” என்றோ கூறினேன். அப்போது உம்முல் முஃமினீன் ஹழரத் உம்மு ஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், “எவர் அலீயை திட்டுகிறாரோ, அல்லது பழிக்கிறாரோ அவர் என்னையே திட்டுகிறார், அல்லது என்னையே பழிக்கிறார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதை நான் செவியுற்றிருக்கின்றேன்” என்று கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 96)

ஹழரத் காலித் இப்னு உர்பதா அவர்கள் அறிவிக்கிறார்கள், “நான் ஹழரத் ஸஅத் இப்னு மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை திரு மதீனாவில் சந்தித்தேன். அப்போது ஹழரத் ஸஅத்

இப்னு மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் என்னிடம், “நீர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை திட்டுவதாக செய்தி அறிகிறேனே (உண்மையா?)” என்று கேட்டார்கள். அதற்கு நான், ”உண்மைதான். நாங்கள் அவ்விதம் தான் செய்கிறோம்” என்று கூறினேன். அப்போது ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ‘எவர் அலீயை திட்டுகிறாரோ, அவர் என்னையே திட்டுகிறார்’ என்று கூறியதை கேட்டிருக்கிறேன். அதை நீர் அறிந்திருக்கவில்லை போலும்!” என்று கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 97)

ஹழரத் உர்வா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஒருவர் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் முன்னிலையில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை பழித்துப் பேசினார். உடனே ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அவனுடைய கையைப் பிடித்து, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ரவ்லா ஷரீபுக்கு அழைத்துச் சென்றார்கள். பிறகு அவனிடம், “நீ இவரை அறிவாயா? இவர்தான் அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்! எவரை நீ பழித்துப் பேசினாயோ, அவர் இவருடைய மருமகர் ஆவார். சகோதரரும் ஆவார். இனி நீ ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை நினைவு கூர்ந்தால், நல்லவிதமாக நினைவு கூறு. எக்காரணம் கொண்டும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை தொந்தரை செய்யாதே! அவ்விதம் செய்தால், அது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தொந்தரை செய்தது போலாகும்” என்று கூறினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 13)

ஹழரத் கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஒருவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை திட்டினான். அதை செவிமடுத்த ஹழரத் ஸஅது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “யா அல்லாஹ்! மேன்மை மிகுந்த உன்னுடைய நேசரை (வலியை) இந்த மனிதர் திட்டியிருக்கிறார். இந்த கூட்டம் கலையும் முன்பாக அனைவரும் உன்னுடைய வல்லமையை காணும்படி செய்வாயாக!” என்று துஆ செய்தார்கள். உடனே, அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா, கூட்டம் கலையும் முன்பாகவே தனது வல்லமையை வெளிப்படுத்தினான். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை திட்டிய அந்த மனிதனின் குதிரை பூமியில் புதைந்தது! அதனால் மிரண்ட குதிரை அந்த மனிதனை தூக்கி தூர வீசியது. பாறைகள் மீது போய் விழுந்த அவனது தலை சுக்கு நூறாய் சிதறியது. அதனால் அவன் அங்கேயே செத்துப் போனான்! (ஹாகிம், கஸாயிஸுல் குப்ரா பா 2, பக் 330)

## ஹழரத் அலீ (கரம்) அவர்களை பகைக்காதீர்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "எவன் வித்துக்களைப் பிளந்தானோ, உயிர்களைப் படைத்தானோ அவன் மீது ஆணையாக! உம்மீ நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் (பின்வருமாறு) என்னிடம் அறுதியிட்டுக் கூறினார்கள். "இறை நம்பிக்கையாளரைத் தவிர வேறெவரும் என்னை (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை) நேசிக்க மாட்டார்கள். நயவஞ்சகனைத் தவிர வேறெவரும் என்னை (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை) வெறுக்க மாட்டார்கள்". (என்று கூறினார்கள்) (முஸ்லிம்)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் என்னிடம், "அலீயே! முஃமின்கள் உம்முடன் நேசம் கொள்வார்கள். முனாபிக்குகள் (நயவஞ்சகர்கள்) உம்முடன் பகைமை கொள்வார்கள்" என்று வஸீயத் செய்தார்கள்.

ஹழரத் இமாம் இப்னு அதீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் என்னைப் பற்றி, "(அலீயே!) உம்முடன் முஃமின்கள் அன்பு கொள்வார்கள். முனாபிக்குகள் உம்முடன் பகைமைக் கொள்வார்கள்" என்று கூறினார்கள் என ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 105)

ஹழரத் ஸஅத் பின் அபீ வக்காஸ் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "எவர் ஹழரத் அலீ அவர்களுக்கு தொந்தரை செய்தாரோ, அவர் எனக்கு தொந்தரை செய்தவராவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மூன்று முறை திரும்ப திரும்பச் சொன்னார்கள். . (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ', பக்கம் 64)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா பனீ இஸ்ராயீல் (ஹழரத் யாகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சந்ததியினர்) கூட்டத்தாரை விட்டும் பரிசுத்தத்தை நீக்கி விட்டான். காரணம், அவர்கள் தமது நபிமார்கள் மீது மோசமான எண்ணத்தைக் கொண்டிருந்தார்கள். அதைப் போலவே எனது உம்மத்தை விட்டும் பரிசுத்தம் நீக்கப்பட்டது. காரணம், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீது பகைமை கொண்டதால்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 82)

## படைப்பினங்களில் அல்லாஹ்வுக்கு உவப்பானவர்:

படப்பினங்களிலே அல்லாஹ் ரப்புல் இஜ்ஜதுக்கு மிகவும் உவப்பானவராகவும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் இருக்கிறார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒரு பறவை இருந்தது. (ஒரு நாள்) அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "யா அல்லாஹ்! உனக்கு உன்னுடைய படைப்பினங்களில் மிகவும் உவப்பானவரை என்னிடம் அனுப்பு, நான் அவருடன் சேர்ந்து இந்த பறவையை உண்பதற்காக" என்று துஆ செய்தார்கள். ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அண்ணலாரை நாடி வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை திருப்பி அனுப்பிவிட்டார்கள். பிறகு ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வந்தார்கள். அவரையும் அண்ணலார் திருப்பி அனுப்பிவிட்டார்கள். பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் வந்த போது (தம்முடன் சேர்ந்து உண்ண) அனுமதி வழங்கினார்கள். இதை ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவித்திருக்கிறார்கள். ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் பதிவு செய்திருக்கிறார்கள். இதன் மூலமாக அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ,வல்ல அல்லாஹ்வின் படைப்பினங்களில், அல்லாஹ்வுக்கு மிகவும் உவப்பானவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களே என்பதை வெளிப் படுத்தியுள்ளார்கள்.

## அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு மஹ்பூபானவர்:

ஹழரத் ஜமீஆ இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் எனது தாயாருடன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் இருப்பிடத்திற்குச் சென்றேன். அப்போது நான் இள வயதுடையவனாக இருந்தேன். நான் உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு முன்பாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைப் பற்றி நினைவு கூர்ந்தேன். அப்போது உம்முல் முஃமினீன் அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைப் போல மஹ்பூபானான ஒரு ஆண் மகனை நான் கண்டதில்லை. பெண்களில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு, அவர்களின் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின்) துணைவியாரைப் போல மஹ்பூபான ஒருவரையும் நான் கண்டதில்லை" என்று கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 112)

ஹழரத் இப்னு புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஒருவர் என்னுடைய தந்தையாரிடம் (ஹழரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம்) வந்து, "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மக்களில் யார் மிகவும் மஹ்பூபாக (அன்புக்குரியவராக) இருக்கிறார்?" என்று கேட்டார். அதற்கு என்னுடைய தந்தையார், "பெண்களில் சுவனத் தலைவியும், அண்ணல் நபி ஸலல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருமைப் புதல்வியுமான ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள். ஆண்களில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்" என்று கூறினார்கள்.

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு யஹ்யா அவர்கள் அறிவிக்கிறார்கள், "எனக்கு ஒவ்வொரு நாள் இரவிலும் ஸஹருடைய நேரத்தில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் செல்லும் பாக்கியம் கிடைத்தது. நான் அனுமதி கோரும் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுதுக் கொண்டிருந்தால் "ஸுப்ஹானல்லாஹ்" என்று கூறுவார்கள். தொழுகையில் இல்லாத போது எனக்கு அனுமதி வழங்குவார்கள்" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 114)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "சிரத்திற்கும் சரீரத்திற்கும் உள்ள உறவைப் போலவே, எனக்கும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கும் உறவு உள்ளது" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 86)

## ஹழரத் ஜிப்ரீல் அலை அவர்களின் நேசம்:

ஹழரத் தஹ்ஹாக் அன்ஸாரி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அறிவிக்கிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கைபரை நோக்கிப் புறப்பட்டார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை முன்னால் செல்லும்படி கூறினார்கள். (சிறிது நேரம் கழித்து) ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை தம்மிடத்தே அழைத்தும் கொண்டார்கள். அப்போது ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களைக் கண்டார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்த்து ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் புன்னகைத்தார்கள். "நீங்கள் ஏன் புன்னகைக்கிறீர்கள்?" என்று அண்ணலார் கேட்டார்கள். அதற்கு ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், "நான் அவரை (ஹழரத்

அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை) நேசிக்கிறேன்" என்று கூறினார்கள்.

உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம், "உங்களை நேசிப்பதாக ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறுகிறார்கள்" என்று கூறினார்கள். "ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் என்னை நேசிப்பதை நானும் அறிந்து கொண்டேன்" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கூறினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "உண்மைதான்! ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை விட சிறந்தவரும் உம்மை நேசிக்கிறார்" என்று கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர், பாகம் 6, ஹதீஸ் எண்: 8070, பக்கம் 57.

## கதவு மூடப்படாத அலீ (கரம்) அவர்களின் ஹுஜ்ரா:

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மஸ்ஜிதுந் நபவியை நிமாணித்தபோது, தமது துணைவியார்களான ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா மற்றும் ஹழரத் ஸவ்தா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோருக்காகவும் ஹுஜ்ரா என்னும் அறைகள் கட்டினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் துணைவியரின் எண்ணிக்கை அதிகமான போது அந்த ஹுஜ்ராக்களின் (தனி அறைகள்) எண்ணிக்கையும் அதிகரிக்கப்பட்டன. ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா மற்றும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் ஆகியோரின் ஹுஜ்ரா, ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் ஹுஜ்ராவிற்கு பின்பக்கமாக இருந்தது. அந்த இரு ஹுஜ்ராக்களுக்கும் இடையில் ஒரு துவாரம் இருந்தது. அந்த துவாரத்தின் வழியாக அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், தமது திருமகளார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுடனும் பேரர்களுடனும் பேசிக்கொள்வார்கள்.

ஹழரத் இமாம் தப்ரானீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வெளியூர் சென்று திரும்பினால் முதலில் மஸ்ஜிதில் இரண்டு ரக்அத் தொழுவார்கள். பிறகு தமது அருமை மகளாரின் ஹுஜ்ராவுக்குச் சென்று பேசிவிட்டு வருவார்கள். அவர்களிடம் நலம் விசாரிப்பார்கள்" என்று கூறியுள்ளார்கள்.

அந்த அறைகள் யாவும் மஸ்ஜிதுக்கு கிழக்குப் பக்கமாக அமைக்கப்பட்டிருந்தன. அந்த ஹுஜ்ராக்களின் கதவுகள் பெரும்பாலும் மஸ்ஜிதின் பக்கமே இருந்தன. தொடக்கத்தில் சில ஸஹாபாக்களின் கதவுகளும், செல்லும் வழியும் மஸ்ஜிதின்

பக்கமாகவே இருந்தன. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலாவின் உத்தரவுப்படி, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கதவைத் தவிர மற்ற கதவுகள் அனைத்தையும் மூடிவிடும்படியாக கூறினார்கள். அதைப்பற்றி ஹழரத் ஸஅத் பின் அபீ வக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களைத் தவிர்த்து அனைத்து கதவுகளையும் அடைத்துவிடும்படி உத்தரவிட்டார்கள்" என்று கூறியுள்ளார்கள். இதை ஹழரத் இமாம் அஹ்மத் மற்றும் ஹழரத் இமாம் நஸாயீ அறிவித் திருக்கிறார்கள்.

ஹழரத் இமாம் தப்ரானீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உத்தரவைக் கேட்டதும், ஸஹாபா பெருமக்கள் ரிழ்வானுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன் அனைவரும் சேர்ந்து வந்து, "யா ரஸூலுல்லாஹ்! (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) தாங்கள் அனைத்து கதவுகளையும் அடைத்துவிட்டீர்கள். ஆனால், அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கதவை மட்டும் திறந்திருக்க அனுமதிக்கிறீர்களே!" என்று கேட்டனர். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நான் அடைக்கவுமில்லை, நான் திறக்கவுமில்லை. இறைவனே அடைத்தான், இறைவனே திறந்தான். ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கதவைத் தவிர அனைத்து கதவுகளையும் அடைத்துவிடும்படி எனக்கு உத்தரவிடப்பட்டது" என்று கூறினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கதவு மஸ்ஜிதின் பக்கமே இருந்தது. வேறு வழி இருக்கவில்லை. ஜனாபத் நிலையிலும் (உடலுறவு கொண்டு அசுத்தமாக இருக்கும் பெருந்துடக்கு நிலை) அவர்கள் மஸ்ஜிதின் வழியே வந்து செல்வார்கள். (தாரீக்கே மதீனா, பக்கம் 112)

ஹழரத் இப்னு ஸபாலா கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கதவைத் தவிர்த்து, அனைத்து ஸஹாபாக்களின் (ரிழ்வானுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன்) கதவுகளை அடைத்துவிடும்படி உத்தரவிட்டபோது, ஸய்யதினா ஹழரத் ஹம்ஸா பின் அப்துல் முத்தலிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தார்கள். அவர்களது கண்களில் கண்ணீர் வழிந்துக் கொண்டிருந்தது. அவர்கள், "யா ரஸூலுல்லாஹ்! தாங்கள் இந்த சித்தப்பாவை புறந்தள்ளிவிட்டு, சித்தப்பாவின் பிள்ளையை உள்ளே சேர்த்துக் கொண்டீர்களே!" என்று கூறினார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "சிறிய தந்தையே!

நான் காரியஸ்தனாக இருக்கிறேன். எனக்கு இந்த காரியத்தில் எந்த ஒரு அதிகாரமும் இல்லை” என்று கூறினார்கள்.

மற்றொரு அறிவிப்பில் ஹழரத் இப்னு ஸபாலா அவர்களே கூறுகிறார்கள், “ஸஹாபா பெருமக்கள் (ரிழ்வானுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன்) அனைவரும் மஸ்ஜிதில் அமர்ந்திருந்தார்கள். திடீரென (விளம்பரம்) அறிவிப்பாளர், “ஜனங்களே! உங்கள் கதவுகளை அடைத்து விடுங்கள்” என்று அறிவித்தார். இந்த அறிவிப்பைக் கேட்டதும் ஸஹாபாக்கள் அனைவரும் திகைத்தனர். ஆனால் எவரும் எழுந்து செல்லவில்லை. அறிவிப்பாளர் இரண்டாம் முறையாக, “ஜனங்களே! தத்தம் கதவுகளை அடைத்துவிடுங்கள், கடுந்தண்டனை இறங்கும் முன்பாக!” என்று அறிவித்தார். உடனே அனைவரும் எழுந்து அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்றார்கள். அப்போது, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வந்து அண்ணலாருக்கு அருகில் நின்றுக் கொண்டார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பார்த்து, “நீர் ஏன் இங்கு நிற்கிறீர்? உமது இல்லத்திற்குச் சென்று அமருங்கள். உமது கதவையும் திறந்தே வையுங்கள்” என்று கூறினார்கள்

அதைக் கேட்டதும் ஜனங்கள் மனதில் தயக்கம் ஏற்பட்டது. அவர்கள் ஒருவருடன் ஒருவர் பேசிக்கொள்ளத் தொடங்கினர். அதைக் கண்டு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சினம் கொண்டார்கள். அதே வேகத்தில் மிம்பர் மீது ஏறி, அல்லாஹ்வின் மீது ஹம்து மற்றும் ஸனாவை ஓதிவிட்டு, “அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா ‘ஒரு மஸ்ஜிதைக் கட்டும்படியாகவும், அது புகழப்பட்டதாகவும், தூய்மையானதாகவும் இருக்க வேண்டும் என்றும், அதில் உம்மைத்தவிர உமது சகோதரர் ஹழரத் ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் மற்றும் அவரது இரண்டு பிள்ளைகளான ஷப்பர் மற்றும் ஷப்பீர் இவர்களைத் தவிர வேறு எவரும் இருக்கக்கூடாது” என்றும் ஹழரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வஹீ மூலம் அறிவித்தான்.

அதைப் போலவே அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா எனக்கும் வஹீ அறிவித்தான். அதில், தூய்மையான மஸ்ஜித் ஒன்றைக் கட்டும் படியாகவும், அதில் என்னையும் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) மற்றும் அவர்களின் பிள்ளைகளான ஹழரத் ஹஸன், ஹுஸைன் ஆகியோரைத் தவிர வேறு எவரும் இருக்கக்கூடாது” என்றும் அறிவித்தான். அந்த உத்தரவுப்படியே நான் மதீனா நகர் வந்ததும் மஸ்திதை நிர்மாணித்ததேன். மதீனா நகருக்கு வருவதிலோ அல்லது மஸ்ஜிதை நிர்மாணிப்பதிலோ எனக்கு தனிப்பட்ட எந்த அதிகாரமும் இருந்ததில்லை. இறைவன் மீது ஆணையாக! நான் கதவை அடைக்கவுமில்லை, கதவை திறக்கவுமில்லை. நான் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல்

கரீம்) அவர்களை உள்ளே அனுமதிக்கவுமில்லை. அவரை அல்லாஹ்வே (உள்ளே) அனுமதித்தான்" என்று கூறினார்கள்" என்று கூறினார்கள். (தாரீகே மதீனா, பக்கம் 115)

ஹழரத் அபூ ஸயீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "என்னையும் உம்மையும் தவிர வேறு எவரும் பெருந்துடக்கான நிலையில் (ஜனாபத்தான நிலையில்) இந்த மஸ்ஜிதில் தங்குவது ஹலால் (அனுமதிக்கப்பட்ட) ஆக்கப்படவில்லை" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கூறினார்கள். (திர்மிதீ, பைஹகீ, கஸாயிஸுல் குப்ரா, பா 2, பக் 492)

ஹழரத் உமர் இப்னு கத்தாப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு, மற்ற எவருக்கும் வழங்கப்படாத மூன்று சிறப்புகள் வழங்கப்பட்டுள்ளன. அவற்றில் ஏதாவது ஒன்று எனக்கு கிடைத்திருந்தால், அது அரப் நாட்டிலுள்ள ஒட்டகங்கள் எல்லாம் எனக்கு வழங்கப்படுவதைவிட உவப்பானதாக இருந்திருக்கும். அவை: 1.அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருமை மகளார் சுவனத் தலைவி, ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு நா அவர்களின் நிகாஹ், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடன் செய்யப் பட்டது. 2.பெருந்துடக்கான நிலையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் போலவே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் மஸ்ஜிதில் அனுமதிக்கப் பட்டார்கள். எனக்கு அது அனுமதிக்கப் படவில்லை. 3.கைபர் போரின் போது அவரிடம் அலம் (கொடி) வழங்கப்பட்டது" என்று கூறினார்கள். (அபூ யஃலா, கஸாயிஸுல் குப்ரா, பா 2, பக் 492)

ஹழரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "இந்த மஸ்ஜிதில் எனக்கு ஹலால் ஆக்கப்பட்டுள்ள அனைத்தும், உமக்கும் ஹலால் ஆக்கப்பட்டுள்ளது" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கூறினார்கள். (இப்னு அஸாகிர்)

ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், "ஜனாபத் (பெருந்துடக்கு) நிலையில் சுய சிந்தனையுள்ள எவரும் இந்த மஸ்ஜிதில் வருவது ஹலால் ஆகாது. ஆனால், ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், ஹழரத் அலீ முர்துஜா கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரைத் தவிர" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பைஹகீ, கஸாயிஸுல் குப்ரா, பா 2, பக் 492)

## நபி (ஸல்) அவர்களின் ஒட்டகங்களை பலியிடும் பொறுப்பைப் பெற்றவர்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம்முடைய குர்பானீ (பலி) ஒட்டகங்களை (அறுத்து பலியிடும் பொறுப்பைக்) கவனிக்குமாறு எனக்கு கட்டளையிட்டார்கள். மேலும், அவற்றின் இறைச்சி, தோல் மற்றும் சேணம் ஆகியவற்றையும் ஏழைகளுக்கிடையில் பங்கிடுமாறும், உரிப்பதற்கான கூலியை அவற்றில் எதிலிருந்தும் கொடுக்கக்கூடாது என்றும் எனக்குக் கட்டளையிட்டார்கள்". (முஸ்லிம்)

ஹழரத் முஹம்மத் பின் அலீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் யமனிலிருந்து கொண்டு வந்த பலிப்பிராணிகளையும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (மதீனாவிலிருந்து) கொண்டு வந்த பலிப்பிராணிகளையும் சேர்த்து மொத்தம் நூறு பலிப்பிராணிகள் சேர்ந்தன. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லன் அவர்கள் மினாவிலுள்ள பலியிடும் இடத்திற்குச் சென்று அறுபத்து மூன்று ஒட்டகங்களை தமது திருக் கரத்தால் அறுத்து பலியிட்டார்கள். பிறகு, எஞ்சிய முப்பத்தேழு ஒட்டகங்களை (ஹழரத்) அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கொடுத்து பலியிடச் செய்தார்கள். தமது பலி ஒட்டகங்களிலும் அலீ அவர்களை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூட்டாக்கிக் கொண்டார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

### உதய தாரகை:

ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "உதய தாரகை இந்த பூமிக்காக ஒளிருவதைப் போல, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் சுவனத்தில் பிரகாசிப்பார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 78)

## ஹழரத் மூஸா (அலை) அவர்களுக்கு ஹழரத் ஹாரூன் (அலை) போல:

தபூக் போர் ஹிஜ்ரி 9, ரஜப் மாதத்தில் நடந்தது. ஹழரத் மஸ்அப் பின் ஸஅத் பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தபூக் போரின் போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை தமது கலீஃபாவாக விட்டுச் சென்றார்கள். அப்போது,"தாங்கள் என்னை பெண்களிடமும் பிள்ளைகளிடமும் விட்டுச் செல்கிறீர்களா?" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்,"நீர் எம்மிடம் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இருந்த இடத்தில் இருக்கின்றீர் என்பது உமக்கு திருப்தி அளிக்கவில்லையா? அறிந்து கொள்ளும், எனக்குப் பிறகு யாதொரு நபியும் இல்லை" என்று கூறினார்கள். (இமாம் நஸாயீ, முஸ்லிம்)

ஹழரத் ஆயிஷா பின்தே ஸஅத் தம்முடைய தந்தையார் ஹழரத் இப்னு அபீ வக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், "தபூக் போரின் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "இப்னு அபீதாலிபே! நீர் எமக்கு ஹழரத் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஹழரத் ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) இருந்த இடத்தில் இருக்கின்றீர்! ஆயினும் எனக்குப் பிறகு நபி இல்லை" என்று கூறினார்கள். (கஸாயிஸ் அலீ – ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

ஹழரத் ஸஅத் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தபூக் போருக்காக தமது (பெண்) ஒட்டகத்தின் மீது ஏறி புறப்பட்டார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை பின்னால் விட்டுச் சென்றார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் (அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை) நாடி வந்த போது ஒட்டகம் வேகமாக சென்றுக் கொண்டிருந்தது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் (வேகமாகச் சென்று) அண்ணலாரை அடைந்தார்கள். "யா ரஸூலல்லாஹ்! (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) தாங்கள் என்னை தங்களுக்கு அருகில் வைத்திருக்க விரும்பவில்லை என்றும், தாங்கள் என்னை சுமையாக் கருதியதாலும் என்னை பின்னால் விட்டு விட்டுச் செல்வதாகவும் குறைஷிகள் சந்தேகமாக சொல்கிறார்கள்" என்று கூறி அழுதார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மக்களை முன்னோக்கி, உரத்த குரலில், "நீர் எம்மிடம் மூஸா

(அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இருந்த இடத்தில் இருக்கின்றீர் என்பது உமக்கு திருப்தி அளிக்கவில்லையா? அறிந்து கொள்ளும், எனக்குப் பிறகு யாதொரு நபியும் இல்லை" என்று கூறினார்கள். அப்போதுன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "நான் அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் மற்றும் ரஸூலுல்லாஹ் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் பேரில் உவப்பு கொண்டுள்ளேன்" என்று கூறினார்கள்.

ஹழரத் மூஸா அல்ஜுஹனி அவர்கள் அறிவிக்கிறார்கள், "நான் சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களைச் சந்தித்த போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றிய ஹதீஸ் ஏதேனும் கூறும்படி கேட்டுக் கொண்டேன். அப்போது சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், "நான் ஹழரத் அஸ்மா பின்த் உமைஸ் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைப் பற்றி) "நீர் எம்மிடம் மூஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்கு ஹாரூன் (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் இருந்த இடத்தில் இருக்கின்றீர் என்பது உமக்கு திருப்தி அளிக்கவில்லையா? அறிந்து கொள்ளும், எனக்குப் பிறகு யாதொரு நபியும் இல்லை" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூற தான் செவியுற்றதாக என்னிடம் கூறினார்கள்" என்று கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ – கஸாயிஸ் அலீ, பக்கம் 74)

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "இறைவன் மேல் ஆணையாக! நாங்கள் குதிகாலின் மீது வலிமை காட்டி உலவ மாட்டோம். ஏனெனில் அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் எமக்கு ஹிதாயத் (நல்வழி) காட்டியிருக்கிறான். இறைவன் மீது ஆணையாக! அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் இறந்து விட்டால், அவர்களுடைய வாழ்வில் எவற்றை எல்லாம் அவர்கள் எதிர்த்தார்களோ, அவற்றை எல்லாம் நானும் எதிர்ப்பேன். இறைவன் மீது ஆணையாக! நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் சகோதரனாக இருக்கிறேன். அவர்களின் ஒலியாக (பொறுப்பாளனாக) இருக்கிறேன். அவர்களின் வாரிசாக இருக்கிறேன். அவர்களின் சிறிய தந்தையின் பிள்ளையாகவும் இருக்கிறேன். இந்த விஷயங்களில் என்னை விட வேறு யார் உரிமை பெற்றவராக இருக்கின்றார்?" என்று கூறினார்கள். (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "என்னுடைய உம்மத்துக்களில் மாதிரி இல்லாத எந்த

ஒரு நபியும் இருக்கவில்லை. ஹழரத் அபூபக்கர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மாதிரியாக இருக்கிறார். ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹழரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மாதிரியாக இருக்கிறார். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹழரத் ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மாதிரியாக இருக்கிறார்கள். என்னுடைய மாதிரியாக ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் இருக்கிறார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 77)

## ஹழரத் அலீ (கரம்) அவர்களைப் பார்ப்பது இபாதத்து ஆகும்:

ஹழரத் மஆத் இப்னு ஜபல் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைப் பார்ப்பதே ஒரு இபாதத்து ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் அபூ தர்தா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் என்னுடைய இல்மின் (அறிவின்) நுழைவாயிலாக இருக்கிறார். எனக்கு கொடுத்து அனுப்பப்பட்ட அறிவு அனைத்தையும் எனக்குப் பிறகு எனது உம்மத்துக்களுக்கு பயான் செய்யக் கூடியவராக இருக்கிறார். அவர் மீது நேசம் கொள்வது முஃமின்களின் ஈமான் ஆகும். அவரைப் பகைப்பது பிரிவை ஏற்படுத்தும். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைப் பார்ப்பதே ரஹ்மத்தாகும். அவர் மீது கொள்ளும் நேசம் இபாதத்து ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 77)

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் முகத்தைப் பார்ப்பதும் ஒரு இபாதத்து ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸ்ஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இமாம் ஹாகிம், இமாம் தப்ரானீ, இமாம் தைலமீ, பக்கம் 23)

ஹழரத் இம்ரான் இப்னு ஹஸீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் பக்கம் பார்ப்பதும் ஒரு இபாதத்து ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இதை இமாம் ஹாகிம், இமாம் அபூ நுஅய்ம் ஆகியோர்

பதிவு செய்திருக்கிறார்கள். இமாம் ஹாகிம் அவர்கள் இதை ஸஹீஹ் என்பதாக கூறியுள்ளார்கள். (பக்கம் 23)

உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கிறார்கள், எனது தந்தையார் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் முகத்தின் பக்கம் மிக அதிகமாகப் பார்ப்பதைக் கண்டேன். நான் எனது தந்தையாரிடம், "தந்தையே! தாங்கள் அடிக்கடி ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் முகத்தின் பக்கமாக பார்ப்பதை நான் காணுகின்றேன். அதற்கான காரணம் என்ன?" என்று கேட்டேன். அதற்கு எனது தந்தையார், "மகளே! ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வ்ஜ்ஹஹுல் கரீம் அவர்களின் முகத்தைப் பார்ப்பதும் இபாதத்து ஆகும் என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதை நான் கேட்டிருக்கிறேன்" (அதனால்தான் அவருடைய முகத்தை அடிக்கடி பார்க்கிறேன்) என்று கூறினார்கள். இமாம் இப்னு அஸாகிர், பக்கம் 22.

ஹழரத் உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை நினைவு கூறுவதும் ஒரு இபாதத்து ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 85)

## அலீ (கரம்) எம்மில் உள்ளவராவார்:

நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பார்த்து, "நீர் எம்மில் உள்ளவராவீர்; நான் உம்மில் உள்ளவனாவேன்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் பராஃ இப்னு ஆஸிஃப் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: புகாரீ, முஸ்லிம்.

ஹழரத் இம்ரான் பின் ஹஸீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "நீர் எம்மில் உள்ளவராவீர்; நான் உம்மில் உள்ளவனாவேன். அலீ எனக்குப் பிறகு முஃமின்கள் அனைவருக்கும் ஒலி (பொறுப்பாளர்) மற்றும் உதவியாளர் ஆவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இமாம் நஸாயீ – கஸாயிஸ் அலீ, பக்கம் 78)

ஹழரத் ஜைது ரலியல்லாஹுஅன்ஹு அவர்கள் தமது தந்தையார் வாயிலாக அறிவிக்கிறார்கள், "அலீயே! நீர் எமது மருமகராகவும் எமது பிள்ளைகளுக்கு (ஹழரத் இமாம் ஹஸன், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோருக்கு) தந்தையாகவும் இருக்கிறீர். நீர் எம்மில் உள்ளவராவீர்; நான் உம்மில் உள்ளவனாவேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 132)

ஹழரத் பராஉ பின் ஆஸிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், "நான் உம்மில் உள்ளவன், நீர் எம்மில் உள்ளவராவீர்" என்று கூறினார்கள். (இமாம் நஸாயீ, பக்கம் 79)

ஹழரத் இப்னு ஜுனாதா அவர்கள் அறிவிக்கிறார்கள், "அலீ என்னில் உள்ளவராவார். நான் அலீயில் உள்ளவனாவேன். என்னுடைய கடனை எவரும் தீர்க்க மாட்டார்கள். (எனது கடனை) நானே தீர்த்து வைப்பேன். அல்லது அலீ தீர்த்து வைப்பார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (கஸாயிஸ் அலீ – ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

ஹழரத் அபீ சுலைமான் அல் ஜுஹனி அவர்கள் அறிவிக்கிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத்தின் அடியாராகவும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சகோதரராகவும், நேசராகவும் இருக்கின்றார். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பற்றி, "அலீ என்னில் உள்ளவராவார், நான் அலீயில் உள்ளவனாவேன்" என்று கூறினார்கள். (கஸாயிஸ் அலீ, பக்கம் 78)

ஹழரத் இம்ரான் பின் ஹஸீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு படைப் பிரிவை ஏற்படுத்தி, அதன் தளபதியாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை நியமித்து, சிரியாவை நோக்கி அனுப்பி வைத்தார்கள். அப்போரில் இஸ்லாமிய படை வெற்றிப் பெற்றது. கனீமத்துப் பொருட்களும் கிடைக்கப் பெற்றன. அந்த கனீமத்துப் பொருட்களிலிருந்து ஒரு அடிமைப் பெண்ணை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பெற்றுக் கொண்டார்கள். அதை சிலர் விரும்பவில்லை! அவர்களில் நால்வர் அவ்விஷயத்தை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று கூற வேண்டுமென முடிவு செய்துக் கொண்டார்கள்.

எங்கு பயணம் சென்று திரும்பிவந்தாலும் முதன் முதலாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சென்று சந்திப்பது ஸஹாபா பெருமக்களின் வழக்கமாக இருந்தது. அவ்வழக்கப்படி சிரியாவிலிருந்து திரும்பிய படைப் பிரிவும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருச் சமூகத்தில் ஆஜரானது. அப்போது, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு

வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பற்றி குறை கூறி முறையீடு செய்ய எண்ணியிருந்த நால்வரில் ஒருவர் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், “ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களைப் பார்த்தீர்களா? அவர் அப்படிச் செய்தார், அவர் இப்படிச் செய்தார்” என்று குறை கூறினார்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அதைக் கேட்டதும் தமது திருப் பார்வையை அவரை விட்டும் திருப்பிக் கொண்டார்கள். இரண்டாமவரும் குறைகள் கூறிய போது, அவரை விட்டும் தமது திருப் பார்வையைதிருப்பிக் கொண்டார்கள். பிறகு மற்ற இருவரும் அதே குறையை கூறிய போது,அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுகம் சினத்தால் சிவந்துபோனது. உடனே, “அலீ என்னில் உள்ளவர், நான் அவரில் உள்ளவன். எனக்குப் பிறகு முஃமின்கள் அனைவருக்கும் அலீ உதவியாளராக இருக்கிறார் என்பதை நீங்கள் அறியவில்லையா?” என்று (சினத்துடன்) கேட்டார்கள். (இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 94)

ஹழரத் ஸல்மான் பார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஒவ்வொரு நபிக்கும் ஒரு இரகசியம் அறிந்தவர் இருப்பார். என்னுடைய இரகசியம் அறிந்தவர் ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தாம்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ’, பக்கம் 75)

ஹழரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களை ஹழரத் காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தலைமையில் எமன் நாட்டிற்கு அனுப்பினார்கள். மற்றொரு படைப் பிரிவுடன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அனுப்பினார்கள். மேலும், இவ்விரண்டு படைப் பிரிவுகளும் சேர்ந்து போரிட நேர்ந்தால், அப்போது இரண்டு படைகளுக்கும் தளபதியாக ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் இருப்பார்கள். தனித்தனியாகவே போரிட நேர்ந்தால் ஒரு பிரிவிற்கு ஹழரத் காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், மற்றொன்றுக்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் தளபதிகளாக இருப்பார்கள்” என்று கூறியும் அனுப்பினார்கள். நாங்கள் எமன் வாசிகளுடன் போர் புரிந்தோம். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் எமன் நாட்டு முஷ்ரிக்குகள் மீது எங்களுக்கு வெற்றியைக் கொடுத்தான். நாங்கள் எதிரிகளின் வீரர்களை வெட்டி வீழ்த்தினோம். அவர்களின் சந்ததியினரை கைதும் செய்தோம். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கைதிகளிலிருந்து ஒரு அடிமைப் பெண்ணை விரும்பினார்கள்.

எனவே ஹழரத் காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இவ்விஷயம் பற்றி அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதி, அதை என்னிடம் கொடுத்து அனுப்பினார்கள். நான் கடிதத்தைப் பெற்றுக் கொண்டு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருச் சமுகத்தில் ஆஜரானேன். மேலும், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் எங்களுக்கு இவ்விதமெல்லாம் (மனக்) கஷ்டம் கொடுத்தார்கள்" என்றும் குறை கூறினேன். அதைக் கேட்டதும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுகம் சினத்தால் சிவந்துபோனது. பிறகு, "புரைதாவே! என் பொருட்டு ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) மீது பகைமை கொள்ளாதீர். ஏனெனில், அலீ என்னில் உள்ளவராவார். நான் அலீயோடு இருக்கிறேன். எனக்குப் பிறகு அலீ உமக்கு உதவியாளராக இருக்கிறார்" என்றும் கூறினார்கள். (இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 95)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தீனுடைய நுழைவாயிலாக இருக்கிறார்கள். எவர் அதில் பிரவேசிக்கிறாரோ அவர் முஃமினாக இருக்கிறார். எவர் அதிலிருந்து வெளியேறுகிறாரோ அவர் காஃபிர் ஆவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ', பக்கம் 86)

ஹழரத் ஜைது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களே! நீங்கள் என்னுடைய மருமகராக இருக்கிறீர்கள். என் பிள்ளைகளுக்கு (ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும்) தந்தையாக இருக்கிறீர்கள். நீர் எம்மில் உள்ளவராவீர். நான் உம்மில் உள்ளவனாவேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (கஸாயிஸ் அலீ, பக்கம் 132)

ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள். "அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் ஒவ்வொரு நபியின் சந்ததியையும் அவர்களின் முதுகந் தண்டுகளில் வைத்தான். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் எனது வமிசத்தை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் முதுகந் தண்டில் வைத்துள்ளான்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2564, பக்கம் 307)

சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், "ஒவ்வொரு குழந்தையின் உறவும் அதன்

தந்தையின் மூலமாக அமையும். சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களைத் தவிர! நான் அவருடைய வலீயாகவும் (பொறுப்பாளனாக), அவரது சதையாகவும் நரம்பாகவும் இருக்கிறேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அல்முஅஜம் அல்கபீர்-இமாம் தப்ரானீ, பாகம்2, ஹதீஸ் எண்: 2566.)

## அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வஸீ மற்றும் வாரிசு:

ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நாங்கள் ஹழரத் சல்மான் ஃபார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சென்று, "தங்களின் வஸீ (இறுதி விருப்பத்தை நடைமுறைக்கு கொண்டு வர அதிகாரம் பெற்றவர்) யார்?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்கும்படி கோரினோம். அவரும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று, அதைக் கேட்டார். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "ஸல்மானே! என்னுடைய வஸீ, என்னுடைய வாரிசு, என்னுடைய கடன்களை தீர்ப்பவர், என்னுடைய வாக்குறுதிகளை நிறைவேற்றுபவர் ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்தாம்" என்று கூறினார்கள். (அஸ் ஸப்ஊன் ஃபீ ஃபளாயிலே அலீ', பக்கம் 61)

ஹழரத் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஒவ்வொரு நபிக்கும் ஒரு வஸீயும், வாரிசும் இருப்பார்கள். என்னுடைய வஸீயும் வாரிசும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களே!" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "எல்லா நபிமார்களின் வமிசங்களும் அவர்களின் மரபு வழியிலேயே வைக்கப்பட்டன. என்னுடைய வமிசத் தொடர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் மரபு வழியில் வைக்கப்பட்டது" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஒரு தந்தையின் மீது பிள்ளைகளுக்கு இருக்கும் உரிமையைப் போல, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் பேரில் இந்த உம்மத்துக்களுக்கும் உரிமை இருக்கிறது" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஊன் ஃபீ ஃபளாயிலே அலீ', பக்கம் 74)

ஹழரத் அப்துல்லாஹ் பின் ஆமிர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், “அல்லாஹ் ஸுப்ஹானஹூ வத ஆலா தனது பார்வையை பூமியின் மீது செலுத்தினான். அவன் (பூமியிலிருந்து) உமது திருத்தந்தையாரையும், உமது கணவரையும் தேர்ந்தெடுத்துக் கொண்டான். இந்த விஷயம் உமக்கு இணக்கமானதாக இல்லையா?” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தமது திருப் புதல்வியார் சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் கேட்டார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ’, பக்கம் 61)

## அரேபியர்களின் தலைவர்:

ஹழரத் உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கிறார்கள், “என்னிடம் அரேபியர்களின் தலைவரை அழைத்து வாருங்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அப்போது நான், “யா ரஸூலுல்லாஹ்! தாங்கள் அரேபியர்களின் தலைவர் இல்லையா?” என்று கேட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “நான் ஹழரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சந்ததிகள் அனைவருக்கும் தலைவர் ஆவேன். ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள் அரேபியர்களின் தலைவர் ஆவார்” என்று கூறினார்கள். (ஹழரத் அலீ – ஷாஹ் வலியுல்லாஹ், பக்கம் 79)

## சூரியன் திரும்பியது:

கைபர் போரிலிருந்து திரும்பும் போது வழியில் ஓரிடத்தில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஓய்வு கொள்ள நாட்டம் கொண்டார்கள். அண்ணலார் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் மடியில் தலைவைத்து படுத்தார்கள். அப்படியே உறங்கியும் போனார்கள். அந்த நிலையிலேயே அஸர் தொழுகையின் நேரமும் கடந்து விட்டது. சூரியனும் அஸ்தமிக்கத் தொடங்கியது.

அஸர் தொழுகையின் நேரம் கடந்து போனதால் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் விசனம் அடைந்தார்கள். அந்த சமயத்தில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கண் விழித்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் முகத்தில் விசனத்தைக் கண்டு, காரணம் கேட்டார்கள். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், “என்னுடைய அஸர் தொழுகை தவறிவிட்டது. சூரியனும் அஸ்தமித்துவிட்டது” என்று கூறினார்கள்.

உடனே, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத்திடம் துஆ செய்தார்கள். உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அஸர் தொழுவதற்காக, அஸ்தமித்த சூரியன் மீண்டும் திரும்பியது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அஸர் தொழுகையை தொழுதார்கள்! (அலிய்யுல் முர்துஜா, பக்கம் 113)

## கஃபாவில் சிலை உடைத்தவர்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், "நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் நடந்து சென்றுக் கொண்டிருந்தேன். புனித கஃபாவை அடைந்ததும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனது தோள் மீது ஏறினார்கள். நான் அவர்களை சுமந்தபடியே எழுந்து நின்றேன். ஆயினும் எனது பலஹீனத்தை உணர்ந்துக் கொண்ட அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அலீயே! நீர் உட்கார்ந்துவிடும்" என்று கூறினார்கள். நான் உட்கார்ந்ததும், அண்ணல் நபி வ்சல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனது தோளிலிருந்தும் இறங்கினார்கள். பிறகு அண்ணலார் அவர்கள் கஃபாவினுள் அமர்ந்து, "அலீயே! எனது தோள்களின் மீது ஏறும்" என்று ஆணையிட்டார்கள். நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருத் தோள்களின் மீது ஏறினேன். அண்ணலார் என்னை சுமந்தபடியே எழுந்து நின்றார்கள். அப்போது எனக்கு வானத்தையே தொட்டுவிட்டது போலத் தோன்றியது.

நான் புனித கஃபாவின் மீது ஏறினேன். அங்கு செம்பு அல்லது பித்தளையால் ஆன சிலை இருந்தது. நான் அச்சிலையை முன் புறமாகவும் பின் புறமாகவும், வலது புமாகவும் இடது புறமாகவும் அசைத்தேன். சிலை முறிந்தது! அச்சிலையை கீழே வீசும்படியாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனக்கு உத்தரவிட்டார்கள். நான் அவ்விதமே சிலையை கீழே வீசினேன். சிலை கண்ணாடியைப் போல உடைந்து சிதறியது! பிறகு நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருத் தோள்களிலிருந்தும் இறங்கினேன்"என்று கூறினார்கள். இந்த சம்பவம் ஹிஜ்ரத்துக்கு முன் நடந்ததாக அல்முஸ்தத்ரக் ஹாகிமில் கூறப்பட்டுள்ளது.,ஹழரத் இமாம் அஹ்மத் இப்னு ஹன்பல் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது முஸ்னதில் இதை பதிவு செய்திருக்கிறார்கள், ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 118)

## விலாயத்:

ஹழரத் அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "புனித மிஃராஜ் இரவில் நான் வானங்களில் பிரவேசித்த போது நபிமார்கள் அனைவரும் என்னருகே ஒன்று கூடினார்கள். அப்போது அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா, "முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களே! எந்த விஷயத்தை அடிப்படையாகக் கொண்டு நீங்கள் அனுப்பப்பட்டீர்கள்? என்று அங்கு கூடியுள்ள நபிமார்களிடம் கேளுங்கள்" என்று எனக்கு வஹீ அறிவித்தான். அதற்கு அவர்கள், "நாங்கள் லாஇலாஹ இல்லல்லாஹு என்னும் திருக் கலிமாவை சான்றுரைப் பவர்களாகவும், உங்களுடைய நுபூவத்தைக் கொண்டும், ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் விலாயத்தைக் கொண்டும் நாங்கள் அனுப்பப்பட்டோம்" என்று கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ', பக்கம் 87)

ஹழரத் அபூ ஸயீத் அல் குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "இன்னும், அவர்களை (அங்கே) நிறுத்திவையுங்கள். அவர்கள் நிச்சயமாக (கேள்விக் கணக்குக்) கேட்கப்பட வேண்டியவர்கள் (என்று மலக்குக்களுக்கு கூறப்படும்). என்னும் அத்தியாயம் 37, ஸூரத்துஸ் ஸாஃப்ஃபாத், வசனம் 24 அருளப்பட்டபோது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "இந்த வசனம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் விலாயத்து பற்றி அவர்களிடம் கேட்கப்படும் என்பதை விளக்குகிறது" என்று கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 84)

ஹழரத் அம்மார் இப்னு யாஸிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "எவர் என் மீது ஈமான் கொண்டு, என்னை உண்மைப் படுத்துகிறாரோ, அவருக்கு நான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் விலாயத்து மீது நான் வஸீயத்து செய்கிறேன். எவர் அவரை வலியாக (நேசராக) ஆக்கிக் கொண்டாரோ, அவர் என்னையும் வலியாக (நேசராக) ஆக்கிக் கொண்டார். எவர் என்னை வலியாக ஆக்கிக் கொண்டாரோ, அவர் அல்லாஹ்வையும் வலியாக ஆக்கிக் கொண்டார். எவர் அலீ மீது அன்பு கொண்டாரோ, அவர் என் மீதும் அன்பு கொண்டவராவார். எவர் என் மீது அன்பு கொண்டாரோ அவர் அல்லாஹ்வின் மீது அன்பு கொண்டவராவார். எவர் அலீ மீது பகை கொண்டாரோ, அவர் என் மீதும் பகை கொண்டவராவார். எவர் என் மீது பகை கொண்டாரோ, அவர் அல்லாஹ்வின் மீதும் பகை கொண்டவராவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

## அமீருல் முஃமினீன்:

ஹழரத் ஹஸீஃபா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு 'அமீருல் முஃமினீன்' என்னும் பெயர் எப்போது கிடைக்கப் பெற்றது என்ற விவரத்தை ஜனங்கள் அறிந்திருந்தால், அவர்கள் எப்பொழுதும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் ஃபளாயில்களை (சிறப்புகளை) ஒருபோதும் புறக்கணித்திருக்க மாட்டார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு 'அமீருல் முஃமினீன்' என்னும் பெயர் ஹழரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது ஆத்மாவுக்கும் உடலுக்கும் இடைப்பட்ட நிலையில் இருந்த போது, அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா அனைவரிடமும் வாக்குறுதி ஒன்றை வாங்கினான். அப்போது, "நான் உங்கள் இறைவன் இல்லையா?" என்று கேட்டான். அனைவரும் "ஆம்" என்றார்கள். பிறகு அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத், "நான் உங்களுடைய இறைவன் ஆவேன். (ஹழரத்) முஹம்மத் (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) அவர்கள் உங்களுடைய நபியாக இருக்கிறார். (ஹழரத்) அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள் உங்களுடைய அமீராக இருக்கிறார்" என்று கூறினான். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 89)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "தோட்டங்கள் எல்லாம் எழுத்தாணிகளாக ஆகிவிட்டாலும், கடல்கள் எல்லாம் மையாக ஆகிவிட்டாலும், அவை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் ஃபளாயில்களுக்கு (சிறப்புகளுக்கு) எல்லையாகாது!" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 101)

## அண்ணல் (ஸல்) அவர்களின் துஆ:

ஹழரத் ஜஃபர் அல்அஹ்மர் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வாயிலாக கூறுகிறார்கள், "(ஒருமுறை) நான் நோய்வாய்ப்பட்ட போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் நலம் விசாரிக்க என்னிடம் வந்தார்கள். நான் ஒருபக்கமாக (ஒருக்களித்து) படுத்திருந்தேன். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், என்னருகே வந்து எனக்கு பக்கத்தில் நெருங்கி அமர்ந்தார்கள். பிறகு தமது ஆடையால் என்னை போர்த்தி விட்டார்கள். பிறகு, நான் உடல் நலம் தேறுவதை உணர்ந்துக் கொண்ட அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுவதற்காகச் சென்றுவிட்டார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுது முடித்ததும் மீண்டும் என்னிடம் வந்தார்கள். என் மீது போர்த்தியிருந்த போர்வையை எடுத்துவிட்டு, “அலீயே! எழுந்து நில்லும்” என்று கூறினார்கள். நான் எழுந்து நின்றேன். மேலும் நான் முற்றிலும் குணமடைந்தும்விட்டேன்! அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “அலீயே! நான் தொழுகையில் அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலாவிடம் கேட்டது எனக்கு வழங்கப்பட்டுவிட்டது. நான் எனக்காக கேட்டதையே உமக்காகவும் (அல்லாஹ் ஸுப்ஹானஹு வத ஆலாவிடம்) கேட்டேன்” என்று கூறினார்கள். (இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 137)

ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் எழுதிய ‘கஸாயிஸ் அலீ’ என்னும் நூலிலேயே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறியதாக இச்செய்தி எழுதப்பட்டுள்ளது. “நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருச்சமுகத்தில் ஆஜராகி, “தங்களின் பேரன்பிலேயே திளைத்திருந்த தங்களின் சித்தப்பா அவர்கள் இறந்துவிட்டார்கள். அவர்களை அடக்கம் செய்வதற்கான காரியங்களை யார் மேற்கொள்வது?” என்று கேட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “அப்பணியை நீர்தான் செய்ய வேண்டும். மேலும், நீர் என்னிடம் திரும்பி வரும்வரை வேறு புதிய பணி எதையும் முற்கொள்ளவும் கூடாது” என்று என்னிடம் கூறினார்கள். நான் (அவ்விதமே அடக்கம் செய்த பிறகு) மீண்டும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் (திரும்பி) வந்தேன். அண்ணலார் அவர்கள் என்னை குளித்துவிட்டு வரும்படி கூறினார்கள். பிறகு நீண்ட துஆவும் செய்தார்கள். அந்த துஆவை கேட்ட எனக்கு, இந்த உலகில் சந்தோஷம் தரக்கூடிய வேறு எதுவுமே இருக்க வில்லை!” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ – கஸாயிஸ் அலீ, பக்கம் 139)

## அண்ணல் நபி (ஸல்) கற்றுக் கொடுத்த துஆக்கள்:

ஹழரத் அப்துல்லாஹ் பின் ஸல்மா அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள்,”அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னிடம், “யா அலீ! உமது பிழைகள் பொருத்தருளக் கூடிய கலிமாக்களை உமக்கு கற்றுக் கொடுக்கவா! நீர் அவற்றை ஓதும் போது பாவமன்னிப்பு பெறுவீர்! ஆயினும் நீர் (பாவங்கள்) மன்னிக்கப் பட்டவராகவும், (பரிசுத்தமானவராகவும்) இருக்கின்றீர்” என்று கூறினார்கள். பிறகு இந்த கலிமாக்களை கற்றுக் கொடுத்தார்கள். “லா இலாஹ இல்லல்லாஹுல் ஹலீமுல் கரீம். லா இலாஹ இல்லல்லாஹுல் அலீயுல் அஜீம். அல்ஹம்துலில்லாஹி ரப்பில்

ஆலமீன்". (கஸாயிஸ் அலீ, ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, பக்கம் 47)

மற்றொரு ஹதீஸில் பின் வரும் கலிமாக்கள் கூறப்பட்டுள்ளன. "லா இலாஹ இல்லல்லாஹுல் அலீயுல் அஜீம், லா இலாஹ இல்லல்லாஹுல் ஹலீமுல் கரீம், ஸுஃபான ரப்பில் அர்ஷில் அஜீம், அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்".

ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், "ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பணியாள் ஒருவரை கேட்டு பெறச் சென்றார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அதைவிடச் சிறந்த ஒன்றை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? நீ (இரவு) உறங்கப் போகுமுன்பு முப்பத்து மூன்று முறை 'ஸுஃபானல்லாஹ்' (அல்லாஹ் மிகத் தூயவன்) என்றும், முப்பத்து மூன்று முறை 'அல்ஹம்துலில்லாஹ்' (அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்) என்றும், முப்பத்து நான்கு முறை 'அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்றும் கூறுங்கள்" என்று கூறினார்கள். தொடர்ந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "இவற்றை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எங்களுக்கு கற்றுக் கொடுத்த பின்னர் நான் ஒரு நாளும் ஓதாமல் இருந்ததில்லை" என்று கூறினார்கள். அப்போது ஒருவர், "ஸிப்பீன் போர் நடந்த இரவில் கூடவா?" என்று கேட்டார். "ஆம், ஸிப்பீன் போர் நடந்த இரவில் கூட நான் அதை ஓதாமல் விட்டதில்லை!" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். (புகாரீ)

இதையே 'தஸ்பீஹ் ஃபாத்திமா' என போற்றிக் கூறுகிறார்கள். இதை தினம் தினம் ஓதி, பலன்களையும் அடைகிறார்கள்.

ஹழரத் அப்துல்லாஹ் பின் ஸல்மா அவர்களே அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், "யா அலீ! (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) துன்பங்களையும், துயரங்களையும் போக்கும் கலிமாக்களை நான் உமக்கு கற்றுக் கொடுக்கவா?" என்று கேட்டுவிட்டு, பின்வரும் கலிமாக்களைக் கற்றுக் கொடுத்தார்கள்.

"லா இலாஹ இல்லல்லாஹு அலீயுல் அஜீம், ஸுப்ஹான ரப்பிஸ் ஸமாவாதிஸ் ஸப்அ வரப்புல் அர்ஷில் அஜீம், அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்".

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "உமக்கு, கேட்கும் போதெல்லாம் மஃக்பிரத் (பாவ மன்னிப்பு) பெற்றுத் தரக்கூடிய துஆவை கற்றுக் கொடுக்கவா? ஆயினும் நீர் முன்பே மன்னிக்கப்பட்டவராக இருக்கிறீர்" என்று என்னிடம் கூறினார்கள். அதற்கு நான், "ஆம், கற்றுக் கொடுங்கள்" என்று கூறினேன். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள்,

"லா இலாஹ இல்லல்லாஹுல் அலீயுல் அஜீம், லா இலாஹ இல்லல்லாஹுல் ஹலீமுல் கரீம், ஸுப்ஹான ரப்பில் ஆர்ஷில் அஜீம், அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்" என்னும் துஆவைக் கற்றுக் கொடுத்தார்கள். (கஸாயிஸ் அலீ, ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, பக்கம் 48)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், என்னிடம் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "அல்லாஹும்மஹ்தினீ, வ சத்தித்னீ" (இறைவா! எனக்கு நல்வழி காட்டுவாயாக! நேர்மையானதைச் சரியாகச் செய்ய எனக்கு வாய்ப் பளிப்பாயாக!) என்று பிரார்த்தனை செய்வீராக! அப்போது, (வழி தவறியவனுக்கு சரியான) வழியை நீர் காட்டுவதையும் (வளைந்த) அம்பை நிமிர்த்தி நேராக்குவதையும் நினைத்துக் கொள்வீராக" என்று கூறினார்கள். (முஸ்லிம்)

மற்றொரு அறிவிப்பில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களே கூறுகிறார்கள், "என்னிடம் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்கல் ஹுதா வஸ்ஸதாத" (இறைவா! உன்னிடம் நான் நல்வழியையும் நேர்மையையும் வேண்டுகிறேன்) என்று துஆ செய்வீராக!" என்று கூறினார்கள். (முஸ்லிம்)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், "நான் நோய்வாய்ப்பட்ட போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் என்னுடைய இயாதத்திற்காக (நலம் விசாரிப்பதற்காக) என்னிடம் வந்தார்கள். அப்போது நான், "யா அல்லாஹ்! எனக்கு மரணம் நெருங்கி விட்டிருந்தால் நிம்மதியாக என்னை எடுத்துக் கொள். என்னுடைய மரணத்தில் தாமதம் இருந்தால், நோயின் கஷ்டத்தை என்னை விட்டும் தூரமாக்கிவிடு. எனக்கு இது சோதனையாக இருந்தால் எனக்கு பொறுமையைக் கொடு" என்று துஆ செய்தேன்.

இந்த துஆவைக் கேட்ட அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள்,"அல்லாஹும்ம அஷ்பீஹி அல்லாஹும்ம ஆஃபிய, யா அல்லாஹ்! இவருக்கு நலத்தை வழங்குவாயாக! யா அல்லாஹ்!

இவருக்கு நிலையான பாதுகாப்பை வழங்குவாயாக!" என்று துஆ செய்தார்கள். பிறகு என்னைப் பார்த்து, "எழுந்திரும்!" என்று கூறினார்கள். நான் எழுந்து நின்றேன். அதன் பிறகு அந்த வலி ஒருபோதும் ஏற்பட்டதில்லை" என்று கூறினார்கள். (ஹாகிம், பைஹகீ, அபூ நுஅய்ம், கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக்கம் 328)

## அண்ணல் நபி (ஸல்) அவர்களை கடைசியாக சந்திக்கும் பேறு பெற்றவர்:

உம்முல் முஃமினீன் ஹழரத் உம்மு ஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் சத்தியமிட்டு கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை (வஃபாத்துக்கு முன்) கடைசியாகச் சந்தித்தவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தாம்! எந்த நாள் காலை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வஃபாத் ஆனார்களோ, அதற்கு முந்தய பகல் பொழுதில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அழைத்துவர ஆள் அனுப்பினார்கள். ஏதோ ஒரு முக்கிய விஷயமாக அன்னாருடன் பேச விரும்புகிறார் என நான் நினைத்தேன். ஏனெனில், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மூன்று முறை "அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் வந்துவிட்டார்களா?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

சூரியன் மறைவதற்கு முன்பாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வருகை புரிந்தார்கள். அந்த சமயத்தில் நாங்கள் அனைவரும் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் வீட்டில் தங்கி இருந்தோம். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வந்ததும், அன்னாருடன் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனியாக பேச விரும்புவதை உணர்ந்து, நாங்கள் அனைவரும் வீட்டிலிருந்தும் வெளியே வந்துவிட்டோம். நான் எல்லோருக்கும் கடைசியாக வீட்டிலிருந்து வெளியே வந்து கதவுக்கு மிக அருகில் அமர்ந்துக் கொண்டேன். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பக்கம் குனிந்தார்கள். அண்ணலார், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் இரகசியமாக எதையோ கூறினார்கள். அதுவே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கடைசி சந்திப்பாக அமைந்தது". (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி – கஸாயிஸ் அலீ, பக்கம் 145)

வாழ்நாள் முழுவதும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இணை பிரியாது வாழ்ந்து வந்த ஹழரத் அலீ

கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள், இறுதி காலத்தில் சுகவீனம் அடைந்த பொழுதும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருகிலேயே இருந்து வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் இறுதி நேரத்தில் மக்களில் ஒரு சாரார் கவலையோடு மஸ்ஜிதுந் நபவீயில் குழுமியிருந்தனர். ஒரு சாரார் தத்தம் அன்றாட பணிகளில் ஈடுபட்டிருந்தனர். ஒரு சாரார் கலீஃபாவை தேர்ந்தெடுப்பதில் ஈடுபட்டிருந்தனர். ஆனால், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருகிலேயே இருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் இறப்பெய்திய நேரத்திலும் அருகிலேயே இருந்தார்கள். மேலும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை குளிப்பாட்டியதும், ஜனாஸா தொழுகையை தொழ வைத்ததும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள்தாம்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு (மரண) நோய் அதிகமாகி, வேதனையும் கடுமையான போது, உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் வீட்டில் தங்கி சிகிச்சை பெற மற்ற மனைவிமார்களிடமும் அனுமதி பெறப்பட்டது. பிறகு, ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை கைத்தாங்கலாக வெளியே அழைத்து வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் வேதனை இன்னும் அதிகமான போது, “வாய் திறக்கப்படாத ஏழு தோல்பை தண்ணீரை என் மீது ஊற்றுங்கள். நான் மக்களுக்கு வஸிய்யத் (உபதேசம்) செய்ய வேண்டும்” என்று அண்ணலார் கூறினார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் துணைவியாரான ஹழரத் ஹப்ஸா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு சொந்தமான ஒரு கல் தொட்டியின் மீது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை உட்காரவைத்தார்கள். அவர்கள் போதும் என்று சொல்லும் வரையில் அவர்கள் மீது தண்ணீர் ஊற்றினார்கள். அதன்பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மக்களுக்கு வஸிய்யத் செய்ய வெளியே வந்தார்கள்” என்று ஹழரத் உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறினார்கள். (புகாரீ)

"நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ), உஸாமா (ரலியல்லாஹூதஆலா அன்ஹூ) ஆகியோர்தாம் குளிப்பாட்டினர். மேலும் அவர்களே அண்ணலாரை கப்ரில் இறக்கியும் வைத்தனர்".

அறிவிப்பவர்: ஹழரத் அமிருஷ் ஷஃபி ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: அபூதாவூத்.

## அண்ணல் நபி(ஸல்) அவர்களுக்கு குஸ்லு கொடுத்தவர்:

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், ஹழரத் பழல் இப்னு அப்பாஸ், உஸாமாபின் ஸைத் ரலியல்லாஹு அன்ஹும் ஆகிய மூவரும் சேர்ந்து குஸ்லு கொடுத்தார்கள். இம்மூவரும் சேர்ந்துதான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித உடலை கபரிலும் இறக்கினார்கள். சில அறிவிப்புகளில், இம்மூவரும் தங்களுக்கு உதவியாக ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் அழைத்துக் கொண்டார்கள் என கூறப்பட்டுள்ளது. (அபூதாவூத், பாகம் 5, பக்கம் 273)

ஹழரத் யஜீது இப்னு பிலால் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், "என்னைத் தவிர வேறு எவரும் தனக்கு குஸ்லு கொடுக்கக் கூடாது என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வஸியத்து (இறுதி விருப்பம்) செய்தார்கள். மேலும், தனது மறைவான உறுப்புக்களை எவரும் பார்க்கக் கூடாது என்றும், அவ்விதம் பார்ப்பவரின் பார்வை போய்விடும்" என்றும் கூறினார்கள். என்னுடன் முப்பது பேர் சுற்றி இருந்தார்கள். நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு குஸ்லு கொடுத்தேன். (இப்னு ஸஅது, பஜ்ஜார், பைஹகீ, கஸாயிஸுல் குப்ரா,பா 2, பக் 556)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், "நான் மரணித்துவிட்டால், நீர்தாம் எனக்கு குஸ்லு கொடுக்க வேண்டும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு வஸிய்யத் செய்தார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "எனக்கு அச்சமாக இருக்கிறது. நான் அதற்கு சக்தி பெருவேனா?" என்று கேட்டார்கள். (அச்சம் வேண்டாம்) நீர் உதவி செய்யப்படுவீர்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (கன்ஸுல் உம்மால், பாகம் 4, பக்கம் 133)

ஹழரத் ஷாமீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு குஸ்லு கொடுத்தார்கள். அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திரு மேனியின் மீது

நீரை வார்த்துக் கொண்டிருந்தார்கள். எனது தாயும் தந்தையும் தங்கள் மீது அர்ப்பணம் ஆகட்டும். தாங்கள் தங்களின் வாழ்விலும், மரணத்திலும் களிப்புடனேயே இருந்தீர்கள்” என்றும் கூறிக் கொண்டிருந்தார்கள். (இப்னு ஸஅத், பைஹகீ)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் குஸ்லு கொடுத்தார்கள். பொதுவாக மைய்யித்துக்களில் காணப்படும் எதுவும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திரு மேனியில் காணப்படவில்லை. அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், “எனது தாய் தந்தை தங்கள் மீது அர்ப்பணம் ஆகட்டும். தாங்கள் தங்களின் வாழ்விலும், மரணத்திலும் பரிசுத்த மானவராகவே இருந்தீர்கள்” என்று கூறினார்கள். (அஹ்மத், கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக்கம் 556)

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது கைகளின் மேல் துணியை சுற்றிக் கொண்டு, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமேனியிலிருந்த கமீஸில் தமது கைகளை நுழைத்து, மேலும் கீழுமாக தடவி சுத்தம் செய்தார்கள். (கன்ஸுல் உம்மால், பாகம் 4, பக்கம் 139)

ஹழரத் அப்துல்லாஹ் பின் ஹாரித் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு குஸ்லு கொடுத்தார்கள். அப்போது அவர்கள், “எனது தாயும் தந்தையும் தங்கள் மீது அர்ப்பணம் ஆகட்டும். தங்கள் வாழ்வும் எவ்வளவு பரிசுத்தமானதாக இருந்தது! தங்களின் மரணமும் எவ்வளவு பரிசுத்தமானதாக இருக்கிறது” என்றும் கூறினார்கள். அப்போது ஒரு வகையான நறுமணம் அங்கு பரவியது. அதைப் போன்ற நறுமணத்தை நாங்கள் முன் எப்போதும் நுகர்ந்ததில்லை. (இப்னு ஸஅத்)

குஸ்லு கொடுத்த பின் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கண் இமைகள் மற்றும் தொப்புளில் தேங்கி இருந்த நீரை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது புனித உதடுகளால் உறிஞ்சிக் கொண்டார்கள்! (அலியுல் முர்துஜா, பக்கம் 59)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லா ஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஏழு துணிகளைக் கொண்டு கபன் இடப்பட்டார்கள். ஹழரத் அலீ இப்னு ஹனபீயா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்

கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஏழு துணிகளைக் கொண்டு கபன் இடப்பட்டார்கள்”. இதன் ஸனது ஸஹீஹானது என்று கன்ஸூல் உம்மாவில் பதிவு செய்யப்பட்டுள்ளது. உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், மூன்று யமன் நாட்டு துணிகளைக் கொண்டு கபன் இடப்பட்டார்கள். ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “மூன்று யமன் நாட்டு துணியைக் கொண்டு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கபன் இடப்பட்டார்கள். (கன்ஸூல் உம்மால், பாகம் 4, பக்கம் 137, 139)

## ஜனாஸா தொழுகை:

"திங்களன்று நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் உயிர் கைப்பற்றப்பட்டது. செவ்வாயன்று ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள், அவர்களின் மீது (ஜனாஸாத் தொழுகை) தொழுதனர்". அறிவிப்பவர்: ஹழரத் அனஸ் இப்னு மாலிக் ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்கள், ஆதாரம்: திர்மிதீ.

ஹழரத் ஸயீத் இப்னு முஸய்யப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வஃபாத் ஆன பிறகு, அன்னாரின் திரு உடல் ஒரு பாயின் மீது வைக்கப்பட்டது. முஸ்லிம் பெருமக்கள் கூட்டம் கூட்டமாக வந்து ஜனாஸா தொழுகையை தொழுதுவிட்டு வெளியேறிக் கொண்டிருந்தார்கள். அங்கு இமாமாக எவரும் இருக்கவில்லை. (கன்ஸூல் உம்மால், பாகம் 4, பக்கம் 145)

## அல்லாஹ் பெருமை கொள்கிறான்:

அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைக் கொண்டு தற்பெருமை கொள்கிறான் என்று சுல்தானுல் அஸ்ஃபியா, தாஜுல் அவ்லியா, ஸய்யத் அமீர் கபீர் அலீ ஹமதானீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது ‘அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ’ என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்கள். அதற்கு ஆதாரமாக ஹழரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இந்த அறிவிப்பையும் பதிவு செய்துள்ளார்கள். “ஒவ்வொரு நாளும் வானவர்களின் முன்னிலையில் அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீது (தற்)பெருமை கொள்கிறான். ‘உமக்கு வாழ்த்துக்கள் உண்டாகட்டும், உமக்கு வாழ்த்துக்கள் உண்டாகட்டும், அலீ இப்னு

அபீதாலிபே!’ என்றும் கூறுகிறான்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் வஹப் பின் ஸஃபி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான் திருக்குர்ஆனின் அருட்கொடையைக் கொண்டு போர் புரிகிறேன். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களோ, குர்ஆனின் விளக்கத்தைக் கொண்டு போர் புரிகிறார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 69)

ஹழரத் ஹஸீஃபா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், “மனிதர்களில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடைய ஸ்தானம், திருக்குர்ஆனில் குல்ஹுவல்லாஹு ஸூராவைப் போன்றதாகும்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ பக்கம் 76)

## இரகசியம்:

நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாயிஃப் யுத்த நாள் அன்று ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு) அவர்களை அழைத்து, அவர்களின் காதில் ஏதோ கூறிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது மக்கள், "நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இரகசியப் பேச்சு அவர்களின் தந்தையுடன் பிறந்த சகோதர மகனிடம் நீண்டு விட்டது" என்று கூறினர். அப்பொழுது நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நான் அலீயுடன் இரகசியம் பேசவில்லை. அல்லாஹ்தான் அலீயுடன் இரகசியம் பேசினான்" (அதாவது: 'அல்லாஹ்வின் கட்டளைப்படிதான் நான் பேசினேன்') என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: திர்மிதீ.

ஹதீஸ் அறிவிப்பு

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஐநூறு ஹதீஸ்களை கூறியுள்ளார்கள் என்று ஹழரத் இமாம் ஸுயூத்தி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள். அவற்றில் நூற்று எண்பத்தாறு ஹதீஸ்களை ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் முஹம்மத் இப்னு ஹனீஃபா ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் அறிவித்திருக்கிறார்கள். மேலும், ஹழரத் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியோயல்லாஹு அன்ஹு, ஹழரத் இப்னு ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அபூ மூஸா ரலியல்லாஹு

அன்ஹு, ஹழரத் அபூ ஸயீத் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜைது இப்னு அர்கம் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு போன்றவர்களும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடமிருந்து ஹதீஸ்களை அறிவித்திருக்கிறார்கள்.

ஹழரத் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மூலமாக அறிவிக்கிறார்கள், மக்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம்,
“தாங்கள் மற்ற ஸஹாபாக்களை விட அதிகமாக ஹதீஸ்களைக் கூற காரணம் என்ன?” என்று கேட்டார்கள். அதற்கு ஹழரத் அவர்கள், “நான் கேட்கும் போதெல்லாம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனக்கு (விளக்கம்) கூறினார்கள். நான் அமைதியாக இருக்கும் போதும் என்னை அழைத்து (விளக்கம்) கூறினார்கள்” எனக் கூறினார்கள். (தாரீக் குலஃபா, பக்கம் 172, 174)

## அறிஞர் பெருமான்

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அறிவுக் கடலாகத் திகழ்ந்தார்கள். "நான் அறிவுலகத்தின் நகரம் என்றால், அலீ அதன் வாசலாவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே புகழ்ந்து கூறியிருக்கிறார்கள். மேலும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் இறை வசனங்களை எழுதக்கூடிய எழுத்தாளராகவும் இருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய கடிதங்களை எழுதக்கூடிய எழுத்தாளர்களில் ஒருவராகவும் இருந்தார்கள். ஹிஜ்ரி 6ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஹுதைபியா உடன்படிக்கையை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தான் எழுதினார்கள்.

குறைஷியர் தங்களுடன் ஸுஹைல் பின் அம்ரை இருக்கச் செய்து, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்தனர். (அப்பொழுது) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களிடம் "(முதலில்) 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்று எழுதுவீராக!" என்று கூறினார்கள். அப்போது ஸுஹைல், "பிஸ்மில்லாஹ்' என்பது சரி. (ஆனால்) பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்பது என்ன? அதை நாங்கள் அறியமாட்டோமே. எனவே, நாங்கள் அறிந்துள்ள 'பிஸ்மிக்கல்லாஹும்ம' என்னும் வாசகத்தையே எழுதுங்கள்" என்று கூறினார்.

(அவ்விதமே எழுதும்படி ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களிடம் அண்ணலார் கூறினார்கள்.) பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து... என்று எழுதுவீராக!" என்று (அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம்) கூறினார்கள். அப்போது குறைஷியர், "நீங்கள் அல்லாஹ்வின் தூதர்தாம் என்பதை நாங்கள் அறிந்திருப்போமாயின் நாங்கள் உங்களை பின்தொடர்ந்திருப்போம். மாறாக, 'அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மத்' என்று எழுதுங்கள்" என்று கூறினார்கள்.

எனவே, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களிடம் அ(ந்த வாசகத்)தை அழித்து விடுமாறு கூறினார்கள். அதற்கு ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள், "இல்லை, அல்லாஹ்வின் மீது ஆணையாக! அதை நான் அழிக்கவே மாட்டேன்" என்று கூறினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அந்த இடத்தை எனக்குக் காட்டுவீராக!" என்று கூறினார்கள். ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் அந்த (வாசகம் இருந்த) இடத்தைக் காட்டினார்கள்.

உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அதை (தமது கரத்தால்) அழித்துவிட்டார்கள். மேலும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களிடம்) "அப்துல்லாஹ்வின் புதல்வர் முஹம்மதிடமிருந்து என எழுதுவீராக" என்று கூறினார்கள். (அறிவிப்பவர்கள்: ஹழரத் அனஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, ஹழரத் பராஉ பின் ஆஸிப் ரலியல்லாஹுதஆலா அன்ஹு - ஆதாரம்: புகாரீ, முஸ்லிம்)

மேலும், "அலீ குர்ஆனோடிருப்பார். குர்ஆன் அலீயோடிருக்கும். இந்தப் பிணைப்பு கவ்ஃஸர் குளத்தருகே என்னை சந்திக்கும் வரை நிலைக்கும்" என்றும் நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளியுள்ளார்கள். (அறிவிப்பவர்: ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்கள்)

ஹழரத் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “மெய்யறிவு பத்து பாகங்களாக பிரிக்கப்பட்டது. அதில் ஒன்பது பாகங்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு வழங்கப்பட்டது. மீதி ஒரு பாகம் மற்ற அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டது” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். . (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ’, பக்கம் 85)

ஒருமுறை ஹழரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் ஒருவர் வந்து, சிக்கலான மஸ்அலா ஒன்றைக் கேட்டார். அதற்கான தீர்வைக் கூறுவது ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு கடினமாக இருந்தது. இதை அறிந்த ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஹழரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் வந்து, அதற்கான தீர்வைக் கூறினார்கள். உடனே, ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "இன்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் இல்லாமலிருந்தால், இந்த உமர் அழிவைக் கண்டிருப்பான்" என்று கூறினார்.

ஹழரத் ஸல்மான் பார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "எனக்குப் பிறகு எனது உம்மத்துக்களில் மிகப் பெரிய ஆலிம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தாம்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ', பக்கம் 74)

ஹழரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் அன்ஸாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கரத்தைப் பிடித்தவராக, "இவர் நல்லவர்களுக்கு இமாமாக இருக்கிறார். கெட்டவர்களுக்கு பகைவனாக இருக்கிறார். எவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை தனித்து விட்டு விடுகிறாரோ, அவரும் தனித்து விட்டு விடப்படுவார். எவர் அவருக்கு ஆதரவு கொடுக்கிறாரோ, அவருக்கு ஆதரவு கொடுக்கப் பெருவார்" என்று கூறினார்கள். பிறகு தமது குரலை உயர்த்தி, "நான் அறிவின் பட்டணமாக இருக்கிறேன். அலீ அதன் நுழைவாயிலாக இருக்கிறார். எவர் அறிவின் மீது நாட்டம் கொள்கிறாரோ, அவர் அந்த வாசலைத் தேடி வரட்டும்" என்று கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 73)

ஹழரத் அபூ தர்தா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் என்னுடைய இல்மின் (அறிவின்) நுழைவாயிலாக இருக்கிறார். எனக்கு கொடுத்து அனுப்பப்பட்ட அறிவு அனைத்தையும் எனக்குப் பிறகு எனது உம்மத்துக்களுக்கு பயான் செய்யக் கூடியவராக இருக்கிறார். அவர் மீது நேசம் கொள்வது முஃமின்களின் ஈமான் ஆகும். அவரைப் பகைப்பது பிரிவை ஏற்படுத்தும். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பார்ப்பதே ரஹ்மத்தாகும். அவர் மீது கொள்ளும் நேசம் இபாதத்து ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 77)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுஅன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ முர்துஜா கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் என்னிடம், “இப்னு அப்பாஸே! நீர் இஷாவை தொழுதுவிட்டு கபரஸ்தானுக்கு வந்துவிடுங்கள்” என்று கூறினார்கள். அதன்படி நான் இஷாவை தொழுதுவிட்டு கபரஸ்தான் சென்றடைந்தேன். நிலவின் ஒளியில் அந்த இரவு பிகாசமாக இருந்தது. அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், “அல்ஹம்து என்னும் சொல்லில் ‘அலிஃப்’ எழுத்தின் தஃப்ஸீர் என்ன?” என்று கேட்டார்கள். “நான் அறியமாட்டேன்” என்று நான் கூறினேன். உடனே, அதைப் பற்றி விளக்கம் கூறினார்கள்.

பிறகு, “அல்ஹம்து என்னும் சொல்லில் ‘லாம்’ என்னும் எழுத்தின் தஃப்ஸீர் என்ன?” என்று கேட்டார்கள். “நான் அறியமாட்டேன்” என்று கூறினேன். உடனே அதற்கான விளக்கத்தை மணிக் கணக்கில் கூறினார்கள். பிறகு, “அல்ஹம்து என்னும் சொல்லில் ‘ஹா’ எழுத்தின் தஃப்ஸீர் என்ன?” என்று கேட்டார்கள். “நான் அறியமாட்டேன்” என்று கூறினேன். உடனே மணிக் கணக்கில் அதற்கான விளக்கத்தைக் கூறினார்கள். பிறகு, “அல்ஹம்து என்னும் சொல்லில் ‘மீம்’ எழுத்தின் தஃப்ஸீர் என்ன?” என்று என்னிடம் கேட்டார்கள். “நான் அறிய மாட்டேன்” என்று கூறினேன். அதற்கான விளக்கத்தையும் எனக்குக் கூறினார்கள். பிறகு, “அல்ஹம்து என்னும் சொல்லில் ‘தால்’ எழுத்தின் தஃப்ஸீர் என்ன?” என்று கேட்டார்கள். “நான் அறியமாட்டேன்” என்று கூறினேன். உடனே, அதற்கான விளக்கத்தையும் கூறினார்கள்.

அதே சமயம் ஸஹருடைய நேரமும் வந்துவிட்டது! ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், “இப்னு அப்பாஸே! நீர் வீட்டிற்குச் சென்று, காலைத் தொழுகைக்கு தயாராகி வாருங்கள்” என்று கூறினார்கள். நான் ஹழரத் கூறிய விளக்கங்களை எல்லாம் மனதில் பதியவைத்தபடி வீட்டிற்குச் சென்றேன். திருக்குர் ஆனைப் பற்றிய என்னுடைய அறிவு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் அறிவுக்கு முன்னால், கடலுக்கு முன்னால் ஒரு குட்டை போலத் தோன்றியது. (பர்காதே ஆலே ரஸூல், பக்கம் 132)

அதனால்தான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஷஹீத் ஆனபோது, ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுஅன்ஹு அவர்கள், தமது பார்வையே பறிபோகும் அளவிற்கு அழுதார்கள்.

தாபியீன்களில் ஒருவரான ஹழரத் அதாஉ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம், “ஸஹாபா பெருமக்களில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை விட சிறந்த அறிஞர் பெருமான் இருந்தாரா?” என்று கேட்கப்பட்ட போது, “இல்லை. அவருக்கு

இணையாக எந்த ஒரு அறிஞுரையும் நான் அறியவில்லை” என்று கூறினார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களின் திருவாக்கிற்கு ஏற்ப, அன்னாருடைய காலத்திலேயே திருக்குர்ஆனை மனனம் செய்த ஹாபிழ்களில் ஒருவராக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் இருந்தார்கள். பிழையின்றியும், திருத்தமாகவும், இனிமையாகவும் திருக்குர்ஆனை ஓதக்கூடிய 'காரீ'யாகவும் இருந்தார்கள். திருக்குர்ஆனுக்கு பொருத்தமுடன் பொருள் விளக்கக்கூடிய 'முஃபஸ்ஸி'ராக இருந்தார்கள். "திருக்குர்ஆனிலே உங்களுக்கு என்ன தேவை? என்னிடம் கேளுங்கள். அதன் ஒவ்வொரு வசனம் பற்றியும் - அது பகலில் இறங்கியதா? இரவில் இறங்கியதா? மேட்டில் இறங்கியதா? பள்ளத்தாக்கில் இறங்கியதா? எதைப்பற்றி வேண்டுமானாலும் என்னிடம் கேளுங்கள். நான் சொல்கிறேன்" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களே கூறக் கூடியவர்களாக இருந்தார்கள். 'ஸய்யிதுல் முஃபஸ்ஸிரீன்' - திருக்குர்ஆன் விரிவுரையாளர்களின் தலைவர் - என்று சிறப்பிக்கப்படும் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களின் ஆசிரியராகவும் இருந்தார்கள்.

## நபியின் தூதர்:

‘பராஆ’ (அத்தியாயம் ஒன்பது) ஸூரத்துத் தவ்பாவில் தபூக் போரைப் பற்றிய பல்வேறு வசனங்கள் அருளப்பட்டன. அவற்றில் சில போருக்கு முன்பும், சில போரின் போதும், சில போர் முடிந்த போதும் அருளப்பட்டன. திருக்குர்ஆனில் “ஈமான் கொண்டவர்களே! நிச்சயமாக இணை வைத்து வணங்குவோர் அசுத்தமானவர்களே; ஆதலால், அவர்களின் இவ்வாண்டிற்குப் பிறகு சங்கை மிகுந்த இப்பள்ளியை (கஃபத்துல்லாஹ்வை) அவர்கள் நெருங்கக்கூடாது” என்னும் 28வது வசனம் அருளப் பட்டதையும், நிர்வாணமாக தவாஃப் செய்யக் கூடாது என்பதையும் அரஃபாவில் கூடும் மக்களிடையே ஓதிக் காட்டிட ஹழரத் அபூபக்ர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களை அமீருல் ஹஜ்ஜாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.

அவர்கள் புறப்பட்டுச் சென்ற பிறகு ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, 'ஒப்பந்தங்கள் எழுதப்படுவதைப் போலவே, அவற்றை நீக்கும் பொழுதும் அல்லது மாற்றும் பொழுதும் அவை ஒப்பந்தம் செய்தவராலோ அல்லது அவருக்கு நெருங்கிய உறவினராலோதான் அறிவிக்கப்பட வேண்டும்' என்பதை நினைவு படுத்தினார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ

கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை அனுப்பி அரஃபாவில் அவ்வசனங்களை ஓதிக்காட்டும்படி கூறினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் நபிபெருமானாரின் தூதராகச் சென்று, ஒன்பதாவது அத்தியாயத்தை மக்களுக்கு ஓதிக் காண்பித்தார்கள்.

நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் செய்த இறுதி ஹஜ்ஜூக்கு முன்னுள்ள ஹஜ்ஜில் நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களால் தலைவராக நியமித்து அனுப்பி வைக்கப்பட்ட ஹழரத் அபூபக்ர் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள், ஹழரத் அபூஹூரைரா ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்களை ஒரு கூட்டத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள். அடுத்த ஆண்டு இணைவைப்போர் எவரும் ஹஜ்ஜூக்கு வரக்கூடாதென்றும், நிர்வாணமாக கஅபாவை சுற்றிவரக் கூடாதென்றும் ஹழரத் அபூஹூரைரா ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்கள் பெருநாள் அன்று அங்கு கூடியிருந்தவர்களிடம் எச்சரிக்கை செய்தார்கள்.

பின்னர் நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அபூபக்ர் ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்களின் பின்னாலேயே ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களைத் தங்களது வாகனத்தில் (ஒட்டகத்தில்) ஏற்றி, அவர்களும் (ஹஜ்ஜூக்கு) சென்று மக்களுக்கு ஒன்பதாவது அத்தியாயத்தை ஓதி உணர்த்துமாறு அனுப்பி வைத்தனர். எனவே ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களும் எங்களுடன் மினாவுக்கு வந்து மக்களுக்கு ஒன்பதாவது அத்தியாயத்தை ஓதி அறிவித்து விட்டு, அடுத்த ஆண்டு இணைவைப்போர் எவரும் ஹஜ்ஜூக்கு வரக்கூடாது என்றும், நிர்வாணமாக கஅபாவை சுற்றி தவாஃபு செய்யக் கூடாதென்றும் அறிவித்துவிட்டனர். அறிவிப்பவர்: ஹழரத் அபூஹூரைரா ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள், ஆதாரம்: புகாரீ, முஸ்லிம், அபூதாவூத், நஸாயீ.

ஹழரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் ஸூரத்துத் தவ்பாவைக் கொடுத்து (புனித கஃபாவை நோக்கி) அனுப்பினார்கள். பிறகு அன்னாரை திரும்ப அழைத்து, "ஒப்பந்தங்கள் எழுதப்படுவதைப் போலவே, அவற்றை நீக்கும் பொழுதும் அல்லது மாற்றும் பொழுதும் அவை ஒப்பந்தம் செய்தவராலோ அல்லது அவருக்கு நெருங்கிய உறவினராலோதான் அறிவிக்கப்பட வேண்டும்'" என்று கூறினார்கள். அதன் பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை அழைத்து

அவர்களிடம் ஸூரத்துத் தவ்பாவை வழங்கினார்கள். (இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 83)

ஹழரத் ஜைத் பின் ஸபீஆ, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வாயிலாக அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், அத்தியாயம் ஒன்பது, ஸூரத்துத் தவ்பாவை ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கொடுத்து திருமக்காவின் பக்கம் அனுப்பினார்கள். பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை அழைத்து, "எழுதப்பட்ட வாசகத்தை (ஸூரத்துத் தவ்பாவை) ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடமிருந்து பெற்று மக்காவாசிகளிடம் சொல்லும்படி உத்தரவிட்டு, ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பின்னாலேயே அனுப்பி வைத்தார்கள்.

எனவே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அடைந்து, அன்னாரிடமிருந்து எழுதப்பட்ட வாசகத்தைப் பெற்றுக் கொண்டார்கள். அதனால் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மனக் கிலேசத்துடன் திரும்பி வந்தார்கள். அப்போது மக்கள், "யா ரஸூலுல்லாஹ்! (இதைப் பற்றி ஏதாவது) வசனம் அருளப் பட்டதா?" என்று கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "இல்லை! ஆயினும், இந்த செய்தியை நானோ, அல்லது எனது நெருங்கிய உறவினரோதான் (மக்களிடம்) சேர்ப்பிக்க வேண்டும் என்று அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் எனக்கு உத்தரவிட்டுள்ளான்" என்று கூறினார்கள். (இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 84)

ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், புனித ஹஜ்ஜூக்காக ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அனுப்பி வைத்தார்கள். நாங்களும் அவர்களுடன் இருந்தோம். 'அர்ஜ்' என்னும் இடத்தில் காலைத் தொழுகைக்காக ஆடை விரிக்கப்பட்டது. தக்பீர் கட்ட நிற்கும் நேரத்தில் பின்புறத்திலிருந்து ஒரு ஒட்டகத்தின் கதறல் சத்தம் கேட்டது. எனவே தக்பீர் கட்டுவதை தாமதம் செய்து பார்த்த போது, அந்த ஒட்டகம் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் ஒட்டகமான 'ஜத்ஆ' என்பது தெரிந்தது. ஹஜ்ஜை நிறைவேற்ற அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களே வந்துவிட்டார்கள் போலும்" என்று நாங்கள் எண்ணினோம்.

ஆனால், ஒட்டகத்தின் மேலிருந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் இறங்கி வருவதைக் கண்டு, ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் முன் சென்று, நீங்கள்

அமீராக வந்திருக்கிறீர்களா? அல்லது தூதராக வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "நான் அமீராக வரவில்லை. தூதராகவே வந்துள்ளேன். புனித ஹஜ்ஜில் ஸூரத்துத் தவ்பாவை ஜனங்கள் மத்தியில் ஓதிக்காட்டும்படி அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னை அனுப்பியுள்ளார்கள்" என்று கூறினார்கள். பிறகு நாங்கள் அனைவரும் திருமக்காவை அடைந்தோம். ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜனங்களை நோக்கி ஹஜ்ஜு பற்றி (பிரார்த்தனைக்கான இடங்கள் பற்றி) கூறினார்கள். அதன் பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஜனங்களுக்கு ஸூரத்துத் தவ்பாவை இறுதி வரை ஓதிக் காட்டினார்கள். (இமாம் நஸாயீ, கஸாயிஸ் அலீ, பக்கம் 86)

## அஹ்லுல்பைத்:

**வசனம்:**

**أَم يَحسُدونَ النّاسَ عَلىٰ ما آتاهُمُ اللَّهُ مِن فَضلِهِ ۖ فَقَد آتَينا آلَ إِبراهيمَ الكِتابَ وَالحِكمَةَ وَآتَيناهُم مُلكًا عَظيمًا**

"அல்லாஹ் தன் அருளினால் மனிதர்களுக்கு வழங்கியவற்றின் மீது இவர்கள் பொறாமை கொள்கின்றார்களா?" அத்தியாயம் 4, ஸூரத்துன்னிஸாவு, வசனம் 54.

ஹழரத் இமாம் முஹம்மத் பாகிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேற்படி வசனத்தின் தஃப்ஸீரில், "அல்லாஹ் தன் அருளினால் மனிதர்களுக்கு வழங்கியவற்றின் மீது" என்று குறிப்பிட்டுக் கூறியிருப்பது அஹ்லுல்பைத்துக் களைத்தான்" என்று கூறியுள்ளார்கள். (அபுல் ஹஸன், அல் மனாஸிலீ, இமாம் இப்னு ஹஜர், ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 341)

**வசனம்:**

**وَاعتَصِموا بِحَبلِ اللَّهِ جَميعًا وَلا تَفَرَّقوا ۚ وَاذكُروا نِعمَتَ اللَّهِ عَلَيكُم إِذ كُنتُم أَعداءً فَأَلَّفَ بَينَ قُلوبِكُم فَأَصبَحتُم بِنِعمَتِهِ إِخوانًا وَكُنتُم عَلىٰ شَفا حُفرَةٍ مِنَ النّارِ فَأَنقَذَكُم مِنها ۗ كَذٰلِكَ يُبَيِّنُ اللَّهُ لَكُم آياتِهِ لَعَلَّكُم تَهتَدونَ**

“இன்னும், நீங்கள் எல்லோரும் அல்லாஹ்வின் கயிற்றை வலுவாக பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்; நீங்கள் பிரிந்து விடாதீர்கள்;” அத்தியாயம் 3, ஸூரத்துல் ஆல இம்ரான், வசனம் 103.

“மேற்படி வசனத்தில் கூறப்பட்டிருக்கும் ‘அல்லாஹ்வின் கயிறு’ என்பது அஹ்லுல் பைத்துக்களையே குறிக்கும்” என்று ஹழரத் இமாம் ஜஃபர் ஸாதிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள். (இமாம் ஸஅலபீ, இமாம் இப்னு ஹஜர், ஹழரத் அலீ இப்னு அபி தாலிப், பக்கம் 341)

**வசனம்:**

**وَقَرنَ في بُيوتِكُنَّ وَلا تَبَرَّجنَ تَبَرُّجَ الجاهِلِيَّةِ الأولىٰ ۖ وَأَقِمنَ الصَّلاةَ وَآتينَ الزَّكاةَ وَأَطِعنَ اللَّهَ وَرَسولَهُ ۚ إِنَّما يُريدُ اللَّهُ لِيُذهِبَ عَنكُمُ الرِّجسَ أَهلَ البَيتِ وَيُطَهِّرَكُم تَطهيرًا**

"(நபியின்) வீட்டையுடையவர்களே! உங்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் நாடுகிறான்." அத்தியாயம் 33, ஸூரத்துல் அஹ்ஜாப், வசனம் 33.

மேற்கண்ட திருக்குர்ஆன் வசனத்தில் அஹ்லுல் பைத்துகளை விட்டும் அசுத்தங்களை நீக்கி பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் நாடுகிறான்” என கூறப்பட்டுள்ளது. ஆயினும் அஹ்லுல் பைத்துகள் என்போர் யார் என்பதில் முஃபஸ்ஸிரீன்களிடையே (திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள்) சில கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஒரு பிரிவினர், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரே அஹ்லுல் பைத்துக்கள் ஆவார்கள் என கூறுகின்றனர்.

இரண்டாம் பிரிவினர் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கைத் துணைவியர்கள் அனைவரும் அஹ்லுல் பைத்துக்களில் அடங்குவர் என கூறியுள்ளனர். சிலரோ, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹூல் கரீம், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கைத் துணைவியர் ஆகிய அனைவரும் அஹ்லுல் பைத்துக்களில் அடங்குவர் என கூறியுள்ளனர். (பர்காதே ஆலே ரஸூல் – இமாம் நபஹானீ, பக்கம்37) ஹழரத் ஜைத் இப்னு அர்கம்

ரலியல்லாஹு அன்ஹு அவர்களோ, "ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சித்தப்பா, அவர்களுடைய பிள்ளைகளும் அஹ்லுல் பைத்துக்களில் அடங்குவர்" என கூறியுள்ளார். (பக்கம் 41)

ஹழரத் இமாம் ஜலாலுத்தீன் ஸுயூத்தி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் 'துர்ருல் மன்சூர்' என்னும் தஃப்ஸீர் நூலில், மேற்கண்ட வசனத்துக்கான தஃப்ஸீரில் மூன்று ஹதீஸ்களை பதிவு செய்து, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கைத் துணைவியர்கள் அனைவரும் அஹ்லுல் பைத்துக்களில் அடங்குவர் என எழுதியுள்ளார்கள். அதன் பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய 'ஐம்பெரும் பரிசுத்தவான்'களே அஹ்லுல் பைத்தினர் என்பதற்கு ஆதாரமாக இருபது ஹதீஸ்களை பதிவு செய்திருக்கிறார்கள்.

ஹழரத் இமாம் இப்னு ஜரீர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது தஃப்ஸீர் நூலில் பதினைந்து ஹதீஸ்களை பதிவு செய்து, ஐம்பெரும் பரிசுத்தவான்களே அஹ்லுல் பைத்தினர் என எழுதியுள்ளார்கள். அதன் பிறகு உம்மஹாத்துல் முஃமினீன் அவர்களே அஹ்லுல் பைத்தினர் என்பதற்கு ஒரு ஹதீஸை மட்டுமே ஆதாரமாக கூறியுள்ளார்கள். (பர்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 37)

"(நபியின்) வீட்டையுடையவர்களே! உங்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் நாடுகிறான்."

என்னும் வசனம் அருளப்பட்ட பொழுது நான் நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வீட்டு வாயிலில் அமர்ந்திருந்தேன். வீட்டினுள் நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா (ரலியல்லாஹுதஆலா அன்ஹா), ஹழரத் இமாம் ஹஸன் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு), ஹழரத் இமாம் ஹுஸைன் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) ஆகியோர் இருந்தனர். அப்பொழுது, நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவர்களை ஒரு போர்வையில் போர்த்திக் கொண்டு, "இறைவனே! நிச்சயமாக, இவர்கள்தாம் என் குடும்பத்தினர்.

எனவே நீ இவர்களை விட்டும் எல்லா அசுத்தங்களையும் நீக்கி முற்றிலும் பரிசுத்தமாக்கி விடுவாயாக!" என்று கூறி(இறைஞ்சி)னர்.

அப்பொழுது நான், "நாயகமே! நான் நபியின் வீட்டினர் இல்லையா?" என்று கேட்டேன். அதற்கு நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நிச்சயமாக, நீர் மிகவும் மேலானவரே. நபியுடைய மனைவியரில் உள்ளவரும்தாம்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள், ஆதாரம்: திர்மிதீ. ஐம்பெரும் பரிசுத்தவான்கள் பற்றிய இந்த ஹதீஸை, ஹழரத் வாஸிலா, ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஜஃபர், ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரும் அறிவித்திருக்கிறார்கள். (ஹழரத் அலீ, ஹழரத் ஷாஹ் வலியுல்லாஹ் திஹல்வி, பக்கம் 70)

ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறினார்கள், "ஒருநாள் காலையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒட்டகச் சேணத்தின் உருவம் பொறிக்கப்பட்ட கருப்பு நிற கம்பளிப் போர்வை அணிந்துக் கொண்டு புறப்பட்டார்கள். அப்போது (அண்ணலாரின் பேரர்) ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வந்தார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை (தமது போர்வைக்குள்) நுழைத்துக் கொண்டார்கள். பிறகு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அவர்களையும் தமது போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள்.

**وَقَرنَ في بُيوتِكُنَّ وَلا تَبَرَّجنَ تَبَرُّجَ الجاهِلِيَّةِ الأولىٰ ۖ وَأَقِمنَ الصَّلاةَ وَآتينَ الزَّكاةَ وَأَطِعنَ اللَّهَ وَرَسولَهُ ۚ إِنَّما يُريدُ اللَّهُ لِيُذهِبَ عَنكُمُ الرِّجسَ أَهلَ البَيتِ وَيُطَهِّرَكُم تَطهيرًا**

பிறகு, (சுவனத் தலைவியும், அருமை மகளுமான) ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வந்த போது, அவர்களையும் (தமது போர்வைக்குள்) நுழைத்துக் கொண்டார்கள். அதன் பிறகு, (தமது மருமகர்) ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வந்த போது அவர்களையும் தங்களின் போர்வைக்குள் நுழைத்துக் கொண்டார்கள். பிறகு, "(நபியின்) வீட்டையுடையவர்களே! உங்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் நாடுகிறான்" என்னும் அத்தியாயம் 33, ஸூரத்துல் அஹ்ஜாப், வசனம் 33ஐ ஓதிக் காட்டினார்கள். (முஸ்லிம்) இந்த ஹதீஸை ஹழரத் இமாம் இப்னு அபீ ஷைபா, ஹழரத் இமாம் அஹ்மத், ஹழரத் இமாம் இப்னு ஜரீர், ஹழரத் இமாம் இப்னு அபூ ஹாதிம், ஹழரத் இமாம் ஹாகிம் போன்றவர்களும் அறிவித்துள்ளனர்.

ஹழரத் இமாம் இப்னு ஜரீர், ஹழரத் இமாம் இப்னு மன்ஸர், ஹழரத் இமாம் அபூ ஹாதிம், ஹழரத் இமாம் தப்ரானீ, ஹழரத் இமாம் இப்னு மர்தூயா ரஹ்மதுல்லாஹி அலைஹிம் ஆகியோர், உம்முல் முஃமினீன் ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் மூலமாக கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனது வீட்டில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தமது திரு உடல் மீது ஒரு போர்வையை போர்த்திக் கொண்டிருந்தார்கள்.

அப்போது அன்னாரின் திருப் புதல்வியும், சுவனத் தலைவியுமான ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், கைமா கறியுடன் மாவு கலந்து சமைத்த உணவை ஒரு பாத்திரத்தில் கொண்டு வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "திருமகளே! நீர் உமது கணவரையும், உமது குழந்தைகளையும் அழைத்து வாரும்" என்று கூறினார்கள். அதன்படியே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரை அழைத்து வந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், அனைவருடனும் சேர்ந்து உணவு உண்டார்கள்.

அச்சமயம், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது "(நபியின்) வீட்டையுடையவர்களே! உங்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கிவிடவே அல்லாஹ் நாடுகிறான்." என்னும் வசனம் இறக்கி அருளப்பட்டது. உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரை தமது போர்வையால் போர்த்திக் கொண்டார்கள். பிறகு தமது திருக்கரங்களை வானத்தின் பக்கம் ஏந்தியபடி, "யா அல்லாஹ்! இவர்கள்தான் எனது அஹ்லுல் பைத்தினர். இவர்களை விட்டும் அசுத்தங்களை நீக்கி விடுவாயாக. முற்றிலும் பரிசுத்தமாக்கி விடுவாயாக" என்று மூன்று முறை துஆ செய்தார்கள்.

அப்போது உம்முல் முஃமினீன் ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் தமது தலையை போர்வைக்குள் நுழைத்து, "யா ரஸூலுல்லாஹ்! நானும் உங்களுடன் இருக்கிறேனா?" என்று கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நீர் 'ஃகைர்'ல் (சிறப்பு, நன்மை) உள்ளவர்தாம்" என்று இரண்டு முறை கூறினார்கள். (பர்காத்தே ஆலே ரஸூல் – இமாம் நபஹானீ, பக்கம் 38)

ஹழரத் யஸீத் பின் ஹய்யான் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், நானும், ஹழரத் ஹுஸைன் பின் ஸப்ரா மற்றும் ஹழரத் உமர் பின் முஸ்லிம் ரஹ்மதுல்லாஹி அலைஹிம் ஆகியோரும், ஹழரத் ஸைத் பின் அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சென்றோம். ஹழரத் ஹுஸைன் பின் ஸப்ரா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், "ஹழரத் ஸைத் அவர்களே! தாங்கள் பல்வேறு நன்மைகளைப் பெற்றுள்ளீர்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கண்டுள்ளீர்கள். அவர்களிடமிருந்து ஹதீஸ்களை கேட்டுள்ளீர்கள். அவர்களுடன் சேர்ந்து அறப்போர்களில் கலந்துக் கொண்டுள்ளீர்கள். அவர்களுக்குப் பின்னால் தொழுதுள்ளீர்கள். ஹழரத் ஸைத் அவர்களே! தாங்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்து செவியுற்ற ஹதீஸை எங்களுக்கு அறிவியுங்கள்" என்று கேட்டார்கள். அதற்கு ஹழரத் ஸைத் பின் அர்கம் அவர்கள், "ஒரு நாள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மக்காவுக்கும் மதீனாவுக்கும் இடையில் உள்ள 'கும்மு' என்னும் நீர்நிலை அருகே, நின்று உரையாற்றினார்கள். அப்போது அவர்கள், அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்த பின், "இறைவாழ்த்துக்குப் பின்! மக்களே, கவனியுங்கள். நானும் ஒரு மனிதனே. (என் உயிரைக் கைப்பற்றும்) என் இறைவனின் (மரண) தூதர் வரும் காலம் நெருங்கிவிட்டது. அவரது அழைப்பை நான் ஏற்றுக் கொள்வேன். நான் உங்களிடையே கனமான இரண்டு விஷயங்களை விட்டுச் செல்கிறேன். அவற்றில் ஒன்று அல்லாஹ்வின் வேதமாகும். அதில் நல்வழியும், பேரொளியும் உள்ளது. ஆகவே, அல்லாஹ்வின் வேதத்தை ஏற்று அதை நன்றாக பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்" என்று கூறி அல்லாஹ்வின் வேதத்தின்படி வாழுமாறு ஆர்வமூட்டினார்கள்.

பிறகு, "(மற்றொன்று) என்னுடைய அஹ்லுல்பைத் என்னும் குடும்பத்தார் ஆவார்கள். என் குடும்பத்தார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளையும், கண்ணியத்தையும் பேணுமாறு) உங்களுக்கு நான் அல்லாஹ்வின் பெயரால் நினைவூட்டுகிறேன். என் குடும்பத்தார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளையும், கண்ணியத்தையும் பேணுமாறு) உங்களுக்கு நான் அல்லாஹ்வின் பெயரால் நினைவூட்டுகிறேன்" என்று மூன்று முறை கூறினார்கள்.

மற்றொரு ஹதீஸில், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தார் யார்? அவர்களில் அண்ணலாரின் வாழ்க்கைத் துணைவியரும் அடங்குவார்களா?" என்று நாங்கள் கேட்டோம். அதற்கு ஹழரத் ஸைத் பின் அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "வாழ்க்கைத் துணைவியர்களா? இல்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஒரு பெண் ஒரு ஆணுடன் குறிப்பிட்ட சில காலம் (மனைவியாக சேர்ந்து) இருப்பார்கள். பின்னர் அவளை அவன் தலாக் (மணவிலக்கு) செய்துவிட்டால், அவள் தன்

தந்தையிடமோ, அல்லது தன் குடும்பத்தாரிடமோ திரும்பிச் சென்று விடுவாள். அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தார் என்பது, அண்ணலாருடைய மூல உறவினர்களும், அண்ணலாருக்குப்பின் ஸதகா (தர்மம்) பெறுவது தடை செய்யப்பட்ட, அண்ணலாருடைய தந்தை வழி உறவினர்களுமே ஆவார்கள்" என்று பதிலளித்தார்கள்" என்றும் கூறப்பட்டுள்ளது. (ஸஹீஹ் முஸ்லிம், 4782, 4783, பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம்ன் 51)

ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் உங்களிடம், உங்களை வழிதவறச் செய்யாத இரண்டு விஷயங்களை விட்டுச் செல்கிறேன். அவற்றில் ஒன்று திருக்குர்ஆன் என்னும் வேத நூலாகும். மற்றது, அஹ்லுல்பைத் என்னும் என்னுடைய குடும்பத்தார்களாகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 54)

ஹழரத் தப்ரானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களிடம், தங்களின் உறவினர்கள் என்பவர்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், எனது திருப் புதல்வியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர்" என்று கூறினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 10, அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2575)

ஹழரத் அபூ ஸயீத் குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஸூரத்துல் அஹ்ஜாப் 33வது வசனம் அருளப்பட்ட பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் தொடர்ந்து நாற்பது நாட்கள் ஃபஜ்ருடைய நேரத்தில், தமது திருப் புதல்வியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் வீட்டிற்குச் சென்று, "என்னுடைய அஹ்லல்பைத்தினரே! உங்கள் மீது அல்லாஹ்வின் சாந்தியும், ரஹ்மத்தும், பரக்கத்தும் உண்டாவதாக! நீங்கள் தொழுகையைப் பேணுங்கள். அல்லாஹ் உங்கள் மீது கருணை புரிவான்" என்று கூறி வந்தார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 10)

(நபியே!) இதுபற்றிய முழு விபரமும் உமக்கு வந்து சேர்ந்த பின்னரும் எவரேனும் ஒருவர் உம்மிடம் இது குறித்து தர்க்கம் செய்தால்: "வாருங்கள்! எங்கள் புதல்வர்களையும், உங்கள் புதல்வர்களையும், எங்கள் பெண்களையும், உங்கள் பெண்களையும்; எங்களையும், உங்களையும் அழைத்து (ஒன்று திரட்டி வைத்துக் கொண்டு) 'பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்' என்று நாம் பிரார்த்திப்போம்" என நீர் கூறும்.

فَمَن حاجَّكَ فيهِ مِن بَعدِ ما جاءَكَ مِنَ العِلمِ فَقُل تَعالَوا نَدعُ أَبناءَنا وَأَبناءَكُم وَنِساءَنا وَنِساءَكُم وَأَنفُسَنا وَأَنفُسَكُم ثُمَّ نَبتَهِل فَنَجعَل لَعنَتَ اللَّهِ عَلَى الكاذِبينَ

என்னும் அத்தியாயம் 3, ஸூரத்துல் ஆல இம்ரான், வசனம் 61 அருளப்பட்டபோது நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்), ஹழரத் ஃபாத்திமா (ரலியல்லாஹூதஆலா அன்ஹா), ஹழரத் இமாம் ஹஸன் (ரலியல்லாஹூதஆலா அன்ஹூ), ஹழரத் இமாம் ஹூஸைன் (ரலியல்லாஹூதஆலா அன்ஹூ) ஆகியவர்களை அழைத்து, "இறைவனே! இவர்கள்தாம் என் குடும்பத்தினர்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் ஸஃதுப்னு அபீவக்காஸ் ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்கள், ஆதாரம்: திர்மிதீ.

ஹழரத் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “என்னுடைய அஹ்லுல் பைத்தினர் மீது ஒரு நாள் அன்பு கொள்வது, ஒரு ஆண்டு இபாதத்து செய்வதை விட மேலானதாகும். எவர் அவ்விதம் அன்பு கொண்ட நிலையிலேயே இறந்துவிடுகிறாரோ, அவர் சுவனம் செல்வார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 97)

ஹழரத் அபூதர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “என்னுடைய அஹ்லுல் பைத்துடைய உதாரணம், ஹழரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பலைப் போன்றதாகும். எவர் அதில் ஏறிக் கொண்டாரோ அவர் வெற்றியடைந்தார். எவர் (அதில் ஏறுவதை விட்டும்) புறக்கணித்தாரோ, அவர் நஷ்டமடைந்தார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஹ்மத், அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2572, பக்கம் 310)

ஹழரத் இமாம் அஹ்மத் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரின் கரங்களைப் பிடித்தபடி, “எவர் என்னுடனும், இவர்கள் இருவருடனும், இவர்களுடைய தந்தையிடமும் நேசம் கொள்கிறாரோ, அவர் கியாமத்து நாளில் என்னுடன் இருப்பார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 248)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், “உங்கள் பிள்ளைகளுக்கு மூன்று விஷயங்களைக்

கற்றுக் கொடுங்கள்.1.அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது நேசம் கொள்வது. 2.அஹ்லுல் பைத்தினர் மீது நேசம் கொள்வது. 3.திருக் குர்ஆனை ஓதுவது.

ஹழரத் அபூ ஹூரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஷஃபாஅத் அளிப்பவை ஐந்தாகும். 1,திருக்குர்ஆன், 2.உங்களுடைய நபி (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்), 3.உங்கள் நபியுடைய அஹ்லுல் பைத்துகள், 4.கருணை, 5.அமானிதம் ஆகியவைகளாகும். (தைலமீ, ஹழரத் அலீ இப்னு அபி தாலிப், பக்கம் 354)

“நட்சத்திரங்கள் சென்றுவிட்டால், வானத்தைச் சேர்ந்தவர்களும் சென்றுவிடுவார்கள். என்னுடைய அஹ்லுல்பைத்தினர் சென்றுவிட்டால், இந்த பூமியைச் சேர்ந்தவர்களும் சென்று விடுவார்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பர்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 72)

“மஹஷர் நாளில் நான் நான்கு நபர்களுக்கு சிபாரிசு செய்வேன். முதலாவதாக, என்னுடைய அஹ்லுல் பைத்தினர் மீது நேசம் கொண்டவர். இரண்டாவது, என்னுடைய அஹ்லுல் பைத்தினரின் தேவைகளை பூர்த்தி செய்தவர். மூன்றாவது, என்னுடைய அஹ்லுல் பைத்தினர் இயலாதவர்களாக, உதவி நாடி வரும் போது, அவருடன் கண்ணியமாக நடப்பவர். நான்காவது, என்னுடைய அஹ்லுல் பைத்தினர் மீது கொண்ட நேசத்தை மனதாலும், சொல்லாலும் உறுதியுடன் கூறியவர்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 12)

“என்னுடைய அஹ்லுல் பைத்தினரும், அவர்களை நேசிக்கக் கூடிய எனது உம்மத்தினரும் நாளை மஹஷர் நாளில், கலிமா விரலும் நடு விரலும் போல் ஒன்றாக சேர்ந்து என்னுடைய (கவ்ஸர்) தடாகத்தில் பிரவேசிப்பார்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 245)

“அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா மீது நேசம் கொள்ளுங்கள். அவன் தன்னுடைய அருட்கொடையால் உங்களுக்கு ஆகாரத்தை அளிக்கிறான்! அல்லாஹ்வின் நேசத்தை அடைவதற்காக என் மீது நேசம் கொள்ளுங்கள். என்னுடைய நேசத்தை அடைவதற்காக என் அஹ்லுல்பைத்தினர் மீது நேசம் கொள்ளுங்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் கூறினார்கள். (ஸஹீஹ் திர்மிதீ)

وَلَسَوفَ يُعطيكَ رَبُّكَ فَتَرضىٰ

“இன்னும் உம்முடைய இறைவன் வெகு சீக்கிரம் உமக்கு (உயர் பதவிகளைக்) கொடுப்பான். அப்பொழுது நீர் திருப்தியடைவீர்” என்னும் அத்தியாயம் 93, ஸூரத்துள் ளுஹா, வசனம் 5 ஐ, வல்ல அல்லாஹ் அருளினான். இந்த வசனம் பற்றிய தஃப்ஸீரில், “அஹ்லுல்பைத்துக்களில் எவரையும் ஜஹன்னம் என்னும் நரகில் புகவிடலாகாது என்பது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் விருப்பமாக இருந்தது. அதை வல்ல அல்லாஹ் ஏற்றுக் கொண்டான். அதன் பொருட்டு அண்ணலார் திருப்தி அடைந்தார்கள்” என்று கூறப்பட்டுள்ளது. (தஃப்ஸீர் குர்துபி, பாகம் 10, பக்கம் 394, பர்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 59)

ஹழரத் இம்ரான் பின் ஹஸீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “என்னுடைய அஹ்லுல் பைத்திலிருந்து எவரையும் ஜஹன்னம் என்னும் நரகத்தில் நுழைய விடக்கூடாது” என்று நான் அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலாவிடம் துஆ செய்தேன். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் என்னுடைய இந்த துஆவை ஏற்றுக்கொண்டான்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

“நிச்சயமாக! எனது திருப் புதல்வி ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் தமது புனிதத் தன்மையை பேணிக் காத்ததினால், வல்ல அல்லாஹ் அவர் மீதும், அவரது (வமிச) பிள்ளைகள் மீதும் நெருப்பை ஹறாம் ஆக்கினான்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இநத ஹதீஸ் ஸஹீஹ் என்பதாக ஹழரத் இமாம் ஹாகிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல் - இமாம் நபஹானீ, பக்கம் 59)

“கியாமத்து நாளில் எல்லா தொடர்புகளும், எல்லா உறவுகளும் முறிந்து போகும், என்னுடைய தொடர்பும், என்னுடைய உறவும் தவிர” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பர்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 59)

“எவர் என்னுடைய அஹ்லுல் பைத்தினர் மீது நேசம் கொண்ட நிலையில் இறந்துவிடுகிறாரோ, அவர் ஷஹீதுடைய (உயிர் தியாகி) நிலையில் இறந்தவராவார். எவர் என்னுடைய அஹ்லுல் பைத்தினர் மீது பகை கொண்ட நிலையில் இறக்கிறாரோ, அவர் காபிராக இறந்தவராவார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (தஃப்ஸீர் கபீர்)

ஹழரத் இமாம் தைலமீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், “எவர் ஒருவர் என்னுடைய வஸீலாவை தேடுகிறாரோ, எவர் கியாமத்து நாளில் என்னுடைய ஷஃபாஅத்து என்னும் பரிந்துரையை பெற நாட்டம் கொள்கிறாரோ, அவர் என்னுடைய

அஹ்லுல் பைத்தினருக்கு பணிவிடை செய்யட்டும். அவர்களை சந்தோஷமாக வைத்துக் கொள்ளட்டும்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 245)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், “எவர் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நேசிக்கிறாரோ, அவர் என்னையும் நேசித்தவராவார்”என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2577, பக் 312.

“எனது அஹ்லுல்பைத்தினரை உங்கள் மத்தியில் (உயர்ந்த) இடத்தைக் கொடுங்கள். உடலில் தலையின் இடத்திலும், தலையில் கண்களின் இடத்திலும் இருக்கச் செய்யுங்கள். ஏனெனில், கண்களைக் கொண்டே தலை நேர்வழியை பெறுகிறது” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். ஹழரத் இமாம் ஹாகிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இதை அறிவித்தும், இது ஸஹீஹ் என்றும் கூறியுள்ளனர். (பர்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 72)

ஹழரத் மிக்தாத் இப்னு அஸ்வத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஆலே முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய மஃரிபத், ஜஹன்னம் என்னும் நரகத்திலிருந்து விடுதலை ஆகும். ஆலே முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அன்பு, ஸிராத் பாலத்தைக் கடக்கச் செய்யும். ஆலே முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய விலாயத், தண்டனைகளிலிருந்து பாதுகாப்பு ஆகும்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். . (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 101)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், “எவர் எம்மீதும், எம்முடைடைய அஹ்லுல் பைத்தினர் மீதும் பகையோ அல்லது பொறாமையோ கொள்வாராயின், அவர் கியாமத்து நாளில் என்னுடைய கவ்ஸர் தடாகத்தை நெருங்கும் போது நெருப்பு சாட்டையைக் கொண்டு விரட்டப்படுவார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இமாம் தப்ரானீ, பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 259)

“எவர் ஒருவர் அஹ்லுல் பைத்தினர் மீது பகை கொள்கிறாரோ அவர் முனாஃபிக் ஆவார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இமாம் அஹ்மத்)

“எவர் என்னுடைய அஹ்லுல் பைத்தினர் மீது கொடுமைகள் புரிந்தாரோ, அதைக் கொண்டு எனக்கு நோவினை செய்தாரோ, அவர் மீது சுவனம் ஹராம் ஆக்கப்பட்டு விட்டது” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் அயாஸ் பின் ஸல்மா அவர்கள் தமது தந்தையார் வாயிலாக அரிவிக்கிறார்கள், “நட்சத்திரங்கள் வானங்களின் படைப்புகளுக்கு பாதுகாப்பு ஆகும். எனது அஹ்லுல்பைத்தினரோ, எனது உம்மத்துகளுக்கு பாதுகாப்பு ஆகும்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர், பாகம் 4, ஹதீஸ் எண்: 6137.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், “சுவனத்தில் எல்லோருக்கும் முன்பாக நான். ஹழரத் ஃபாத்திமா (றலியல்லாஹு அன்ஹா), ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் பிரவேசிப்போம்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அப்போது நான், “எங்கள் நேசர்களின் நிலை என்ன?” என்று கேட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “அவர்கள் நமக்கு பின்னால் வருவார்கள்” என்று கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 245)

## தஸவ்வுப்:

“ஒருவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் வந்து, “தஸவ்வுப்பின் அடிப்படை எதன் மீது அமைந்துள்ளது?” என்று கேட்டார். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், “ஈமானின் அடிப்படை நான்கின் மீது அமைந்துள்ளது. அவை: 1.பொறுமை. 2.யகீன் என்னும் ஆழ்ந்த நம்பிக்கை. 3.அதல் என்னும் நீதி. 4.ஜிஹாத் என்னும் அறப்போர். தஸவ்வுப் என்பது உண்மையில் ஈமானே ஆகும்” என்று கூறினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 19)

ஹழரத் உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை விட ஷரீஆ சட்டங்களை அதிகம் அறிந்தவர் வேறு எவரும் இல்லை”. (ஹழரத் அலீ, பக்கம் 19)

ஹழரத் அப்துல்லாஹ் பின் அஸ்அத் ஸுராரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது தந்தையார் ஹழரத் அஸ்அத் இப்னு ஸுராரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக கூறுகிறார்கள், “ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) பற்றி மூன்று விஷயங்கள் வஹீ மூலமாக எனக்கு அறிவிக்கப்பட்டன. ஒன்று, அவர் முஃமினீன்

களுடைய தலைவராக இருக்கிறார். இரண்டு, முத்தகீன்களின் (இறையச்சம் கொண்டவர்) பேஷவா (மத குரு) ஆக இருக்கிறார். ஸாலிஹீன்களின் (நன்னெறி தவறாதவர்) ரஹ்பராக (வழிகாட்டி) இருக்கிறார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் அலீ – ஷாஹ் வலியுல்லாஹ், பக்கம் 85)

ஹழரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள், "மக்களுடைய ஷஜரா (மரபு விளக்கக் கொடி) தனித்தனியாக இருக்கின்றன. ஆனால், என்னுடையதும், அலீயுடையதும் ஷஜரா ஒன்றே ஆகும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (தப்ரானி, தாரீக் குலஃபா, பக்கம் 175)

## நீதியரசர்

اَللّٰهُمَّ ثَبِّتْ لِسَانَهُ وَاهْدِ قَلْبَهُ ه

"இறைவா! இவரின் நாவை நீ (நீதியின் பேரில்) நிலைப்படுத்துவாயாக! இவருடைய நெஞ்சத்தை நேர்வழியால் துலங்கச் செய்வாயாக!" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களுக்காக துஆ செய்தார்கள். அந்த துஆ பரக்கத்தினால் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள் நீதி வழங்குவதில் எக்காலத்திலும் தவறியதே இல்லை! மேலும், வழக்கை கேட்ட உடனேயே மிகச் சரியான தீர்ப்பு வழங்கக்கூடியவர்களாகவும் இருந்தார்கள். இதனால் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் இவர்களை உவக்கக்கூடியவர்களாக இருந்தார்கள். ஸஹாபா பெருமக்களால் போற்றக்கூடியவர்களாக இருந்தார்கள்.

ஹழரத் அபூ ஹூரைரா ரலியல்லாஹு அன்ஹு அறிவிக்கிறார்கள்,, ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "எங்கள் அனைவரையும் விட ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மிகச் சிறந்த தீர்ப்புகளை கூறக் கூடியவராக இருக்கிறார்" என்று கூறினார்கள். ஹழரத் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "புனித மதீனாவில் எல்லோரை விடவும் சரியான தீர்ப்பை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் வழங்கக் கூடியவராக இருக்கிறார்" என்று நாங்கள் பேசிக் கொள்வோம் என்று கூறினார்கள். ஹழரத் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், "ஹழ்ரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் முக்கியமான மஸ்அலா ஏதேனும்

கேட்கப் பட்டால், அதற்கு சரியான பதிலையே கூறுவார்கள்”. (தாரீக் குலஃபா பக் 175)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுன்னத்தான நடைமுறைகளை மிகவும் அறிந்தவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மட்டுமே” என்று உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறினார்கள்.(தாரீக் குலஃபா)

"அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு) அவர்கள் நம்மிடையே உள்ள மிகச் சிறந்த நீதிபதி" என்று ஹழரத் உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் அடிக்கடி புகழ்ந்து கூறக்கூடியவர்களாக இருந்தார்கள். "மார்க்க வரம்புகளை அறிவிப்பதிலும், நீதித் தீர்ப்பு வழங்குவதிலும் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு) அவர்களை விட வல்லவர் மதீனாவில் இருக்கவில்லை" என்று ஹழரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் புகழ்ந்தார்கள்.

ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், “எங்களில் (குர்ஆனை) நன்றாக ஓதத் தெரிந்தவர் ஹழரத் உபை இப்னு கஅப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆவார்கள். எங்களில் நன்றாக தீர்ப்பு வழங்கும் ஞானமுடையவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஆவார்கள்”. (புகாரீ)

ஹழரத் அபூபக்கர் சித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “எனது திருக்கரமும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திருக் கரமும் நீதி வழங்குவதில் சமமாக இருக்கின்றன” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 70)

நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் என்னை யமன் நாட்டிற்கு நீதிபதியாக அனுப்பி வைத்தார்கள். அப்பொழுது நான் இளைஞனாக இருந்ததால், தீர்ப்பு வழங்கும் அறிவை நான் பெற்றிருக்கவில்லை. எனவே, நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நிச்சயமாக, அல்லாஹ் உம்முடைய மனத்தை நேர்வழிப்படுத்தி, உம்முடைய நாவை உறுதிபடுத்தி வைப்பானாக! உம்முடைய முன்னிலையில் வாதியும் பிரதிவாதியும் அமர்ந்த பின், நீர் அவர்களில் மற்றவரின் கூற்றை, முதல்வரின் (வாதியின்) கூற்றைச் செவியுற்றது போல் செவியுறாத வரை தீர்ப்புக் கூறவேண்டாம். ஏனெனில் நிச்சயமாக, இது நீர் தீர்ப்பு வழங்கத் துவங்குவதற்கு ஏற்றதாக இருக்கும்" என்று கூறினார்கள். (எனவே) 'நான் எப்பொழுதும் நீதிபதியாகவே இருந்து

வந்தேன். அதன் பின் நான் எது பற்றியும் ஐயம் கொண்டதில்லை' என்று ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்களும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களே, ஆதாரம்: அபூதாவூத், திர்மிதீ.

வழக்கு: ஒருவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் வந்து, "அமீருல் முஃமுனீன் அவர்களே! நான் அல்லாஹ்வின் பொருட்டு உங்களை நேசிக்கிறேன்" என்று கூறினார். உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "ஆனால், அல்லாஹ்வின் பொருட்டு உம்மை நான் வெறுக்கிறேன்" என்று கூறினார்கள். "அதற்கான காரணம் என்ன?" என்று வந்தவர் கேட்டார். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "நீர் பாட்டு பாடுவதைப் போல பாங்கு சொல்கிறீர். மேலும், திருக்குர்ஆனைக் கற்றுக் கொடுக்க ஊதியமும் பெறுகிறீர். 'இந்த உலகத்தில் எவர் குர்ஆனைக் கற்றுக் கொடுக்க ஊதியம் பெறுகிறாரோ, அதுவே மறுமையில் அவருடைய பங்காக இருக்கும்' என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னதை நான் கேட்டிருக்கிறேன்" என்று கூறினார்கள். (ஃபிகாஹ் ஹழரத் அலீ, பக்கம் 24)

வழக்கு: யமன் நாட்டிலிருந்து ஒருவர் நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, "(நாயகமே!) நிச்சயமாக ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்களிடம் மூன்று பேர் வந்து ஒரு குழந்தை பற்றி தங்களிடையே ஏற்பட்டுள்ள ஒரு தகராறைத் தீர்த்து வைக்கும்படி கோரினர். அம்மூவரும் ஒரு பெண்ணோடு ஒரே துப்புரவான சமயம் (அதாவது மாதவிலக்கு ஏற்பட்டு துப்புரவான ஒரே மாதத்தில்) வியபிசாரம் செய்திருந்தனர். (அதனால் அவள் கருவுற்று ஒரு குழந்தையையும் பெற்றெடுத்தாள்.) (அதைக்கேட்ட) ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ) அவர்கள், அவர்களில் இருவரை நோக்கி, "இ(ந்த மூன்றா)வ(து நப)ருக்கு இக் குழந்தையை மகிழ்வுடன் கொடுத்துவிடுங்கள்" என்று கூறினார்கள்.

ஆனால் அவ்விருவரும் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. பின்னர் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ) அவர்கள், அவர்களில் மற்ற இருவரை நோக்கி, "இவருக்கு இந்தக் குழந்தையை மகிழ்வுடன் கொடுத்துவிடுங்கள்" என்று கூறினார்கள். ஆனால், அவர்களும் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே ஹழாத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள், "நீங்கள் சச்சரவு செய்வதில் கூட்டாக இருக்கிறீர்கள். (எனவே) நிச்சயமாக, நான் உங்களிடையே சீட்டுக் குலுக்குகிறேன். எவர் பெயருக்கு சீட்டு விழுகிறதோ அவருக்கு இக்குழந்தை உரியதாகும். ஆனால் (அவர்) மற்ற இருவருக்கும் மூன்றில் இரண்டு பங்கு ஈடுபணம் கொடுக்க வேண்டும்" என்று கூறி, சீட்டுக் குலுக்கினார்கள்.

அதன்படியே எவர் பெயருக்கு சீட்டு விழுந்ததோ அவருக்கே குழந்தை உரியதாகிவிட்டது" என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் சிரித்துவிட்டனர். இதன் காரணமாக, அவர்களுடைய முன் பல்வரிசையும் பளிச்சிட்டது. அறிவிப்பவர்: ஹழரத் ஜைதுப்னு அர்க்கம் ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்கள், ஆதாரம்: அபூதாவூத், நஸாயீ, அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 3, ஹதீஸ் எண்: 4854, பக்கம் 610.

வழக்கு: ஹழரத் அபுல் அஸ்வத் அவர்கள் கூறுகிறார்கள், "ஒரு பெண் நிகாஹ் புரிந்தாள். ஆனால் ஆறு மாதத்திலேயே குழந்தயையும் பெற்றெடுத்தாள். இந்த வழக்கு கலீஃபா ஹழரத் உமர் ரலியல்லஹு அன்ஹு அவர்கள் முன் வந்தது. அவள் விபச்சாரம் புரிந்திருக்கிறாள் எனக் கருதிய கலீஃபா அவர்கள், அவளை கல்லெறிந்து கொல்ல எண்ணினார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "குழந்தையின் கர்ப்ப காலமும், பால்குடி மறத்தல் காலமும் சேர்த்து முப்பது மாதங்கள் என்று அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் திருக்குர்ஆனிலே அருளியுள்ளான். மற்றொரு இடத்தில் பால்குடி மறத்தல் காலம் இரண்டு ஆண்டுகள் (இருபத்து நான்கு மாதங்கள்) என்று கூறியுள்ளான். அதன்படி பார்த்தால் கர்ப்பகாலம் ஆறு மாதங்களே! எனவே, ஆறு மாதத்தில் குழந்தை பெற்றாள் என்பதற்காக அவளுக்கு தண்டனை வழங்கத் தேவையில்லை" என்று கூறினார்கள்.

அதைக் கேட்டு மகிழ்ந்த கலீஃபா ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், கல்லெறி தண்டனையை கைவிட்டார்கள். மேலும், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் இல்லாதிருந்தால் நான் அழிவைக் கண்டிருப்பேன்" என்றும் கூறினார்கள். ஹழரத் அலீ இப்னு அபி தாலிப், பக்கம் 186.

வழக்கு: ஒருமுறை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் பைத்துல் மால் சென்றார்கள். அங்கு பனூ அஸத் குலத்தைச் சேர்ந்த ஒருவரிடம் பங்கிடும் பொறுப்பை ஒப்படைத்தார்கள். அப்போது ஜனங்கள், "பங்கீடு செய்யும் இவருக்கு ஊதியம் ஏதாவது வழங்கினால் நன்றாக இருக்கும்" என்று கூறினார்கள். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "ஆம், உண்மைதான். ஆனால், (தற்காலிகமாக) பங்ககீடு செய்யும் இவருக்கு வழங்கும் ஊதியம், அவர்களுக்கு ஹராம் ஆகும்" என்று கூறினார்கள். (ஃபிகாஹ் ஹழரத் அலீ, பக்கம் 29)

வழக்கு: நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடைய 'மைந்தனின் தாய்' (தம் தலைவருக்கு பிள்ளையை பெற்றுக் கொடுத்ததன் காரணத்தால் சுதந்திரம் பெற்றுவிட்டவர்) ஒருவரைக் குறித்து அவதூறு கூறப்பட்டு வந்தது. எனவே,

நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களை நோக்கி, "தாங்கள் சென்று (அவதூறு கூறும்) அவரின் தலையைக் கொய்து விடுங்கள்" என்று உத்தரவிட்டனர். எனவே, ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் அவரிடம் சென்றார்கள். அப்பொழுது அவர் ஒரு கிணற்றில் குளிர்ச்சி பெறுவதற்காக குளித்துக் கொண்டிருந்தார். ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் அவரை நோக்கி, "வெளியே வாரும்" என்று கூறினார்கள். உடனே அவர் தம் கையை ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களின் கையில் கொடுத்தார். அவர்களும் அவரை இழுத்து வெளிப்படுத்தினார்.

அப்பொழுது அவர் இன உறுப்பு வெட்டப்பட்டவராக இருந்தார். அவருக்கு இன உறுப்பே இல்லை என்பதைக் கண்ட ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் அவரைக் கொல்லும் எண்ணத்தைக் கைவிட்டனர். பின்னர் இச்செய்தியை நபி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் (சென்று) அறிவித்த பொழுது அவர்கள், ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களின் செயலை அழகாகக் கண்டார்கள். மற்றொரு அறிவிப்பில், "பிரசன்னமாக இருப்பவருக்குத் தெரிய வருவதெல்லாம் மறைந்திருப்பவருக்குத் தெரிய வருவதில்லை" என்று நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மகிழந்து கூறியதாக குறிப்பிடப்பட்டுள்ளது. அறிவிப்பவர்: ஹழரத் அனஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: முஸ்லிம்.

வழக்கு: குரைஷி பெண்மணி ஒருவரிடம் இருவர் வந்து, நூறு தீனார்களைக் கொடுத்தார்கள். அதை அமானிதமாக வைத்திருக்கும்படி கூறினார்கள். மேலும் தாம் இருவரும் சேர்ந்து வந்து கேட்டால் ஒழிய அமானிதத்தை யாருக்கும் கொடுக்கக் கூடாது என்றும் கூறினார்கள். பிறகு, ஒரு வருடம் கழித்து இருவரில் ஒருவர் மட்டும் வந்து, “எனது நண்பர் இறந்து விட்டார். எனவே எங்கள் அமானிதத்தை என்னிடம் திருப்பிக் கொடுங்கள்” என கேட்டுக் கொண்டார். அதை உண்மை என நம்பிய அப்பெண்மணி, நூறு தீனார்களையும் அவரிடம் கொடுத்து விட்டார்.

மீண்டும் ஒரு வருடம் கழித்து மற்றொருவர் வந்து “தமது நண்பர் இறந்து விட்டதாகவும், எனவே, அமானிதப் பொருளை திருப்பிக் கொடுக்கும் படியும் அப் பெண்மணியிடம் கேட்டார். அப்பெண்மணி, “உமது நண்பர் சென்ற வருடமே வந்து, நீர் இறந்து விட்டதாகக் கூறி அமானிதத்தை வாங்கிக் கொண்டு சென்று விட்டார்” என்று கூறினார். ஆனால் மற்றவரோ, நாங்கள் இருவரும் சேர்ந்து வந்து கேட்டால்தானே நீங்கள் அமானிதத்தை கொடுத்திருக்க வேண்டும்” என்று சண்டை போட ஆரம்பித்தார். சண்டை முற்றிய போது இருவரும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சென்றனர். அவர்கள்

இருவரையும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள்.

வழக்கை கேட்டதுமே இரண்டு நபர்களுமே பெண்மணியிடம் மோசடி செய்வதை, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் உணர்ந்து கொண்டனர். எனவே அவர் மற்றொருவரிடம், "நீர் என்ன சொல்லி இவரிடம் அமானிதப் பொருளைக் கொடுத்தீர்?" எனக் கேட்டார். "நாங்கள் இருவரும் சேர்ந்து வந்து கேட்டால் மட்டுமே அமானிதப் பொருளைக் கொடுக்க வேண்டும்" என்று நாங்கள் கூறினோம் என்றான் அவன்.

உடனே ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்,"இப்போதும் நீர் தனியாகத்தானே வந்திருக்கிறீர்? உமது நண்பரை அழைத்து வரவில்லையே? நீர் சென்று உமது நண்பரையும் அழைத்து வாரும். பிறகு அமானிதப் பொருளைக் கேளும்" என்றார்கள். தமது நண்பரை அழைத்து வந்தால் உண்மை வெளிப்பட்டு விடும் என அஞ்சிய மற்றவர், அங்கிருந்தும் ஓடிச்சென்று மறைந்தார்! (ஹழரத் அலீ இப்னு அபி தாலிப், பக்கம் 186.)

வழக்கு: வியபிசாரம் புரி(யப் பட்டிரு)ந்த பைத்தியக்காரி ஒருத்தி ஹழரத் உமர் (ரலியல்லாஹூதஆலா அன்ஹூ) அவர்களிடம் கொண்டு வரப்பட்டாள். எனவே அவர்கள் அவள் பற்றி மக்களுடன் ஆலோசனை செய்தார். பின்னர், அவளைக் கல்லாலெறிந்து கொல்லுமாறு கட்டளையிட்டார்கள். அப்பொழுது அவ்வழியே சென்ற ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள், "இவளுடைய நிலைமை என்ன?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "இன்ன கூட்டத்தினரைச் சேர்ந்த பைத்தியக்காரி இவள். நிச்சயமாக இவள் வியபிசாரம் புரி(யப் பட்டிரு)ந்திருக்கிறாள்" என்று கூறினர்.

(அதைக் கேட்ட) ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள், "இவளைத் திரும்பவும் கொண்டு வாருங்கள்" என்று கூறிவிட்டு, ஹழரத் உமர் (ரலியல்லாஹூதஆலா அன்ஹூ) அவர்களிடம் வந்து, "இறை நம்பிக்கையாளரின் தலைவ! நிச்சயமாக, நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், 'மூவரை விட்டும் எழுதுகோல் உயர்த்தப்பட்டு விட்டது - 1.குழந்தை, தக்க வயது எய்தும் வரை; 2.தூங்குபவர், (விழித்து) எழும்வரை; 3.பைத்தியம் பிடித்தவர், பைத்தியம் தெளியும் வரை' என்று கூறியிருப்பது தாங்கள் அறிந்ததே. இவ்விதமிருக்க, நிச்சயமாக இவள் இன்ன கூட்டத்திலுள்ள பைத்தியமாயிற்றே. இவள் (பித்து பிடித்து) அலையும் பொழுது எவனாவது இவளைச் சோரம் செய்திருக்கக்கூடும்" என்று கூறினார்கள். எனவே, ஹழரத் உமர் (ரலியல்லாஹூதஆலா அன்ஹூ) அவர்கள் அவளை அவள் வழியே விட்டுவிட்டனர். அறிவிப்பவர்: ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்கள், ஆதாரம்: அபூதாவூத்.

ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக் காலத்தில் இரண்டு பெண்கள் வந்தார்கள். அவர்களுடன் ஒரு குழந்தை இருந்தது. பெண்கள் இருவரும் அந்த குழந்தை தனக்கே சொந்தம் என்று கூறினார்கள். ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அந்த வழக்கில் தீர்ப்பு கூறுவது கடினமாகத் தோன்றியது. எனவே, பெண்கள் இருவரையும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள்.

வழக்கை கேட்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், குழந்தையை இரண்டு துண்டுகளாக வெட்டி, ஒவ்வொருவருக்கும் ஒரு துண்டு கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள். உடனே, குழந்தையின் உண்மையான தாய், பதறித் துடித்து, “குழந்தையை அறுக்காதீர்கள். குழந்தையை அடுத்தவளுக்கே கொடுத்து விடுங்கள்” என்று கூறினாள். ஆனால் அடுத்தவளோ, “குழந்தையை அறுத்து எனக்கு ஒரு துண்டு கொடுத்து விடுங்கள்” என்றாள். இதன் மூலம் உண்மையை உணர்ந்துக் கொண்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், குழந்தையை அதன் உண்மையான தாயாரிடமே வழங்கி தீர்ப்பும் கூறினார்கள். (ஹழரத் அலீ இப்னு அபிதாலிப், பக்கம் 188)

வழக்கு: ஹழரத் ஸைத் பின் அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை யமன் தேசத்திற்கு அனுப்பி வைத்தார்கள். அங்கு ஒருவர் புதையல் ஒன்றை கொண்டு வந்தார். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அந்த புதையல் செல்வத்திலிருந்து ஐந்தில் ஒரு பகுதியை (அரசாங்கத்திற்காக) எடுத்துக் கொண்டார்கள் மீதியை அதன் உரிமையாளருக்கு கொடுத்து விட்டார்கள். இந்த விஷயத்தை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அறிந்த போது மகிழ்ச்சி அடைந்தார்கள். அல் முஅஜம் அல் கபீர்- தப்ரானீ, பாகம் 3, ஹதீஸ் எண்: 4856.

வழக்கு: கூபாவிலிருந்து ஏழு பேர் பயணம் ஒன்றில் சென்றார்கள். நீண்டகாலமாகியும் அவர்களில் எவரும் ஊர் திரும்பவில்லை. பிறகு அவர்களில் ஆறு பேர் மட்டுமே திரும்பி வந்தார்கள். ஒருவரைக் காணவில்லை! எனவே காணாமல் போனவரின் மனைவி ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் வந்து, புகார் (முறையீடு) செய்தாள். ஆறு பேரும் சேர்ந்து தனது கணவரை கொன்று விட்டார்கள் என்றும் குற்றம் சுமத்தினாள். வழக்கை தீர விசாரித்து, தனது கணவரின் நிலையை அறியும்படியும் கூறினாள். எனவே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அந்த ஆறு பேரையும் விசாரணைக்காக அழைத்து வரச் செய்தார்கள்.

அவர்கள் வந்ததும், மஸ்ஜிதில் அவர்களை தனித்தனியாக அமர வைத்தார்கள். ஒருவரோடு ஒருவர் பார்க்காதபடியும், பேசாதபடியும் பாதுகாப்பாளர்களை நியமித்தார்கள். பிறகு, முதல் நபரிடம் விசாரணையை தொடங்கினார்கள். ஆனால் அவனோ, குற்றத்தை மறுத்துக் கொண்டே இருந்தான். திடீரென ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "அல்லாஹூ அக்பர்" என்று தக்பீர் முழங்கினார்கள். அதைக் கேட்ட மற்ற ஐந்து பேரும், முதலாவது நபர் உண்மையைக் கூறிவிட்டார் என்று தமக்குள் கூறிக் கொண்டனர்.

பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வ்ஜ்ஹஹூல் கரீம் அவர்கள், இரண்டாவது நபரை அழைத்து விசாரித்தார். அவர், ஏழாவது நபரை கொன்றது உண்மைதான் என்று ஒப்புக் கொண்டார். பிறகு மற்ற நான்கு பேரும் கூட உண்மையை ஒப்புக் கொண்டனர். அதைக் கண்டு ஆறாவது நபரும் உண்மையை ஒப்புக் கொண்டார். இப்படியாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தமது சமயோசித அறிவால் குற்றத்தை ஒப்புக் கொள்ளச் செய்தார்கள்! ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப், பக்கம் 187.

வழக்கு: "நிச்சயமாக அவர் திருடினார்" என்று ஒருவரைப் பற்றி இரண்டு பேர்கள் சாட்சியம் கூறினார்கள். எனவே ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள் (திருடிய) அவருடைய கையை வெட்டுமாறு கட்டளையிட்டனர். பின்னர் (சாட்சி கூறிய) அவ்விருவரும் மீண்டும் வந்து, "முதல் தடவை எங்களால் தவறு ஏற்பட்டுவிட்டது" என்று கூறினார்கள். உடனே ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள், அவ்விருவரின் சாட்சியத்தை தள்ளுபடி செய்துவிட்டு, முந்திய தவறுக்குப் பரிகாரம் அளிக்கும்படி அவ்விருவர் மீதும் நிர்ணயம் செய்தனர். மேலும் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள், "நீங்கள் (முதல் தடவை) வேண்டுமென்றே பொய் சாட்சி கூறினீர்கள் என்பதை நான் (முன்பே) அறிந்திருப்பேனாயின் நிச்சயமாக, உங்கள் இருவருடைய கைகளையும் வெட்டும்படி கட்டளையிட்டிருந்திருப்பேன்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் ஷஹ்பீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஆதாரம்: புகாரீ.

வழக்கு: ஹழரத் இப்னு தல்ஹா ஷாபி அவர்கள் கூறுகிறார்கள், சாராயம் குடிப்பவர்களுக்கான தண்டனை நாற்பது கசையடியாக இருந்தது. ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக் காலத்திலும் அதே நிலை நீடித்தது. ஆயினும், சாராயம் குடிப்போரின் எண்ணிக்கை அதிகரித்ததாலும், குற்றவாளிகள் நாற்பது கசையடிகளை தாங்கிக் கொண்டதாலும், ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தண்டனையை கடுமையாக்க விரும்பினார்கள். எனவே, ஸஹாபா பெருமக்களிடம் மஷ்வரா செய்தார்கள்.

அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், “ஒருவன் சாராயம் குடித்துவிட்டால் போதை ஏற்பட்டு விடுகிறது. அந்த போதையில் அவன் கண்டதை பிதற்றத் தொடங்குகிறான். அவ்விதம் பிதற்றும் போது பெரும்பாலும் பொய்யே பிதற்றுகிறான். பொய் பேசுவதற்கான தண்டனை எண்பது கசையடியாகும். எனவே, சாராயம் குடிப்பவர்களுக்கும் எண்பது கசையடி கொடுக்கலாம்” என்றார்கள். அதை ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். (ஹழரத் அலீ இப்னு அபி தாலிப், பக்கம் 190.)

வழக்கு: ஒரு இடத்தில் மூன்று பயணிகள் தங்கினர். அவர்களில் இருவரிடம் மட்டுமே சாப்பிட உணவு இருந்தது. முதலாமவரிடத்தில் மூன்று ரொட்டிகள் இருந்தன. இரண்டாமவரிடத்தில் ஐந்து ரொட்டிகள் இருந்தன. மூன்றாமவரிடத்தில் ரொட்டி ஏதும் இருக்கவில்லை. ஆயினும், இருவரிடம் இருந்த எட்டு ரொட்டிகளை துண்டுகளாக்கி மூன்று பேரும் சரிசமமாக பங்கிட்டு சாப்பிட்டார்கள். மூன்றாமவர் தாம் சாப்பிட்ட பங்குக்காக எட்டு திர்ஹங்களை அவ்விருவருக்கும் கொடுத்தார். அதில் ஐந்து ரொட்டிகள் வைத்திருந்த இரண்டாமவர் ஐந்து திர்ஹங்களை எடுத்துக் கொண்டு, மூன்று ரொட்டிகளை வைத்திருந்த முதலாமவருக்கு மூன்று திர்ஹங்களைக் கொடுத்தார். ஆனால் முதலாமவர் தனக்கு நான்கு திர்ஹங்கள் வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். இந்நிலையில் அவ்வழியே கலீஃபா ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் வந்தார்கள். அவ்விருவரும் கலீஃபா அவர்களை அணுகி முறையிட்டார்கள். வழக்கை கேட்ட உடனேயே கலீஃபா அவர்கள் முதலாமவரைப் பார்த்து, "உம் தோழர் கொடுக்கின்ற மூன்று திர்ஹங்களை வாங்கிக் கொள்ளுங்கள். அதுவே உங்களுக்கு இலாபமாக இருக்கும். நான் தீர்ப்பளித்தால் உமக்கு ஒரு திர்ஹம் மட்டுமே கிடைக்கும்" என்றார்கள். "அது எப்படி?" என்று முதலாமவர் கேட்டார்.

"உம்மிடம் இருந்ததோ மூன்று ரொட்டிகள். ஒவ்வொரு ரொட்டியையும் மூன்று துண்டுகளாக ஆக்கினால் மொத்தம் ஒன்பது துண்டுகளாகின்றன. இரண்டாமவரிடத்தில் ஐந்து ரொட்டிகள் இருந்தன. அவற்றை மும்மூன்று துண்டுகளாக்கினால் மொத்தம் பதினைந்து துண்டுகளாகின்றன. ஆகமொத்தம் இருபத்து நான்கு ரொட்டி துண்டுகள் உங்களிருவரிடமும் இருந்துள்ளன. இவற்றை நீங்கள் சரிசமமாக பங்கிட்டு சாப்பிட்டீர்கள். அதன்படி ஒவ்வொருவரும் எட்டு எட்டு ரொட்டித் துண்டுகளை சாப்பிட்டுள்ளீர்கள். உங்களிடம் இருந்ததோ ஒன்பது ரொட்டித் துண்டுகள். அதில் எட்டு ரொட்டித் துண்டுகளை நீங்களே உங்கள் பங்காக சாப்பிட்டுள்ளீர்கள்.

மீதமிருந்த ஒரு ரொட்டித் துண்டைத்தான் நீங்கள் மூன்றாமவருக்குக் கொடுத்துள்ளீர்கள். ஆனால், இரண்டாமவரிடம்

பதினைந்து ரொட்டித் துண்டுகள் இருந்துள்ளன. அவற்றில் எட்டு துண்டுகளை அவர் சாப்பிட்டு விட்டு, மீதமுள்ள ஏழு துண்டுகளை மூன்றாமவருக்குக் கொடுத்திருக்கிறார். எனவே, மூன்றாமவர் கொடுத்த எட்டு திர்ஹங்களில் அவருக்கு ஏழு ரொட்டித் துண்டுகளைக் கொடுத்த இரண்டாமவருக்கு ஏழு திர்ஹங்கள் சேர வேண்டும். ஒரு ரொட்டித் துண்டைக் கொடுத்த உமக்கு ஒரு திர்ஹம் மட்டுமே சேர வேண்டும்" என்று தீர்ப்பு கூறினார்கள். இத்தீர்ப்பைக் கேட்டு அவ்விருவரும் வியந்து நின்றார்கள். (ஹழரத் அலீ இப்னு அபி தாலிப், பக்கம் 188.)

வழக்கு: ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் போது, அன்னாருடைய போர்க்கவசம் ஒன்று காணாமல் போய்விட்டது. பிறகு ஒரு நாள் அந்த போர்க்கவசத்தை ஒரு கிறிஸ்தவரின் வீட்டில் இருக்கக் கண்டார்கள். ஆயினும் தாமே கலீஃபாவாக இருந்து கொண்டு யாரிடம் பிராது கொடுப்பது? ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அவர்கள் நகரின் காஜியிடம் சென்று, தமது போர்க்கவசம் காணாமல் போனது பற்றி பிராது கொடுத்தார்கள். காஜியார் விசாரணைக்காக ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ;ல் கரீம் அவர்களையும், கிறிஸ்தவரையும் வரச்சொல்லி அழைப்பு விடுத்தார்.

அவ்வழைப்பை ஏற்று ஹழரத் அவர்கள் காஜியாரிடம் சென்றார்கள். கிறிஸ்துவரும் வந்தார். அப்போது காஜியார், “இந்த போர்க்கவசம் உங்களுடையதுதான் என்பதற்கு உங்களிடம் ஆதாரம் ஏதாவது இருக்கிறதா?” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் கேட்டார். அதற்கு ஹழரத் அவர்கள் “இல்லை” என்று பதில் கூறினார்கள்.

எனவே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் ஆதாரம் இல்லாததால், காஜியார் கிறிஸ்தவருக்கு சாதகமாக தீர்ப்பை வழங்கினார். அதைகேட்ட ஹழரத் அவர்கள் அமைதியுடன் அங்கிருந்தும் புறப்பட்டார்கள். அந்த அற்புதத்தைக் கண்ட கிறிஸ்தவர் மனம்மாறி, தமது குற்றத்தையும் ஒப்புக் கொண்டார், மனமுவந்து இஸ்லாத்தையும் ஏற்றுக் கொண்டார்! (முகம்மல் தாரீகே இஸ்லாம், பக்கம் 357)

## சுவர்க்கவாசி - நன்மாராயம்

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருவாயினால் சுவனத்திற்கு நன்மாராயம் கூறப் பெற்ற பத்து நபித் தோழர்களில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களும் ஒருவராவார்.

"ஹழரத் அபூபக்ர் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்கள் சுவனவாசியே! ஹழரத் உமர் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களும் சுவனவாசியே! ஹழரத் உஸ்மான் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களும் சுவனவாசியே! ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹு) அவர்களும் சுவனவாசியே! ஹழரத் தல்ஹா (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களும் சுவனவாசியே! ஹழரத் ஜுபைர் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களும் சுவனவாசியே! ஹழரத் ஸஃதுப்னு மாலிக் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களும் சுவனவாசியே! ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களு சுவனவாசியே! ஹழரத் அபூ உபைததுப்னுல் ஜர்ராஹ் (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்களும் சுவனவாசியே!" என்று நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி பத்தாவது நபரைக் கூறாது மௌனமாக இருந்தனர். அப்பொழுது தோழர்கள், "பத்தாவது யார்?" என்று கேட்டனர். அதற்கு நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "ஸஈதுப்னு ஜைது (ரலியல்லாஹுதஆலா அன்ஹு) அவர்கள்" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் ஸஈதுப்னு ஜைது ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: அபூதாவூத், திர்மிதீ.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனது கையை பிடித்துக் கொண்டிருந்த நிலையில், நாங்கள் மதீனாவின் தெருக்களில் நடந்துக் கொண்டிருந்தோம். வழியில் ஒரு சிறிய தோட்டத்தை நாங்கள் கடந்து சென்றோம். அப்போது நான், “இந்த தோட்டம் எவ்வளவு அழகாக இருக்கிறது?” என்று அண்ணலாரிடம் சொன்னேன். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “சுவனத்தில் உம்முடைய தோட்டம் இதைவிட அழகானதாக இருக்கும்” என்று கூறினார்கள். (ஹழரத் அலீ – ஷாஹ் வலியுல்லாஹ், பக்கம் 87)

ஹழரத் தப்ரானீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் ஸலமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், “நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இருந்தேன். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ‘இப்போது உமது இருப்பிடத்திற்கு ஒரு சுவனவாசி வருவார்’ என்று கூறினார்கள். சிறிது நேரம் கழித்து காலடி ஓசைக் கேட்டது. தொடர்ந்து, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வந்தார்கள். (ஹுஜ்ஜதுல்லாஹ் அலல் ஆலமீன்-இமாம் நபஹானீ, பாகம் 2, பக்கம் 71)

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “கியாமத்து நாளில் முதன் முதலாக ஹழரத்

இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் 'குல்லத்' (பேரன்பு) உடைய ஆடைகள் அணிவிக்கப்படுவார். பிறகு எனக்கு சுஃபூத் (உயர்வான) உடைய ஆடைகள் அணிவிக்கப்படும். அதன் பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு எங்களுக்கு இடையில் இடம் வழங்கப்பட்டு, சுவனத்தின் பக்கம் அனுப்பி வைக்கப் படுவார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 80)

ஹழரத் அபூ ஸயீத் அல் குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தமது திருப்புதல்வியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் இல்லத்திற்கு வந்தார்கள். தமது திருப் புதல்வியாரிடம், "நான், நீ, இங்கே உறங்கிக் கொண்டிருப்பவர் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்), மற்றும் ஹஸன், ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் கியாமத்து நாளில் ஒரே இல்லத்தில் இருப்போம்" என்று கூறினார்கள். (ஹழரத் அலீ – ஷாஹ் வலியுல்லாஹ், பக்கம் 84)

ஹழரத் அலீ இப்னு அபி தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களால் சுவனவாசி என்று நன்மாராயம் கூறப்பட்டவர். அவர்களது இல்வாழ்க்கைத் துணைவியார் அவர்களோ சுவனத்துப் பெண்களுக்கு தலைவி ஆவார். அவர்களின் புதல்வர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரும் சுவனத்து இளைஞர்களின் தலைவர்கள் ஆவார்கள். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் வழங்கியுள்ள இந்த சிறப்பு, வேறு எவருக்குமே அமையாத தனிச் சிறப்பாகும்!

## ஹழரத் அலீ (கரம்) மீது நேசம்:

"இறைநம்பிக்கையாளரைத் தவிர வேறு எவரும் அலீயை நேசிக்கமாட்டார்கள். நயவஞ்சகரைத் தவிர வேறு எவரும் அலீயை வெறுக்க மாட்டார்கள்" என்று நபிபெருமானார் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் ஸிர்ரு பின் ஹூபைஷ் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஆதாரம்: முஸ்லிம்.

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள். "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை நேசிப்பவரின் பாவங்கள், நெருப்பு விறகை எரித்துத் தின்பது போல தின்றுவிடும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 79)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஜனங்கள் அனைவரும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மீது நேசம் கொண்டவர்களாக ஆகிவிட்டிருந்தால், அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் ஜஹன்னம் என்னும் நரகத்தையே படைத்திருக்கமாட்டான்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 83)

"அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் நான்கு நபர்கள் மீது நேசம் வைக்கும்படி எனக்கு உத்தரவிட்டான். அவர்களில் ஒருவர், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஆவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 14)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் நேசர்களுக்கு (சுப செய்தியை) கூறிவிடுங்கள், சுவனத்தில் பிரவேசிக்க தயாராக இருங்கள் என்று!" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 83)

ஹழரத் அபூ ராஃபிஆ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான்கு நபர்கள் முதன் முதலாக சுவனத்தில் பிரவேசிப் பார்கள். நான், நீ, ஹஸன், ஹுஸைன். நம்முடைய மொத்த சந்ததியினர் நமக்கு பின்னால் இருப்பார்கள். நம்முடைய வாழ்க்கைத் துணைவியர்கள் நமது சந்ததிகளுக்கு பின்னால் இருப்பார்கள். நம் மீது நேசம் கொண்டவர்கள், நமக்கு வலது புறமும், இடது புறமும் இருப்பார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஜ்ஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர்- தப்ரானீ, பாகம் 1, பக்கம் 474)

ஹழரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் அன்ஸாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒரு பச்சை நிற தாளுடன் என்னிடம் வந்தார்கள். அந்த பச்சை தாளின் மீது அல்லாஹ்வின் புறத்திலிருந்து வெள்ளை எழுத்துக்களில் இவ்விதம் எழுதப்பட்டிருந்தது: "நான் படைப்பினங்கள் மீது (ஹழரத்) அலீ இப்னு அபீதாலிப் (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களின் நேசத்தை ஃபர்ளு (கடமை) ஆக்கிவிட்டேன். தாங்கள் இந்த விஷயத்தை அவரிடம் சேர்ப்பித்துவிடுங்கள்" என்று எழுதப்பட்டிருந்தது. (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 90)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நாங்கள் புனித மக்காவில் இளைஞர்களின் ஒரு

கூட்டத்தினருடன் அமர்ந்திருந்தோம். எங்களுக்கு நடுவில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வீற்றிருந்தார்கள். அப்போது ஒரு நட்சத்திரம் வானத்திலிருந்து விழுந்தது. உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "இந்த நட்சத்திரம் யாருடைய வீட்டிற்கு அருகில் விழுந்ததோ அவர் எனக்குப் பிறகு என்னுடைய வஸீ (வஸீயத்தை பூர்த்தி செய்பவர்) ஆக இருப்பார்" என்று கூறினார்கள்.

وَالنَّجْمِ إِذَا هَوَىٰ

ஜனங்கள் எழுந்து சென்று பார்த்தபோது, நட்சத்திரம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வீட்டருகே விழுந்திருந்தது. அதைக் கண்ட ஜனங்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, "தங்களுக்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுடைய நேசம் வழிதவறச் செய்துவிட்டது" என்று கூறினார்கள். உடனே, "விழுகின்ற நட்சத்திரத்தின் மீது சத்தியமாக" என்னும் அத்தியாயம் 53, ஸூரத்துந் நஜ்ம், வசனம் 1 அருளப்பட்டது. (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 93)

ஹழரத் முஆத் இப்னு ஜபல் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீது நேசம் கொள்வது ஒரு நற்செயலாகும். அது, பாவங்களால் எந்த நஷ்டத்தையும் ஏற்படுத்த விடாது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீது விரோதம் கொள்வது ஒரு பாவமாகும். அது, எந்த நற்செயலாலும் நன்மையை ஏற்படுத்த விடாது" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

## மண்ணறைவாசிகளுடன் உரையாடல்:

ஹழரத் ஸயீத் இப்னுல் முஸய்யப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "நாங்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுடன் மத்யனில் உள்ள கபரஸ்தான் (இடுகாடு) ஒன்றுக்குச் சென்றோம். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் உரத்த குரலில், "யா அஹ்லல் குபூர் அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹூ! நீங்கள் உங்களுடைய செய்திகளை எங்களுக்குக் கூறுகிறீர்களா? அல்லது நாங்கள் எங்களது செய்திகளை உங்களுக்குக் கூறட்டுமா?" என்று கேட்டார்கள். அப்போது, "வ அலைக்கும் ஸலாம் வரஹ்மதுல்லாஹி பரகாத்துஹூ! அமீருல் முஃமினீன் அவர்களே! (தாங்களே) எங்கள் மறைவுக்குப் பிறகு நிகழ்ந்த நிகழ்வுகளை (எங்களுக்குக்) கூறுங்கள்" என்னும் சத்தம் கேட்டது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல்

கரீம் அவர்கள், "கேளுங்கள் (மண்ணறைவாசிகளே!) உங்களுடைய மனைவிமார்கள் வேறு கணவர்மார்களை அடைந்துவிட்டார்கள். (நீங்கள் விட்டுச் சென்ற) பொருள்கள் யாவும் பங்கிடப்பட்டுவிட்டன. உங்கள் பிள்ளைகள் அநாதைகளின் குழுவில் சேர்ந்துவிட்டார்கள். நீங்கள் உறுதியாக கட்டி வைத்த வீடுகளில் உங்களுக்கு விரோதமாக இருந்தவர்கள் வசித்து வருகிறார்கள். இவை எங்களிடம் இருந்த செய்திகளாகும்! இனி நீங்கள் உங்களுடைய செய்திகளைக் கூறுங்கள்" என்றார்கள்.

உடனே, அசரீரி குரல் ஒன்று, "பிணங்களின் கஃபன் துணிகள் பழையதாகிவிட்டன. எங்கள் ரோமங்கள் வளர்ந்து சிதறிக் கிடக்கின்றன. எங்கள் தோல்களில் வெடிப்புகள் கண்டுவிட்டன. எங்கள் கண்கள் கண்ணீரைச் சிந்தி சிந்தி கன்னத்திலே இறங்கிவிட்டன. எங்கள் மூக்கு துவாரத்திலிருந்து இரத்தமும், சீழும் ஒழுகுகின்றன. நாங்கள் அனுப்பியதன் (நன்மைகளின்) பலனைப் பெற்றுக் கொண்டோம். எதை விட்டுவிட்டோமோ அதில் நஷ்டத்தை அடைந்துள்ளோம். (பொதுவாக) நாங்கள் எங்கள் அஃமால்களுக்கு பகரமாகவே (அனைத்தையும்) ஈடாக (பெற்றுக் கொள்கிறோம்" என்று கூறியது. (இமாம் ஹாகிம், இமாம் பைஹகீ, இப்னு அஸாகிர், கஸாயிஸுல் குப்ரா பாகம் 2, பக்கம் 144)

## அபூ துராப்:

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது திருமகளார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் வீட்டிற்கு வந்த போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைக் காணாததால், "உனது பெரிய தந்தையின் மகன் எங்கே?" என்று தமது திருமகளாரிடம் கேட்டார்கள். "எனக்கும் அவருக்கும் சிறிய மனஸ்தாபம் உண்டானது. அவர் கோபித்துக் கொண்டு (வெளியே) சென்றுவிட்டார்" என்று சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறினார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (வெளியே வந்து) ஒருவரிடம், "அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "அவர்கள் பள்ளிவாசலில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினார்.

நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களிடம் வந்த போது, அவர்கள் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய போர்வை ஒரு புறத்தில் சற்றே விலகி இருந்தது. அதன் காரணமாக அவர்களின் திரு மேனியில் சிறிது மண்ணும் ஒட்டிக் கொண்டிருந்தது. இதைக் கண்ட நபிபெருமானார் ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம் அவர்கள்,"அபூ துராப் (மண்ணின் தந்தையே) எழுந்திரும்" என்று கூறினார்கள். (இதன் பின்) ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்களுக்கு ('அபூ துராப்' என்னும்) இப்பெயரை விட வேறு எப்பெயரும் உவப்பானதாக இருக்கவில்லை. அறிவிப்பவர்: ஹழரத் ஸஹ்லு ரலியல்லாஹூதஆலா அன்ஹூ அவர்கள். ஹழரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் இதை அறிவித்திருக்கிறார்கள். (புகாரீ, முஸ்லிம்).

## பாரம்பரியம்

### குரைஷியர்கள்:

அரப் நாட்டில் வாழ்ந்த குரைஷியர்கள் பல்வேறு சிறப்புகளைப் பெற்றிருந்தார்கள். அவர்கள் தமது பிள்ளைகள் மீது பாசம் கொண்டவர்களாக இருந்தார்கள். புனித கஃபாவை தவாபு செய்து வந்தார்கள். ஹஜ்ஜுடைய கிரியைகளை நிறைவேற்றி வந்தார்கள். மய்யித்துக்கு கஃபன் அணிவித்தார்கள். பெருந்துடக்கு ஏற்படின் குளித்தார்கள். நிகாஹ்வில் சாட்சி மற்றும் மஹரை பேணினார்கள். தலாக் கொடுக்க நேர்ந்தால் மூன்றுமுறை தலாக் கொடுத்தார்கள். இப்படி பல்வேறு சிறப்புகளை குரைஷியர்கள் பெற்றிருந்தனர். (அல் முர்துஜா, பக்கம் 34)

### பனூ ஹாஷிம்:

குரைஷியர்களில் பனூ ஹாஷிம் குலத்தைச் சேர்ந்தவர்கள் மிகவும் உயர்வான இடத்தைப் பெற்றிருந்தார்கள். அவர்கள் புனித கஃபாவின் மகிமையையும், சிறப்புகளையும் உணர்ந்து, அதன் மீது பரிபூரணமாக நம்பிக்கை கொண்டிருந்தார்கள். அவர்கள் பலஹீனர்கள் மீதும், முதியோர்கள் மீதும் நேசம் கொண்டவர்களாக இருந்தார்கள். வள்ளல்களாக, வீரர்களாக, நற்குணம் வாய்ந்தவர்களாக விளங்கினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் மற்றும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் ஆகியோரின் குடும்பங்கள், அவர்களின் பாட்டனாரான ஹாஷிம் இப்னு அப்து மனாஃப் அவர்களின் பெயருடன் இணைந்து, 'ஹாஷமி குடும்பம்' என அழைக்கப்பட்டது.

### அப்துல் முத்தலிப்:

அப்துல் முத்தலிப் அவர்கள் தமது குடும்ப வழக்கப்படி ஹாஜிகளுக்கு உணவு கொடுத்து உபசரித்தல் மற்றும் தண்ணீர் கொடுத்தல் போன்ற பணிகளை நிறைவேற்றி வந்தார்கள். அப்துல் முத்தலிப் அவர்களின் வாழ்வில் இரண்டு முக்கிய விஷயங்கள் நிகழ்ந்தன. ஒன்று, அப்துல் முத்தலிப் அவர்களின் கனவில் ஜம்ஜம்

கிணறு காட்டப்பட்டது. அதை தோண்டும்படியும் உத்தரவிடப்பட்டது. ஜம்ஜம் கிணற்றை அவர் தோண்டினார். இரண்டாவதாக, அப்ரஹா என்பவன் புனித கஃபாவை இடிக்கும் நோக்கத்துடன் பெரும் படையுடன் புறப்பட்டு வந்தான். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் அபாபீல் என்னும் சிறிய பறவைக் கூட்டங்களைக் கொண்டு அப்படையை அழித்தான்!

அப்துல் முத்தலிப் அவர்களுக்கு பத்து ஆண் மக்களும், ஆறு பெண் மக்களும் பிறந்தனர். ஆண் மக்கள்: 1.ஹாஸ், 2.ஜுபைர், 3.அபூ தாலிப், 4.அப்துல்லாஹ், 5.ஹம்ஸா, 6.அபூ லஹப், 7.கைதாக், 8.முகவ்விம், 9.ழிரார், 10.அப்பாஸ். பெண் மக்கள்: 1.உம்மு ஹகீம், 2.பர்ரா, 3.ஆதிகா, 4.ஸஃபிய்யா, 5.அர்வா, 6.உமைமா.

அப்துல் முத்தலிப் அவர்களின் மூன்றாவது பிள்ளையான அபூ தாலிப் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் தந்தை ஆவார். அப்துல் முத்தலிப் அவர்களின் நான்காவது பிள்ளையான ஹழரத் அப்துல்லாஹ் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தை ஆவார். எனவே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் தந்தையும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தந்தையும் உடன் பிறந்த சகோதரரகள் ஆவார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இவ்வளவு நெருக்கமான உறவைப் பெற்றிருந்தார்கள். இதுவும் ஒரு சிறப்பாகும்.

## பிறப்பும், வளர்ப்பும்

### பெற்றோர்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் **தந்தையார் பெயர் அபூ தாலிப்** என்பதாகும். அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பெரிய தந்தையார் ஆவார். அபூ தாலிப் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறப்பதற்கு முப்பத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன் பிறந்தார்கள். பிரசித்தமான அறிவிப்புகளின்படி அவர்களின் பெயர் அப்து மனாஃப் என்பதாகும். ஒரு அறிவிப்பில் அவரது பெயர் இம்ரான் என்பதாக கூறப்பட்டுள்ளது. சிலர் அவருடைய பெயர் ஷைபா என்பதாகவும் கூறியுள்ளனர். அபூ தாலிப் அவர்கள் குரைஷியர்களில் மிகவும் உயர்வான இடத்தைப் பெற்றிருந்தார்கள். குரைஷித் தலைவர்களில் ஒருவராக இருந்தார்கள். பிரச்சினைகளில் தீர்ப்பு சொல்பவராகவும் இருந்தார்கள்.

## தந்தைவழி வமிசத் தொடர்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் இப்னு அபூ தாலிப் இப்னு அப்துல் முத்தலிப் இப்னு ஹாஷிம் இப்னு அப்து மனாஃப் இப்னு குஸய்யி இப்னு கிலாப் இப்னு முர்ரா இப்னு கஅப் இப்னு லுவய்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் பாட்டனார் அப்துல் முத்தலிப் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை பரிவோடு வளர்க்கும்படி தமது புதல்வர் அபூ தாலிப் அவர்களிடம் வஸீயத்து செய்திருந்தார்கள். அதன்படியே அபூதாலிப் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை தமது பொறுப்பில் ஏற்று அக்கரையுடன் வளர்த்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை தமது பிள்ளைகளைவிட அதிக முக்கியத்துவம் கொடுத்தும் கண்ணியப்படுத்தியும் வளர்த்தார்கள். வெளியே எங்கு சென்றாலும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களையும் தம்முடன் அழைத்துச் செல்வார்கள். உண்ணும் போதும், உறங்கும் போதும் தமக்கு அருகிலேயே இருக்கச் செய்வார்கள். அவ்விதம் சுமார் நாற்பது ஆண்டுகாலம் அன்புடன் அரவணைத்து வளர்த்தார்கள். மேலும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு குரைஷியர்கள் தொல்லைகள் கொடுக்கும் போதெல்லாம், அண்ணலாருக்கு ஆதரவாகவும், பாதுகாவலராகவும் இருந்து உதவிகள் செய்தார்கள். (அல் முர்துஜா, பக்கம் 38)

அபூ தாலிப் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது கொண்டிருந்த பாசத்தைப் போலவே, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களும் தமது பெரிய தந்தயாரும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் தந்தையுமான அபூ தாலிப் அவர்கள் மீது மாறாத பாசத்தை கொண்டிருந்தார்கள். ஒரு முறை அபூ தாலிப் அவர்கள் வியாபார நிமித்தமாக ஷாம் நாட்டிற்குச் செல்ல ஏற்படுகள் செய்தார்கள். அதைக் கண்ட அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், தமது பெரிய தந்தையை பிரிய நேரிடுமே என எண்ணி துக்கத்தில் ஆழ்ந்தார்கள். அந்த துக்கத்தைக் கண்ட அபூ தாலிப் அவர்கள், “இறைவா! இந்த குழந்தயை விட்டுச் செல்லவும் என்னால் முடியாது. எனது பிரிவை இந்த குழந்தையாலும் தாங்க முடியாது. நான் இக்குழந்தையை கண்டிப்பாக பயணத்தில் கூட்டிச் செல்வேன்” என்று கூறினார்கள். அதன்படி அண்ணலாரை ஷாம் நாட்டிற்கு அழைத்தும் சென்றார்கள். (இப்னு இஸ்ஹாக், அல் முர்துஜா, பக்கம் 39)

ஆபூ தாலிப் அவர்கள் நபித்துவத்தின் பத்தாம் ஆண்டு, ஷவ்வால் மாதத்தில் வஃபாத் ஆனார்கள். அப்போது அவர்களது வயது

எண்பதுக்கும் சற்று அதிகமாக இருந்தது. அதே ஆண்டில் ஹழரத் கதீஜதுல் குப்ரா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வஃபாத் ஆனார்கள்.

ஹழரத் அபூ ஸயீத் அல்குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம், அவர்களின் பெரிய தந்தை அபூ தாலிப் அவர்களைப் பற்றி கூறப்பட்டது. அப்போது அவர்கள், “அவருக்கு என் பரிந்துரை மறுமை நாளில் பயனளிக்கக் கூடும்” என்று கூறினார்கள். (ஸஹீஹ் புகாரீ)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் **தாயாரின் பெயர் பாத்திமா பிந்த் அஸத்** என்பதாகும். அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் பேரில் மிகுந்த பாசம் கொண்டவர்களாக இருந்தார்கள். அதனால்தான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தமது பெரியம்மாவைப் பற்றி கூறும்போது, “எனது அன்னையாரின் மறைவுக்குப் பிறகு என்னை ஈன்றெடுத்த தாயாக (பாத்திமா பிந்த் அஸத்) அவர்கள் இருக்கிறார்கள்” என்று கூறினார்கள்.

### தாய்வழி வமிசத் தொடர்:

ஃபாத்திமா பிந்த் அஸத் இப்னு ஹாஷிம் இப்னு அப்து மனாஃப் இப்னு குஸய்.

“அபூ தாலிப் அவர்களின் வீட்டில் விருந்து நடந்தால், எனது பெரியம்மா யாருக்கும் தெரியாமல் எனக்காக சிறிது உணவை எடுத்து மறைத்து வைப்பார்கள். பிறகு அதை எனக்கு சாப்பிடக் கொடுப்பார்கள்” என்றும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். ஹழரத் பாத்திமா பிந்த் அஸத் அவர்கள் இஸ்லாத்தையும் ஏற்றார்கள். புனித மதீனா மாநருக்கு ஹிஜ்ரத்தும் செய்தார்கள்.

ஹிஜ்ரி நான்கு அல்லது ஐந்தாவது ஆண்டில், புனித மதீனாவில் ஹழரத் ஃபாத்திமா பிந்த் அஸத் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வபாத் ஆனார்கள். ஹழரத் ஃபாத்திமா பிந்த் அஸத் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வபாத் ஆன செய்தியை அறிந்ததும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் துயர மிகுதியால் கண்ணீர் சிந்தினார்கள். பிறகு, அவர்களின் இல்லத்திற்குச் சென்று, அவர்களுடைய தலைப்பக்கமாக நின்றுக் கொண்டு, “எனதருமை அன்னையே! அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் உங்கள் மீது கருணை புரிவானாக! தாங்கள் பசியோடு இருந்து, எனக்கு உணவளித்தீர்கள். தங்களின் ஆடைகளைப் பற்றி கவலைப்படாமல், என்னுடைய தேவைகளை பூர்த்தி செய்தீர்கள்” என்று கூறிவிட்டு, தங்களின் மேல்சட்டையை கழற்றி, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல்

கரீம் அவர்களிடம் கொடுத்தார்கள். அதைக் கொண்டு ஹழரத் ஃபாத்திமா பிந்த் அஸத் ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு கபன் கொடுக்கும்படி கூறினார்கள். ஹழரத் உஸாமா பின் ஜைத் மற்றும் ஹழரத் அபூ அய்யூப் அன்ஸாரி ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் ஜன்னத்துல் பகீ அடக்கத்தலத்தில் கபர் தோண்டினார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அந்த கபரில் இறங்கி படுத்துக் கொண்டார்கள். "இறைவா! என்னுடைய அன்னையின் பாவங்களை போக்குவாயாக. அவரின் கபரை விசால மாக்குவாயாக!" என்று துஆவும் செய்தார்கள். பிறகு அவர்களை கபரில் இறக்கினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 26)

மற்றொரு அறிவிப்பில், ஹழரத் பாத்திமா பிந்த் அஸத் அவர்கள் வஃபாத் ஆன போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது சொக்காயை கபனாக அணிவித்தார்கள். அவர்களுடைய கபரில் இறங்கி சிறிது நேரம் படுத்திருந்தார்கள். தமது பெரியம்மாவை கண்ணியப் படுத்தவே இவ்விதம் செய்தார்கள். (அல் முர்துஜா, பக்கம் 39) மற்றொரு அறிவிப்பில், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது பெரியம்மாவுக்காக தமது திருக் கரங்களால் கபரை தோண்டினார்கள். அவர்களின் ஜனாஸாவை தமது திருத் தோள்களில் சுமந்தார்கள். தமது திருக் கரங்களாலேயே கபரிலும் இறக்கினார்கள். (ஹழரத் அலீ, பக்கம் 26)

**சகோதர சகோதரிகள்:** அபூ தாலிப் அவர்களுக்கு தாலிப், அகீல், ஜஃபர், அலீ ஆகிய நான்கு ஆண் மக்கள் பிறந்தார்கள். அவர்களில் தாலிப் என்பவரைத் தவிர்த்து மூன்று ஆண் பிள்ளைகளும் இஸ்லாத்தை ஏற்றார்கள். உம்மு ஹானீ, ஜுமானா ஆகிய இரண்டு பெண் பிள்ளைகளும் பிறந்தார்கள் அவர்கள் இருவருமே இஸ்லாத்தை ஏற்றார்கள்.

இவர்களில் ஹழரத் அகீல் மீது அபூ தாலிப் அவர்கள் மிகுந்த பாசம் கொண்டிருந்தார்கள். ஹழரத் அகீல் அவர்களுக்கு பன்னிரண்டு பிள்ளைகள் பிறந்தன. அவர்களில் ஒன்பது பிள்ளைகள் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் இருந்தார்கள். ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் கர்பலா போரில் கலந்துக் கொண்டு ஷஹீதும் ஆனார்கள். இவர்களில் ஹழரத் முஸ்லிம் இப்னு அகீல் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மிகச்சிறந்த வீரராக திகழ்ந்தார்கள். இவரைத்தான் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூபாவுக்கு தமது தூதராக அனுப்பினார்கள். அங்கு இப்னு ஜியாத் மற்றும் நம்பிக்கை துரோகிகள் சித்திரவதை செய்து அவரை கொலை செய்தார்கள். ஹழரத் அகீல் அவர்கள் தமது தொன்னூற்றாறு வயதில் வஃபாத் ஆனார்கள்.

ஹழரத் ஜஃபர் இப்னு அபூ தாலிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தை ஏற்றவர்களில் ஒருவர் ஆவார். இவரைப் பற்றி ஹழரத் அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பிறகு ஹழரத் ஜஃபர் இப்னு அபூ தாலிப் அவர்களே சிறந்த மனிதராகத் திகழ்ந்தார்கள்" என்று கூறினார்கள். (அல் முர்துஜா, பக்கம் 44) ஹழரத் ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வழிபோக்கர்களை மிகவும் கண்ணியப் படுத்தக் கூடியவர் களாக இருந்தார்கள். அவர்களுக்கு சேவைகள் செய்தார்கள். உணவு வழங்கினார்கள். அதனால் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், 'அபுல் மிஸாக்கீன்' என்னும் குன்னியத் பெயரை சூட்டினார்கள். அபீசீனிய மன்னர் நஜ்ஜாஷி, ஹழரத் ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் முன்னிலையில்தான் இஸ்லாத்தை ஏற்றார்! ஹழரத் ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி எட்டில் முஅத்தா போரில் கலந்துக் கொண்டு வீரதீரத்துடன் போர் புரிந்தார்கள். அவர் ஷஹீதான பிறகு அவரது உடலில் நெற்றி, மார்பு, வயிறு ஆகியவற்றில் சுமார் தொன்னூறு காயங்கள் இருந்தன! அவர்களின் இரண்டு கைகளும் வெட்டப் பட்டிருந்தன. "நான் சுவனத்தில் வானவர்களுடன் ஹழரத் ஜஃபர் பறந்து செல்வதைப் பார்த்தேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இதை ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்க, இமாம் தப்ரானீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் பதிவு செய்திருக்கிறார்கள்.

ஹழரத் உம்மு ஹானீ அவர்கள் அபூ தாலிப் அவர்களுடைய புதல்வியும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் சகோதரியும் ஆவார். அவருடைய திருமணம் ஹுபைரா என்பவருடன் நடந்தது. அவர் மூலமாக அம்ரு என்னும் பிள்ளையும் பிறந்தது. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் உம்மு ஹானீ மீது பாசம் கொண்டவர்களாக இருந்தார்கள். ஹழரத் உம்மு ஹானீ அவர்கள் இரண்டு மனிதர்களுக்கு அபயம் அளித்திருந்தார்கள். அந்த இரண்டு நபர்களையும் கொன்றுவிடுவதாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மிரட்டினார்கள். எனவே, ஹழரத் உம்மு ஹானீ அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று அதுபற்றி கூறினார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "உம்மு ஹானீயே! நீ அபயம் அளித்தவருக்கு நானும் அபயம் அளித்துவிட்டேன். (எனவே கவலை வேண்டாம்) என்று கூறினார்கள்.

ஹழரத் ஜுமானா அவர்கள் அபூதாலிப் அவர்களின் புதல்வியும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் சகோதரியும் ஆவார். இவர் இஸ்லாத்தை ஏற்றிருந்தார். இவர்களை அபூ

சுஃப்யான் பின் அல் ஹாரிஸ் அவர்கள் மணம் புரிந்தார்கள். இவர்களுக்கு அப்துல்லாஹ் என்னும் பிள்ளை பிறந்தது. ஹழரத் ஜுமானா அவர்களுக்கு கைபர் போரில் பங்கும் கொடுக்கப்பட்டது. அவர்களுக்கு முப்பது வஸக் பங்காக கொடுக்கப்பட்டது என இப்னு இஸ்ஹாக் கூறியுள்ளார்.

## பிறப்பு:

ஸஹீஹான அறிவிப்புகளின்படி, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், நபித்துவத்திற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்பாக பிறந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்து சுமார் முப்பது ஆண்டுகள் கழித்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பிறந்தார்கள். இப்னு ஸஅத் அவர்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், 30, ‘ஆமுல் பீல்’ என்னும் யானைப்படை ஆண்டில், ரஜபு மாதத்தில், பன்னிரண்டு இரவுகள் கழிந்த பிறகு பிறந்தார்கள்” என கூறியுள்ளார்கள்.

ஹழரத் இமாம் ஹாகிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை ஹழரத் ஃபாத்திமா பிந்த் அஸத் அவர்கள் புனித கஃபாவின் உள்ளே பிரசவித்தார்கள். ஹகீம் பின் ஹிஸாம் அவர்களும் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள்” என கூறியுள்ளார்கள். ஆயினும் ஹழரத் இமாம் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் பிறப்பிடம் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன.

ஹழரத் ஷாஹ் வலியுல்லாஹ் திஹ்லவி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ‘ஹழரத் அலீ இப்னு அபீதாலிப்’ என்னும் நூலில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளேதான் பிறந்தார்கள் என்று எழுதியுள்ளார்கள். மேலும் புனித கஃபாவினுள்ளே ஹகீம் பின் ஹிஸாம் அவர்கள் மட்டும்தான் பிறந்தார்கள் என்பதையும் மறுத்துள்ளார்கள். ஹழரத் ஃபாத்திமா பிந்த் அஸத் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை புனித கஃபாவினுள்ளேதான் பிரசவித்தார்கள் என்றும் எழுதியுள்ளார்கள். (ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம்26)

ஹழரத் முஹம்மத் ஹஸீப் காதிரீ அவர்கள், தம்முடைய ‘ஸீரதே ஹழரத் ஸய்யிதினா அலீயுல் முர்துஜா’ என்னும் நூலில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள் என்றே எழுதியுள்ளார்கள். (பக்கம் 27)

இருபதாம் நூற்றாண்டின் இஸ்லாமிய அறிஞர் மவ்லானா அபுல் ஹஸன் அலி நத்வீ அவர்கள் தமது ‘அல் முர்துஜா’ என்னும் நூலிலும்,

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள் என்று எழுதியுள்ளார்கள். (பக்கம் 50)

“ஸீரத் ஹழரத் அலீ” என்னும் நூலிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள் என்று “நூருல் அப்ஸார்” நூலை ஆதாரமாகக் கொண்டு கூறப்பட்டுள்ளது. (பக்கம் 19)

ஹழரத் அல்லமா முஹம்மத் மஸ்ஊத் காதிரீ அவர்கள் தமது ‘ஹழரத் அலீயுல் முர்துஜா’ என்னும் நூலிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள் என்று எழுதியுள்ளார்கள்.

ஹழரத் அபூ அஹ்மத் குலாம் ஹஸன் உவைஸி காதிரி அவர்கள் தமது ‘ஷரா தீவானே அலீ ஃபைஸானே ஹைதரி’ என்னும் நூலில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் புனித கஃபாவின் உள்ளே பிறந்தார்கள் என்று கூறியுள்ளார்கள். பக்கம் 36.

முஃப்தி குலாம் ரஸூல் ஜமாஅதி நக்ஷ்பந்தி அவர்கள் தமது ‘பாரா இமாம்’ (பன்னிரண்டு இமாம்கள்) என்னும் நூலிலும் ஹழரத் அலீ இப்னு அபி தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள் என்று எழுதியுள்ளார்கள். (பக்கம் 211)

ஷியா அறிஞர்களில் பெரும்பாலானோர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் புனித கஃபாவினுள்ளே பிறந்தார்கள் என கூறுகின்றனர். ஆனால், ஹதீஸ் கலை மேதைகளோ அதை மறுக்கிறார்கள். (அல் முர்துஜா, பக்கம் 50)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் 28, ‘ஆமுல் பீல்’ என்னும் யானைப்படை ஆண்டில், ரஜபு மாதம் 13ம் தேதி, வெள்ளிக் கிழமையன்று பிறந்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் பிறந்து, அவரை தொட்டிலில் போடும் வரை அவர்கள் தமது கண்களை மூடியபடியே இருந்தார்கள். பிறகு அவர்களை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் கொண்டு சென்று, அவர்களது திரு மடியில் படுக்க வைத்தார்கள். உடனே குழந்தையான ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கண் திறந்து அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுகத்தை முதன் முதலாகப் பார்த்தார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் முதன் முதலாக கண் திறந்து பார்த்தது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுகத்தைத்தான்! ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் தனிச் சிறப்புகளில்

இதுவும் ஒன்றாக கணிக்கப்படுகிறது. மேலும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது திருமடியில் இருந்த குழந்தையை எடுத்து, அதன் வாயில் தமது புனிதமான உமிழ்நீரை தடவினார்கள். பிறகு, “இக்குழந்தைக்கு நான் ‘அலீ’ என்று பெயர் சூட்ட விரும்புகிறேன்” என்று பெயரையும் சூட்டினார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்து முப்பது ஆண்டுகள் கழித்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பிறந்தார்கள். (ஸீரதே ஹழரத் ஸய்யிதினா அலீயுல் முர்துஜா, பக்கம் 27)

## திருப் பெயர்:

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே “அலீ” என்னும் பெயரை சூட்டினார்கள். லகப் என்னும் துணைப் பெயர் முர்துஜா என்பதாகும். குன்னியத் பெயர் அபுல் ஹஸன், அபூ துராப் போன்றவை களாகும். ஹைதர் என்பது சிறப்புப் பெயராகும். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் மோதிரத்தில் ‘அல் முல்கில்லாஹ்’ என செதுக்கப் பட்டிருந்தது.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் பிறந்த போது அவர்களின் குடும்பம் ஒரு நடுத்தர குடும்பமாகவே இருந்தது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு நான்கு வயதுகள் நிரம்பிய போது மக்கா மாநகரில் கடுமையான பஞ்சம் ஒன்று ஏற்பட்டது. இதன் காரணமாக ஹழரத் அபூதாலிப் அவர்களின் குடும்பமும் பொருளாதார நெருக்கடியில் சிக்கித் தவித்தது. இக்கட்டான இச் சூழ்நிலையில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை வளர்க்கும் பொறுப்பை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாமே ஏற்றுக் கொண்டார்கள். நான்கு வயது நிரம்பிய காலம் முதலாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடையவும், ஹழரத் கதீஜா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களுடையவும் பாசத்திலும், பராமரிப்பிலும் வளர்ந்தார்கள்

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் எந்த காலத்திலும், எந்த சூழ்நிலையிலும் சிலைகளை வணங்கியதில்லை. குப்ரான வார்த்தைகளைக் கூறியதுமில்லை. ஹழரத் கதீஜதுல் குப்ரா ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்குப் பிறகு முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்ற பெருமை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையே சேரும்!

தாரீகே தப்ரீ என்னும் நூலில் ஹழரத் இமாம் தப்ரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் முஜாஹித்

ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மூலமாக அறிவிக்கிறார்கள், மக்கத்து குரைஷிகள் கஷ்ட ஜீவனம் மற்றும் பஞ்சத்தால் அவதிப்பட்டார்கள். அபூ தாலிப் அவர்கள் அந்த சூழ் நிலையில் மிகவும் கஷ்டப்பட்டார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், தமது சிறிய தந்தயார் ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சென்று, "சிறிய தந்தையே! உங்கள் சகோதரர் அபூ தாலிப் அதிக குழந்தைகளுடன் அவதிப் பட்டுக் கொண்டிருக்கிறார். வாருங்கள், நாம் சென்று, அவருடைய சுமையை இறக்கும் முகமாக சில குழந்தைகளை பராமரித்து வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்வோம்" என்றார்கள். பிறகு இருவரும் அபூ தாலிப் அவர்களின் இல்லத்திற்குச் சென்றார்கள்.

"பெரிய தந்தையே! இப்போது பஞ்சத்தால் மக்கள் அவதிப்பட்டுக் கொண்டு இருக்கிறார்கள். இந்த நிலை மாறும்வரை உங்கள் குழந்தைகளின் பொறுப்பை ஏற்கும் நோக்கத்தில் நாங்கள் வந்துள்ளோம்" என்றனர். அதைக் கேட்ட அபூ தாலிப் அவர்கள், "அகீலை மட்டும் என்னிடம் விட்டுவிட்டு நீங்கள் நாடியவரை அழைத்துச் செல்லுங்கள்" என்று கூறினார்கள். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை தமது பொறுப்பில் ஏற்றுக் கொண்டார்கள். ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தமது பொறுப்பில் ஏற்றுக் கொண்டார்கள். (அல் முர்துஜா, பக்கம் 51)

அந்த நாளிலிருந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் இல்லத்தில், அண்ணலாரின் பொறுப்பில், அண்ணலாரின் பராமரிப்பில், அண்ணலாரின் அரவணைப்பில் வளர்ந்தார்கள். இப்படியாக, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வீட்டிலும், பராமரிப்பிலும் வளர்ந்தார்கள். அதைப் போலவே ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் வீட்டிலும், பராமரிப்பிலும் வளர்ந்தார்கள். நபித்துவம் வரையிலும், நபித்துவத்திற்குப் பிறகும் கூட இதே நிலை நீடித்தது. எனவேதான் ஆண்களில் முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்கும் வாய்ப்பு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு கிடைத்தது.

## இஸ்லாத்தை ஏற்றல்

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள் சிறு வயது முதலே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்

அவர்களின் நேரடிக் கண்காணிப்பில் வளர்ந்ததால் தூய்மையான வாழ்க்கை முறைகளையும், இறை நம்பிக்கையின் அடிப்படை களையும், வற்றாத அறிவையும் பெற்றார்கள். சிலை வணக்கம் மற்றும் இறைவனுக்கு இணைவைக்கும் எல்லாவிதமான காரியங்களை விட்டும் பரிசுத்தப் படுத்தப்பட்டவர்களாக இருந்தார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நபித்துவம் அருளப்பட்டதும், ஹழரத் கதீஜா பிந்த் குவைலித் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்குப் பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களே முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்றார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து மறைவாக தொழுதும் வந்தார்கள். "மக்கள் அனைவரும் தொழத் துவங்க ஏழாண்டுகளுக்கு முன்பிருந்தே நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் தொழுது வந்தேன்" என்று இதுகுறித்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள் அறிவித்திருக்கிறார்கள். இதன் மூலமாக இஸ்லாத்தை ஏற்றதிலும், தொழத் துவங்கியதிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களுக்கு கிடைத்த சிறப்பு வெளிப்படுகிறது

ஹழரத் இப்னு இஸ்ஹாக் கூறுகிறார்கள், “ஒருமுறை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களும் ஹழரத் கதீஜா பிந்த் குவைலித் ரலியல்லாஹு அன்ஹா அவர்களும் தொழுதுக் கொண்டிருப்பதை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கண்டார்கள். “இந்த செயல் புதுமையாக இருக்கிறதே!” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “இது அல்லாஹ்வின் தீன் (கோட்பாடு, சமயம்) ஆகும். இதை அல்லாஹ் தனக்காக பிரியப்படுகிறான். அதன் மீதே நபிமார்களும் அனுப்பப்பட்டார்கள். உம்மையும் இந்த ஓரிறைக் கொள்கையின் பக்கம் நான் அழைக்கிறேன். அவன் தனித்தவன். அவனுக்கு இணை எவருமில்லை” என்று கூறினார்கள். உடனே ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், “இது நான் கேள்விப்படாத விஷயமாக இருக்கிறது. இது பற்றி எனது தந்தையார் (அபூ தாலிப்) அவர்களிடம் கேட்காமல் எந்த முடிவையும் எடுக்க இயலாதவனாக இருக்கிறேன்” என்று கூறினார்கள்.

வெளிப்படையாக இஸ்லாமிய அழைப்பு மேற்கொள்ள உத்தரவு கிடைக்கும் வரை இவ்விஷயம் வெளிப்படுவதை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பவில்லை. எனவே, “நீர் இப்போது ஈமான் கொள்ளாவிட்டாலும் பரவாயில்லை. ஆயினும் இவ்விஷயத்தை இப்போது வெளிப் படுத்தாதீர்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்

அவர்கள் அன்றைய இரவை அமைதியுடன் கழித்தார்கள். அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் இதயத்தில் இஸ்லாம் என்னும் ஒளியை பிரகாசிக்கச் செய்தான். மறு நாள் பொழுது விடிந்ததும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தேடிச் சென்றார்கள். “அண்ணலாரே! தாங்கள் நேற்று எனக்கு விடுத்த அழைப்பு என்ன?” என்று கேட்டார்கள்.

அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் இல்லை என்றும், அவனுக்கு ஈடு இணை எவரும் இல்லை என்றும் நீர் சாட்சியம் கூறவேண்டும். மேலும், லாத் மற்றும் உஸ்ஸாவையும் நிராகரிக்க வேண்டும். அல்லாஹ்வுக்கு இணை வைப்பதை விட்டும் உம்மை பாதுகாத்துக் கொள்ள வேண்டும்” என்று கூறினார்கள். உடனே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கலிமா ஷஹாதத்தைக் கூறி இஸ்லாத்தை ஏற்றார்கள். தமது தந்தையாருக்கும் தெரியாமல் வந்து, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து இபாதத்தும் புரிந்துவந்தார்கள். (இப்னு இஸ்ஹாக், அல் முர்துஜா பக்கம் 52)

இந்த அறிவிப்பின் மூலம் ஹழரத் கதீஜா பிந்த் குவைலித் ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு அடுத்து முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்றவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தான் என்பதை அறியலாம்.

ஹழரத் இப்னு இபாத் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான் அல்லாஹ்வின் அடியாராகவும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சகோதரனாகவும் இருக்கிறேன். நான் ஸித்தீக்கு அக்பராகவும் இருக்கிறேன். நான் மக்கள் யாவருக்கும் ஏழு வருடங்களுக்கு முன்பாகவே இஸ்லாத்தை ஏற்றுள்ளேன்” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். இந்த ஹதீஸை ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது ‘கஸாயிஸ் அலீ’ என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

“ஹழரத் கதீஜதுல் குப்ரா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு அடுத்து முதலாவதாக இஸ்லாத்தை ஏற்றது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தான்” என்று ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் முஹம்மத் பின் அப்துர் ரஹ்மான் ஸர்ராரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தமது ஒன்பதாவது வயதில் இஸ்லாத்தை ஏற்றார்கள்.

ஹழரத் ஸல்மான் பார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருச் சமூகத்தில் முதன் முதலாக வருகைப் புரிந்தவரும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது முதன் முதலாக ஈமான் கொண்டவரும் ஹழரத் அலீ இப்னு அபிதாலிப் கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்தாம்!” அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 4, ஹதீஸ் எண்: 6051, பக்கம் 501.

ஹழரத் அபூ யஃலா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முதல் வஹீ (இறைச் செய்தி) திங்கட்கிழமை அன்று அருளப்பட்டது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அடுத்த நாள், அதாவது செவ்வாய்க்கிழமை இஸ்லாத்தை ஏற்றார்கள்”. (ஸீரதே ஹழரத் ஸய்யிதினா அலீயுல் முர்துஜா, பக்கம் 29)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தமது ஒன்பதாம் வயதில்  இஸ்லாத்தை ஏற்றார்கள்” என்று முஹம்மத் இப்னு அப்துர்ரஹ்மான் ஸர்ரார் அவர்கள் கூறியுள்ளார்கள். “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து தொழுத முதல் நபர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்தான். அப்போது அவருடைய வயது பத்தாக இருந்தது” என்று ஹழரத் முஜாஹித் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் ஜைது பின் அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “இறைத்தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் இஸ்லாத்தை ஏற்ற முதல் நபர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்தான்!” (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ, அல் முர்துஜா)

ஹழரத் ஸல்மான் பார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “உங்களில் முதன் முதலாக என்னுடைய ஹவ்லில் வரக்கூடியவர், முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்ற ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களே!” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ’, பக்கம் 76)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், உம்முல் முஃமினீன் ஹழரத் கதீஜதுல் குப்ரா ரலியல்லாஹு அன்ஹா

அவர்களுக்குப் பிறகு முதன் முதலாக இஸ்லாத்தை ஏற்றார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

## இபாதத்

ஹழரத் அபூ ஹம்ஸா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து தொழுத முதல் நபர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தாம்" என்று ஹழரத் ஜைது பின் அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறக் கேட்டேன்". இந்த ஹதீஸை ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் 'கஸாயிஸ் அலீ' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

மற்றொரு அறிவிப்பில் அபீஃப் அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், "அறியாமைக் காலத்தில் ஒரு முறை எனது வீட்டில் உள்ளவர்களுக்காக துணி மற்றும் நறுமணப் பொருட்களை வாங்க திரு மக்காவிற்கு வந்தேன். அப்போது வணிகராக இருந்த ஹழரத் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிப் அவர்களிடம் சென்றேன். அவருடன் திரு கஃபாவை பார்க்கும் விதமான ஒரு இடத்தில் அமர்ந்தேன். அச்சமயம் சூரியன் உதயமாகக் கூடியதாக இருந்தது. திடீரென ஒரு இளைஞர் கஃபாவிற்கு அருகில் வந்தார். வானத்தைப் பார்த்தார். பிறகு கஃபாவின் பக்கம் முகத்தைத் திருப்பி நின்றார். சிறிது நேரம் கழித்து ஒரு சிறுவர் வந்தார். அவர் இளைஞருக்கு வலது புறமாக நின்றுக் கொண்டார். சிறிது நேரம் கழித்து ஒரு பெண்மணி வந்தார். அவர் அவ்விருவருக்கும் பின்னால் நின்றுக் கொண்டார். இளைஞர் ருகூஉ செய்த போது, அவருடன் சிறுவரும், பெண்மணியும் ருகூஉ செய்தார்கள். இளைஞர் ருகூஉவிலிருந்து மீண்டபோது, அவருடன் சிறுவரும் பெண்மணியும் அவ்விதமே செய்தனர். இளைஞர் ஸுஜூது செய்தபோது, அவருடன் சேர்ந்து சிறுவரும் பெண்மணியும் ஸுஜூது செய்தனர். (அதைக் கண்ட நான்) "அப்பாஸே! இது ஒரு பெரிய விஷயமாக இருக்கிறதே!" என்று கூறினேன். (அதற்கு ஹழரத் அப்பாஸ் அவர்கள்) "உண்மையில் பெரிய விஷயம்தான்! அந்த இளைஞர் யார் என்று நீங்கள் அறிவீரா?" என்று கேட்டார். நான், "இல்லை" என்றேன். அந்த இளைஞர் முஹம்மத் இப்னு அப்துல்லாஹ் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்), எனது சகோதரரின் புதல்வர் ஆவார்!" என்று கூறினார்.

"அந்த சிறுவர் யார் என்பதை அறிவீரா?" (என்று ஹழரத் அப்பாஸ் அவர்கள் கேட்டார்கள்.) பிறகு, "அச்சிறுவர் அலீ கர்ரமல்லஹு வஜ்ஹஹுல் கரீம், எனது சகோதரரின் புதல்வர் ஆவார்!" என்று கூறினார். பிறகு, "அப்பெண்மணி யார் என்று அறிவீரா?" என்று கேட்டுவிட்டு, "அவர் கதீஜா பின்தே குவைலித் ரலியல்லாஹு அன்ஹா ஆவர். அவர் அந்த இளைஞரின் துணைவியாரும் ஆவார். எனது

சகோதரரின் புதல்வர், "அவருடைய இறைவன், வானங்கள் மற்றும் பூமியின் இறைவன் ஆவார் என்று கூறுகிறார். மேலும், அதற்கான உத்தரவை அவருடைய இறைவன் வழங்கியுள்ளதாகவும் கூறுகிறார். இறைவன் மீது ஆணையாக, இந்த பூமி முழுவதிலும் அந்த மூன்று பேரைத் தவிர அந்த தீனை பின்பற்றுபவர் வேறு எவரும் இல்லை" என்றும் கூறினார்! (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, பக் 22)

"எல்லோருக்கும் முன்பாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து தொழுதவர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தான்!" என்று ஹழரத் அப்பான் பின் முஸ்லிம் அவர்கள் கூறியுள்ளார்கள். (தபகாத் இப்னு ஸஃத், பாகம் 1, பக்கம் 151.)

ஹழரத் அம்ரு இப்னு இபாத் பின் அப்துல்லாஹ் அவர்கள் கூறுகிறார்கள்: "நான் அல்லாஹ்வின் அடியானாக இருக்கிறேன். இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சகோதரனாக இருக்கிறேன். நான் ஸித்தீக்குல் அக்பராக இருக்கிறேன். நான் ஜனங்கள் ஈமான் கொள்வதற்கு ஏழு வருடங்களுக்கு முன்பாக ஈமான் கொண்டேன்" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ, பக் 23)

ஹழரத் முஹம்மத் பின் உபைதுல்லாஹ் பின் அபூ ராஃபிஆ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது தந்தை வாயிலாகவும், அவர் தமது பாட்டனார் வாயிலாகவும் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திங்கட்கிழமை காலையில் தொழுதார்கள். ஹழரத் உம்முல் முஃமினீன் கதீஜதுல் குப்ரா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் திங்கட்கிழமை கடைசி நேரத்தில் தொழுதார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் புதன்கிழமை தொழுதார்கள். இம்மூவரும் ஏழு வருஷங்கள் மற்றும் ஆறு மாதங்கள் வரை மறைந்து தொழுது வந்தார்கள். இவர்களைத் தவிர வேறு எவரும் முதலாவதாக தொழவில்லை!" (அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 1, பக்கம் 475)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் இபாதத்து புரிவதில் மிகவும் ஆர்வமாக இருந்தார்கள். உடலும், உள்ளும், புறமும் லயித்த நிலையில் தொழுகயை பேணிவந்தார்கள். ஒருமுறை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் உடலில் அம்பு ஒன்று துளைத்து, உடலிலேயே தங்கி விட்டது. அதனால் கடுமையான வலியும் ஏற்பட்டது. அம்பை எவ்விதம், எப்போது எடுப்பது என்று மருத்துவர்களும், தோழர்களும் ஆலோசித்தனர். இறுதியாக, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு

வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தொழுகையில் மனம் லயித்திருக்கும் போது அம்பை பிடுங்கி எடுப்பது என முடிவு செய்யப்பட்டது.

அதன்படியே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தனை மறந்து, மனலயிப்புடன் தொழுதுக் கொண்டிருக்கும் போது அன்னாரின் உடலிலிருந்து அம்பு பிடுங்கி எடுக்கப்பட்டது. ஆயினும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், வலியையோ, வேதனையையோ வெளிப்படுத்தவே இல்லை! அவர்கள் தொடர்ந்து தொழுதுக் கொண்டே இருந்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் தொழுகை இவ்விதமாக அமைந்திருந்தது. (அலீயுல் முர்துஜா, பக்கம் 107)

ஹழரத் அபூ ஹம்ஸா அவர்கள் கூறுகிறார்கள்: “இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து தொழுத முதல் நபர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள்தாம்” என்று ஹழரத் ஜைது பின் அர்கம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறக் கேட்டேன். (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ, பக் 21)

## உடலமைப்பு:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் நடுத்தரமான உயரத்தைப் பெற்றிருந்தார்கள். மாநிறம் கொண்டவர்களாக இருந்தார்கள். உடலில் ரோமம் மிகுந்திருந்தது. ஹழரத் அவர்கள் பெரிய வயிறு கொண்டவர்களாகவும் இருந்தார்கள். பெரிய கண்களையும், கவர்ச்சியான முகத்தையும் பெற்றிருந்தார்கள். தலையில் ரோமங்கள் குறைவாக இருந்தன. உறுதியான தோள்களைப் பெற்றிருந்தார்கள்.

ஹழரத் அபூ ஸயீத் தாஜிர் அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பஜாருக்கு (கடைவீதி) வந்து செல்லக் கூடியவராக இருந்தார்கள். பஜாரில் உள்ளவர்கள் அன்னாருக்கு ஸலாம் கூறுவார்கள். மேலும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை “பெரிய வயிற்றுக்காரரர்” என்றும் கூறுவார்கள். அப்போது ஹழரத் அவர்கள், (எனது வயிற்றின்) மேல் பகுதியில் அறிவு நிறைந்திருக்கிறது. கீழ் பகுதியில் உணவு” என்று கூறிவிட்டுச் செல்வார்கள். (தபகாத் இப்னு ஸஃத், பாகம் 2, பக்கம் 155.)

ஹழரத் அபூ இஸ்ஹாக் கூறுகிறார்கள், “நான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை மிம்பரின் மீது பார்த்தேன். அவர்களின் தலை மற்றும் தாடியின் நிறம் வெள்ளையாக இருந்தது. (அல் முஅஜம் அல் கபீர்- தப்ரானீ, பாகம் 1, பக்கம் 147)

ஹழரத் வாகதி கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் நடுத்தர உயரம் கொண்டவர்களாக இருந்தார்கள். இரண்டு புஜங்களுக்கு இடையில் மாமிசம் புடைத்திருந்தது. தாடி பெரியதாக இருந்தது. வயிறும் பெரியதாக இருந்தது. பருத்த கண்களை பெற்றிருந்தார்கள். தலை மற்றும் தாடி வெளுத்திருந்தது. (அல் முஅஜம் அல் கபீர்- தப்ரானீ, பாகம் 1, பக்கம் 147)

## ஹிஜ்ரத்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது மாறாத பாசம் கொண்டிருந்தார்கள். தமது உடல், பொருள், உறவு ஆகிய அனைத்தையும் விட அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களையே உயர்வாகக் கொண்டிருந்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது கொண்டிருந்த பற்றுக்கும், பாசத்திற்கும் ஒரு எடுத்துக்காட்டாக, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனா மாநகருக்கு ஹிஜ்ரத் செய்த இரவில் நடந்த நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

மக்கத்து குறைஷிகள் பலரும் இஸ்லாம் மார்க்கத்தில் இணைவதையும், அவ்விதம் இணைந்தவர்களில் பெரும்பாலோர் ஹிஜ்ரத் செய்து வெளியிடங்களுக்கு சென்று விடுவதையும் கண்ட மக்கத்து இணைவைப்பாளர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களைக் கொல்வதற்கு இதுவே சமயம் எனக் கருதினார்கள். குறைஷியரிலுள்ள பிரபல கோத்திரத்தார் பலரும் ஆலோசனை மன்றமாகிய தாருன்னத்வாவில் ஒன்று கூடினர். ஆலோசனையின் முடிவில், 'அரபியரில் உள்ள பிரபலமான கோத்திரங்கள் ஒவ்வொன்றிலுமிருந்தும் ஒரு துணிகரமானவரை தேர்ந்தெடுத்து, அவர்கள் யாவரையும் ஒன்று கூட்டி, ஒரு இரவில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் வீட்டை சூழ்ந்து நிற்கச் செய்து, பஜ்றுத் தொழுகைக்காக நபியவர்கள் வீட்டை விட்டு வெளியே வரும்போது, அனைவரும் சேர்ந்து அவரை கொலை செய்துவிட வேண்டும்' என்று முடிவு செய்தார்கள். இவ்வாறு செய்தால் எல்லாக் கோத்திரங்களையும் எதிர்க்க ஹாஷிம் குலத்தார் துணிய மாட்டார்கள். இஸ்லாத்தை ஏற்றவர்களும் விஷமம் செய்ய மாட்டார்கள் என்பதே அவர்களின் எண்ணமாகும்.

இணைவைப்பாளர்களின் இந்த சூழ்ச்சியை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களும் அறிந்தார்கள். அதேசமயம், மதீனா மாநகருக்கு ஹிஜ்ரத் செய்ய இறைவனுடைய கட்டளையும் வந்தது. எனவே, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மக்கா மாநகரை விட்டு வெளியேற திட்டம்

தீட்டினார்கள். குறிப்பிட்ட இரவிலே மக்கத்து இணைவைப்பாளர்கள் ஆயுதபாணிகளாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வீட்டை சூழ்ந்து கொண்டார்கள். உள்ளே, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை அழைத்து, அவர்களிடம் மக்கத்து மக்கள் தம்மிடம் கொடுத்து வைத்திருந்த அமானிதப் பொருட்களை ஒப்படைத்தார்கள். அவற்றை உரியவர்களிடம் சேர்ப்பிக்கும்படியும் கூறினார்கள்.

பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை தமது படுக்கையிலே படுத்துக் கொள்ளும்படியாக கூறினார்கள். அதன்படி ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் மிகுந்த உவகையோடு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் படுக்கையிலே படுத்துக் கொண்டார்கள். வெளியே கொலை வெறியோடு நிற்கும் பகைவர்களைப் பற்றியோ, அவர்களால் தமது உயிருக்கு ஆபத்து ஏற்படலாம் என்பதைப் பற்றியோ சிறிதும் கவலைப் படாமல் உறங்கிப் போனார்கள்! அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் தங்கள் வீட்டை விட்டுப் புறப்பட்டு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களின் வீட்டுக்குச் சென்று, அங்கிருந்து அவரையும் அழைத்துக் கொண்டு தௌர் மலை நோக்கி புறப்பட்டார்கள்.

காலை வரை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வீட்டை விட்டும் வெளியே வருவதை காணாத பகைவர்கள், வெறியோடு வீட்டினுள்ளே புகுந்தார்கள். படுக்கையில் படுத்திருந்தவரின் போர்வையை பற்றி இழுத்தனர்! வேகமாக வாட்களை பாய்ச்ச முயன்றனர்! ஆனால், படுக்கையில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் தூக்க கலக்கத்துடன் எழுந்து அமர்வதைக் கண்டு பகைவர்கள் திகைத்துப் போனார்கள்! "அண்ணல் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) எங்கே?" என்று வெறியோடு கேட்டனர். "இவ்வாசல் வழியாகத்தானே அவர்கள் வெளியே சென்றார்கள்" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் எவ்வித பதட்டமுமின்றி கூறினார்கள்.

இதனால் வெறி கூடிய பகைவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை இழுத்துப் போட்டு அடித்தனர்! ஆயினும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கலங்கவில்லை! பகைவர்களைப் பற்றி கவலைப்படவுமில்லை! மேலும் மூன்று நாட்கள் வரை அவர்கள் மக்கா மாநகரிலேயே தங்கி இருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கட்டளைப்படி அமானிதங்களை உரியவர்களிடம் சேர்ப்பித்தார்கள். பிறகு நிம்மதியுடன் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அவர்களைக் காண திருமதீனா நோக்கிப் புறப்பட்டார்கள்!

ஹிஜ்ரத் பற்றி ஹழரத் இப்னு ஸஅத் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் வாயிலாக அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் செய்யும் எண்ணத்துடன் புனித மதீனாவிற்கு புறப்பட்டுச் சென்ற போது, தன்னிடமிருந்த அமானிதப் பொருட்களை உரியவர்களிடம் சேர்ப்பிக்கும் பொருட்டு இங்கேயே தங்கி இருக்கும்படி எனக்கு உத்தரவிட்டார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புறப்பட்டுச் சென்ற பிறகு நான் மூன்று நாட்கள் மக்காவில் தங்கியிருந்தேன். இந்த மூன்று நாட்களும் நான் ஜனங்களுக்கு முன்பாக சென்றுக் கொண்டும், வந்துக் கொண்டும் இருந்தேன். மூன்று நாட்கள் கழித்து, நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் சென்ற அதே வழியில் புனித மதீனா நோக்கிச் சென்றேன். இரவு முழுவதும் நடந்தும், பகலில் எங்காவது மறைந்தும் பயணம் செய்து புனித மதீனாவை அடைந்தேன். எனது கால்கள் வீக்கம் கண்டு வெடிப்பும் கண்டன.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வந்து சேரும் வரை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் புனித மதீனாவிற்குள் பிரவேசிக்க வில்லை. புனித மதீனாவிற்கு மூன்று மைல் முன்னதாக இருந்த குபா என்னும் இடத்திலேயே தங்கியிருந்தார்கள். அங்கு ஒரு மஸ்ஜிதையும் கட்டினார்கள். பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை எதிர்நோக்கிக் காத்திருந்தார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் புனித மதீனாவை வந்தடைந்த செய்தி அறிந்து, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அன்னாரை அழைத்து வரும்படி தோழர்களிடம் கூறினார்கள். "அவர் கால்களில் வீக்கம் கண்டு நடக்க முடியாதவராக இருக்கிறார்" என தோழர்கள் கூறினர். உடனே, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் வந்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை தமது புனிதமான மார்போடு அணைத்துக் கொண்டார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் வெடிப்பு கண்ட பாதங்களைக் கண்டு அழுதார்கள். பிறகு, தமது புனிதமான உமிழ்நீரை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் பாதங்களில் தடவினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் முற்றிலுமாக குணமடைந்தார்கள். (அல் முர்துஜா பக்கம் 61)

## மதீனா வழ்க்கை:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ரபீவுல் அவ்வல் மாதத்தில் புனித மக்கா மாநகரிலிருந்து ஹிஜ்ரத்

செய்து, புனித மதீனாவை வந்தடைந்தார்கள். அதுவரை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புனித மதீனாவில் பிரவேசம் செய்யாமல் குபா என்னுமிடத்தில், குல்ஸூம் இப்னு ஹத்ம் வீட்டில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை எதிர்ப்பார்த்து காத்திருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குபாவில் நான்கு நாட்கள் தங்கியிருந்ததாக இப்னு ஹிஷாம் அவர்கள் கூறியுள்ளார்கள். குபாவில் தங்கியிருந்த அந்த நான்கு நாட்களில் ஒரு மஸ்ஜிதையும் அங்கு நிர்மாணித்தார்கள். மேலும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் குபாவை வந்தடைந்த பிறகே, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புனித மதீனா மாநகரில் பிரவேசித்தார்கள்.

## சகோதர ஒப்பந்தம்:

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனத்து அன்ஸார்கள் மற்றும் மக்கத்து முஹாஜிர்கள் ஆகியோரிடையே சகோதர ஒப்பந்தத்தை ஏற்படுத்தினார்கள். வரலாற்றில் இது ஒரு மாபெரும் புரட்சியாக கருதப்படுகிறது! அந்த சகோதர ஒப்பந்தத்தின் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை தமது சகோதரராக ஏற்றுக் கொண்டார்கள். அதைப் பற்றி ஹழரத் இமாம் திர்மிதீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் ஹஸன் என்ற நிலையில் கீழ்கண்ட ஹதீஸை கூறியுள்ளார்கள்.

“நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் தோழர்களை ஒருவரோடொருவர் சகோதரர்களாக ஆக்கினார். அப்பொழுது ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் தங்களின் இரு கண்களிலிருந்தும் கண்ணீர் சிந்திய வண்ணம் நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து, "நாயகமே! தாங்கள் தங்களின் தோழர்களைச் சகோதரர்களாக ஆக்கிவிட்டீர்கள். என்னை (மட்டும்) எவருடனும் சகோதரராக்கவில்லையே" என்று கூறினார்கள். அப்பொழுது நபிபெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நீர்தாம் என்னுடைய சகோதரர் ஆயிற்றே! இவ்வுலகிலும் சரி, மறு உலகிலும் சரி" என்று கூறினார்கள். அறிவிப்பவர்: ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள், ஆதாரம்: திர்மிதீ

ஹழரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “இந்த பூமி, வானங்கள், உயிரினங்கள் படைக்கப்படுவதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக சுவனத்து வாசல்களில், ஹழரத் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் ரஸூலாக இருக்கிறார், ஹழரத்

அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அவர்களுடைய சகோதரராக இருக்கிறார்" என எழுதப்பட்டிருந்தது" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 71).

## மணவாழ்க்கை

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திரு மகளார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹூதஆலா அன்ஹா அவர்களை மணக்கும் பேற்றை அல்லாஹூ ஸூப்ஹானஹூ வதஆலா ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களுக்கு வழங்கினான். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திரு மகளாரை மணம் புரிய பெரும் செல்வந்தர்களும் மற்றும் ஸஹாபாக்கள் பலரும் மணம்பேசினர். ஆயினும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் சம்மதிக்கவில்லை.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் நுபூவத்துடைய பதிமூன்றாம் ஆண்டில் புனித மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்தார்கள். ஹிஜ்ரத்தின் இரண்டாம் ஆண்டில் வல்ல அல்லாஹ் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் அருமை மகளார் சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹூ அன்ஹா அவர்களின் நிகாஹ் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுடன் செய்யும்படி உத்தரவிட்டான்.

ஹழரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் இருந்தேன். அப்போது வஹீ வெளிப்படுவதற்கான அறிகுறிகள் தென்பட்டன. வஹீ அருளப்பட்ட பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "எனது அருமை மகளார் ஸய்யதுன்னிஸா ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் நிகாஹ் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுடன் செய்யும்படி வல்ல அல்லாஹ் எனக்கு உத்தரவிட்டுள்ளான். நீர் சென்று ஹழரத் அபூ பக்கர், ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹும் மற்றும் முஹாஜிர்களையும் அழைத்து வாரும்" என்று கூறினார்கள். அனைவரும் வந்ததும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் குதுபா ஓதி நிகாஹ்வை நிறைவேற்றினார்கள். (12 இமாம்கள், பக்கம் 221)

ஹழரத் இப்னு ஹஜர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் எழுதுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஹாபா பெருமக்களிடையே வருகை புரிந்தார்கள். அப்போது அவர்களுடைய திருமுகம் சந்திரனைப் போல பிராசித்தது. அதைக் கண்ட ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு

அன்ஹு அவர்கள், அதற்கான காரணத்தை கேட்டார்கள். “எனக்கு, எனதருமை மகளார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் நிகாஹ் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடன் செய்யும்படி அல்லாஹ்வின் புறத்திலிருந்து நற்செய்தி வந்துள்ளது. மேலும், அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்றும் ஹழரத் காத்தூனே ஜன்னத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோரின் நிகாஹ்வை முதலிலே வானங்களிலே நிறைவேற்றினான். பிறகு பூமியிலும் அதை நிறைவேற்றும்படி செய்தான்” என்று கூறினார்கள்.. (12 இமாம்கள், பக் 222)

ஹழரத் அபூ அய்யூப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது அருமைப் புதல்வி, சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம், “உமக்கு தெரியுமா? அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் இந்த பூமியில் உள்ளவர்களைப் பார்த்தான். அவர்களில் உமது தந்தையாரை விரும்பி தேர்வு செய்தான். நபித்துவத்தையும் கொடுத்தான். மறுமுறை பார்த்தான். ஹழரத் அலீ அவர்களை தேர்வு செய்தான். அவரை உமக்கு நிகாஹ் செய்யும்படியும், என்னுடைய ‘வஸி’ ஆக்கும்படியும் வஹீ மூலம் கட்டளையிட்டான்” என்று கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர் – தப்ரானீ, பாகம் 3, பக்கம் 156)

ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், “அல்லாஹ் ஸுப்ஹானஹு வதஆலா ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை படைத்திருக்காவிட்டால், ஹழரத் சுவனத் தலைவி ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களையும் பிறக்கச் செய்திருக்க மாட்டான்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 80)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் தமது ஏழ்மை நிலையை கருத்தில் கொண்டு நிகாஹ் பற்றி மௌனம் காத்து வந்தனர். அச்சமயம் அவர்களிடமிருந்த சொத்து ஒரு குதிரை, ஒரு உடைவாள், ஒரு போர் அங்கி மட்டும்தான்! ஆயினும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களின் தோழர்கள் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று பெண் கேட்கும்படியாக வற்புறுத்திக் கொண்டிருந்தனர். இறுதியாக ஒருநாள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று, தயங்கி தயங்கி தமது விருப்பத்தைக் கூறினார்கள். இதற்காகவே காத்திருந்தது போல அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உடனே சம்மதம் கூறினர்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களிடமிருந்த போர் அங்கியை நூற்று இருபத்தைந்து திர்ஹத்திற்கு ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாங்கிக் கொண்டார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள் அத்தொகையையே மஹராகக் கொடுத்தார்கள். ஹிஜ்ரி இரண்டாம் வருடத்தில் நிக்காஹ் நடைபெற்றது. அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தம் மகளாருக்கு சீதனமாக ஒரு போர்வை, கயிற்றினாலான ஒரு கட்டில், தோலால் செய்யப்பட்டு உள்ளே பேரீத்தம் நார் திணிக்கப்பட்ட ஒரு மெத்தை, தோலினாலான ஒரு குடுவை, ஒரு நீர் துருத்தி, இரண்டு திருகைகள், மண்ணினாலான இரண்டு பானைகள் ஆகியவற்றைக் கொடுத்தார்கள். இவ்விருவரும் அன்புடனும், அனுசரிப்புடனும் வாழ்ந்து இல்லற வாழ்க்கைக்கு ஒரு முன்னுதாரணமாக திகழ்ந்தார்கள்.

ஹழரத் அப்துல்லாஹ் பின் யஜீத் அவர்கள் தமது தந்தையார் மூலமாக கூறுகிறார்கள். "ஹழரத் அபூபக்கர் மற்றும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவரும் சுவனத் தலைவியும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் அருமைப் புதல்வியுமான ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை மணக்க நாட்டம் கொண்டு செய்தி அனுப்பிய போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "அவர் இன்னும் சிறுமியாக இருக்கின்றார்" என்று கூறிவிட்டார்கள். ஆனால் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மணம் செய்ய செய்தி அனுப்பிய போது, சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை நிக்காஹ் செய்து வைத்தார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 119)

நிகாஹ்வின் போது சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் வயது பதினைந்து ஆண்டுகளும் ஐந்தரை மாதங்களுமாக இருந்தது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வயது இருபத்தோரு ஆண்டுகளும் ஐந்து மாதங்களுமாக இருந்தது. (ஹழரத் அலீ இப்னு அபீதாலிப், பக்கம் 39)

## மஹர்:

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் காதூனே ஜன்னத் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை நிகாஹ் செய்த போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று, "நான் மஹராக எதைக் கொடுப்பது?" என்று கேட்டேன். "உங்களிடம் மஹராக கொடுப்பதற்கு ஏதாவது பொருள் இருக்கிறதா?" என்று என்னிடம் கேட்டார்கள். நான் "இல்லை" என்று பதில் கூறினேன். "நான் உமக்கு

கொடுத்த போர்க் கவசம் உம்மிடம் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். "ஆம்" என்றேன். அதையே மஹராக கொடுத்துவிடும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர் தப்ரானீ, பாகம் 1, பக்கம் 171)

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் அருமைப் புதல்விக்கு வழங்கிய சீதனம் பற்றி ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் கூறும் போது,"அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தமது அருமைப் புதல்வியாரை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு நிகாஹ் செய்து கொடுத்த போது, பின்னப்பட்ட ஒரு பாயையும், நார் திணிக்கப்பட்ட ஒரு தலையணையையும், ஒரு தண்ணீர்க் குடுவையையும் சீதனமாகக் கொடுத்தார்கள்" என கூறியுள்ளார்கள்..

மேலும், 'பத்ஹா' என்னுமிடத்திலிருந்து மண் கொண்டு வரப்பட்டு வீட்டில் பரப்பப்பட்டது. பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம், "நான் வரும் வரை ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் எதையும் பேசாதீர்கள்" என்று கூறினார்கள். பிறகு (திரும்பி வந்து) ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வீட்டுக் கதவைத் தட்டினார்கள். அப்போது ஹழரத் உம்மு அய்மன் ரலியல்லாஹூ அன்ஹா அவர்கள் கதவைத் திறந்தார்கள். "எனது வருகையைப் பற்றி எனது சகோதரரிடம் கூறும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

"அவர் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்) எவ்விதம் தங்களுக்கு சகோதரர் ஆவார்? தாங்கள் தங்களின் திருமகளாரை அவர்களுக்கு நிகாஹ் செய்து கொடுத்து விட்டீர்களே?" என்று ஹழரத் உம்மு அய்மன் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கேட்டார்கள். அதற்கு, "அவர் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள்) எனக்கு சகோதரர்தான்" என்று கூறியபடியே கதவின் பக்கம் வந்தார்கள். அங்கு ஒரு நிழல் தென்படவே, அது யார் என்று விசாரித்தார்கள். "நான் அஸ்மா பின்தே உமைஸ்!" என்று அவர் பதில் கூறினார்.

பின்னர் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு பெரிய தட்டில் தண்ணீரைக் கொண்டு வரச் செய்து, அதில் தமது புனித உமிழ் நீரைக் கலந்தார்கள். அதன் மீது 'அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்' ஓதினார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை அழைத்து, அவர்களின் முகத்திலும், மார்பிலும், தெளித்தார்கள். சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களையும் அழைத்து,

அவர்கள் மீதும் அதே முறையில் நீரைத் தெளித்தார்கள். பிறகு தமது அருமை மகளாரிடம், “மகளே! இறைவன் மீது ஆணையாக! எனது குடும்பத்தாரில் மிகச் சிறந்த ஒருவருடன் உனக்கு நிகாஹ் செய்திருக்கிறேன்” என்று கூறினார்கள். பிறகு எழுந்து அங்கிருந்தும் புறப்பட்டார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 122)

## வலீமா:

“எனக்கு கனீமத் மூலம் ஒரு வயதான ஒட்டகம் கிடைத்தது. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் குமுஸிலிருந்து எனக்கு ஒரு ஒட்டகத்தைக் கொடுத்தார்கள். நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திரு மகளாருடன் இல்லறம் தொடங்க நாட்டம் கொண்ட போது, இத்கிர் என்னும் புல்லை கொண்டு வந்து அதை பொற்கொல்லர்களுக்கு விற்று, அதன் வருவாயைக் கொண்டு எனது வலீமாவை (திருமண விருந்தை) நடத்த நான் நாட்டம் கொண்டேன்” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். (புகாரீ)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், “நீர் சென்று முஹாஜிர்களுக்கும், அன்ஸார்களுக்கும் வலீமா விருந்துக்கான அழைப்பை விடுத்து வாருங்கள்” என்று கூறினார்கள். அதன்படியே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் செய்தார்கள்.

ஹழரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் வலீமா விருந்தில் கறியுடன் உணவு சமைக்கப்பட்டிருந்தது. அந்த வலீமா விருந்தைப் போல சிறந்த வலீமா விருந்து வேறு எதுவும் இருக்கவில்லை!” (ஸீரதே ஹழரத் ஸய்யிதினா அலீயுல் முர்துஜா, பக்கம் 42)

ஹழரத் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நாங்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்றும் ஹழரத் காதூனே ஜன்னத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோரின் நிகாஹ்வில் கலந்துக் கொண்டோம். நாங்கள் அதைவிட எளிமையான ஆனால் அழகான நிகாஹ்வை கண்டதில்லை. எங்களுக்காக, பேரீச்ச பட்டைகள் நிரப்பப்பட்ட விரிப்புகள் விரிக்கப்பட்டன. எங்களுக்கு முன்பாக காய்ந்த பேரீச்சம்பழங்கள், உலர்ந்த திராட்சைப்பழங்கள் போன்றவை வைக்கப்பட்டிருந்தன. நாங்கள் அவற்றை உண்டோம். இரவு படுக்கை விரிப்பாக செம்மறி ஆட்டுத் தோல் பயன்படுத்தப் பட்டது. (ஃபிகாஹ் ஹழரத் அலீ, பக்கம் 22)

ஹிஜ்ரி 3 - ம் ஆண்டு ரமலான் மாதத்தில் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களும், அடுத்த ஆண்டில் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களும் பிறந்தார்கள். ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள் வாழ்ந்த காலம் வரை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் வேறு எந்த பெண்ணையும் மணக்கவில்லை! ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களுடனே பாசத்தோடும், பிரியத் தோடும் வாழ்ந்து வந்தார்கள்.

## வறுமை வாழ்க்கை:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்றும் சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா ஆகியோரின் வாழ்க்கை வறுமையிலேயே கழிந்தது. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் போலவே, அவ்விருவரும் வறுமையில் இன்பம் கண்டார்கள். பொறுமையை பேணினார்கள். பசி, பட்டினி என்னும் நிலையிலேயே தமது பிள்ளைகளையும் வளர்த்தார்கள். அவ்விருவரின் வறுமை வாழ்வை வெளிப்படுத்தும் பல்வேறு சம்பவங்கள் வரலாற்று ஏடுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது வறுமை வாழ்வை நினைவு கூறும் போது, “எனக்கு நிகாஹ் முடிந்த போது என்னிடமும், எனது வாழ்க்கைத் துணைவியாரிடமும் ஒரே ஒரு செம்மறி ஆட்டுத் தோலைத் தவிர வேறு எதுவும் இருக்கவில்லை. நாங்கள் அந்த தோலின் மீதே இரவில் உறங்குவோம். பகலில் அந்த தோலின் மீதே ஆட்டிற்கு புல்லைப் போடுவோம். எங்களிடம் எந்த ஒரு பணியாளனும் இருந்ததில்லை” என்று கூறினார்கள். இதை ஹழரத் ஹன்னாத் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அறிவித்திருக்கிறார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் வீட்டில் சமைக்கவும் சாப்பிடவும் எந்த ஒரு பொருளும் இல்லாத நிலையில் பல நாட்கள் கழிந்தன. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நிலையும் அதுவாகவே இருந்தது. ஒரு நாள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பசியோடு வெளியே கிளம்பினார்கள். வழியில் ஒரு இடத்தில் ஒரு தீனார் கீழே கிடப்பதைக் கண்டார்கள். அதை எடுக்கலாமா? வேண்டாமா? என்று சிறிது நேரம் யோசித்தார்கள். பிறகு அதை எடுத்துக் கொண்டார்கள்.

அதை, தானியங்களைக் கொண்டு வந்து விற்கும் ஒட்டக ஓட்டிகளிடம் கொடுத்து, மாவு வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தார்கள். அந்த மாவைக் கொண்டு ரொட்டி சுடும்படி தமது வாழ்க்கைத் துணைவியாரிடம் கூறினார்கள். சுவனத் தலைவி ஹழரத்

ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், மாவு பிசையத் தொடங்கினார்கள். ஆனால், பசியாலும், உடல் பலஹீனத்தாலும் கைகள் மாவை விட்டும் வழுக்கச் செய்தது. கைகள் பூமியில் பட்டு வலிக்கவும் செய்தது. ஆயினும், சுவனத் தலைவியார் மாவைப் பிசைந்து, ரொட்டியும் சுட்டு முடித்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று, நடந்த விஷயங்களைக் கூறினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "இதை நீங்கள் சாப்பிடுங்கள். இதை அல்லாஹ் உமக்காக அனுப்பியுள்ளான்" என்று கூறினார்கள். இந்த நிகழ்வை ஹழரத் அதாஉ ரஹ்மதுல்லாஹி அலைஹி மற்றும் ஹழரத் ஹன்னாத் ரஹ்மதுல்லாஹி அலைஹி ஆகியோர் அறிவித்திருக்கிறார்கள், (அல் முர்துஜா, பக்கம் 67)

ஒரு முறை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் பசியால் தவித்துக் கொண்டிருப்பதை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அறிந்தார்கள். உடனே, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் பசியை போக்க நாடியவராக வேலை தேடிப் புறப்பட்டார்கள். ஒரு யூதனுடைய தோட்டத்தில் சென்று, ஒரு வாளி நீர் இரைத்தால் ஒரு பேரீச்சம் பழம் கூலி என்று முடிவு செய்து நீர் இரைக்கத் தொடங்கினார்கள். பதினேழு வாளி நீர் இரைத்த பிறகு, பதினேழு அஜ்வா பேரீச்சம் பழங்களை வாங்கிக் கொண்டு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று அவற்றைக் கொடுத்தார்கள். அன்னார் அவற்றைப் புசித்து பசியாறினார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் ஆட்சிக் காலத்தில் விருந்தாளி ஒருவர் வீட்டிற்கு வந்தார். அவரை ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் அழைத்துச் சென்று உபசரித்தார்கள். சுவையான உணவுகளை அவருக்கு பரிமாறினார்கள். அவர் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், எளிமையாக வந்து சிறிது தள்ளி அமர்ந்தார்கள். ஒரு பணியாளர் காய்ந்த ரொட்டியை கொண்டு வந்து அவருக்கு முன்னால் வைத்தார். பிறகு அருகில் அமர்ந்து ரொட்டியை துண்டுகளாக்கி, அவற்றை நீரில் ஊறவைத்து சாப்பிடக் கொடுத்தார்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அந்த ரொட்டித் துண்டுகளை சாப்பிடலானார்கள். அதைக் கண்ட விருந்தாளி மிகவும் ஆச்சரியமடைந்தார். ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து, "எனக்கு மட்டும் சுவையான் உணவுகளை பரிமாறினீர்கள். அவருக்கு காய்ந்த ரொட்டி மட்டும் கொடுத்துள்ளீர்கள். அவர் சாப்பிடுவதைப் பார்த்தால் எனக்கு

பாவமாக இருக்கிறது. நான் எனது உணவில் அவரையும் சேர்த்துக் கொள்ள விரும்புகிறேன்” என்று கூறினார்.

அதைக் கேட்டதும் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அழுதுவிட்டார்கள். பிறகு, “நீங்கள் சாப்பிடுங்கள். அவர்கள் இந்த உணவை உண்ணமாட்டார். அவர்கள் என்னுடைய தந்தையும், கலீஃபாவும் ஆவார்” என்று கூறினார்கள். அதைக் கேட்டு விருந்தாளி திகைத்துப் போனார்! (அலீயுல் முர்துஜா, பக்கம் 98)

ஹழரத் அபூ யஃலா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், ஒரு முறை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பசி தாங்கமுடியாமல் போனபோது, அவர்கள் தமது அருமை மகளார், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் இல்லத்திற்குச் சென்றார்கள். “மகளே! உம்மிடம் சாப்பிட ஏதாவது இருக்கிறதா?” என்று கேட்டார்கள். “இல்லை தந்தையே!” என்று அருமை மகளார் கூறியதும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கிருந்தும் புறப்பட்டுச் சென்றார்கள்.

சிறிது நேரம் கழித்து அண்டை வீட்டிலிருந்து ஒரு பெண்மணி இரண்டு ரொட்டிகளையும், சில இறைச்சித் துண்டுகளையும் சுவனத் தலைவியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு அனுப்பி வைத்தார். சுவனத் தலைவியார் ஒரு துணியால் மூடி, அவற்றை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அதை உண்ணாமல், மீண்டும் தமது திருமகளாரின் இல்லத்திற்கே திரும்பி வந்தார்கள். அப்போது சுவனத் தலைவியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், “தந்தையே! வல்ல அல்லாஹ் தனது கருணையினால் இந்த உணவை அனுப்பியுள்ளான். அவன், தான் நாடியவருக்கு அளவில்லாமல் ரிஸ்கை (இரணத்தை) கொடுக்கிறான்” என்று கூறினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உணவுப் பாத்திரத்தை திறந்துப் பார்த்தார்கள். அவற்றில் ரொட்டியும் இறைச்சியும் நிரம்பி இருந்தது!

அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “அருமை மகளே! உமக்கு இந்த உயர்ந்த நிலையைக் கொடுத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! நீர் இஸ்ராயீல் பெண்களின் தலைவியைப் போல இருக்கிறீர். அப்பெண்கள்தாம், அவர்களுக்கு உணவு கிடைக்கும் போது, இது அல்லாஹ்வின் புறத்திலிருந்து கிடைத்தது. அவன், தான் விரும்பியவருக்கு

அளவில்லாமல் ரிஸ்க் கொடுப்பவனாக இருக்கிறான் என்று கூறுவார்கள்” என்று கூறினார்கள்.

அதன் பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அழைத்துவரச் செய்தார்கள். அவர்கள் வந்ததும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், ஹழரத் சுவனத் தலைவி ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் இமாம் ஹஸன், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் மற்றும் உம்முல் முஃமினீன்கள், அஹ்லல்பைத்கள் ஆகிய அனைவருடனும் சேர்ந்து உணவு உண்டார்கள். அனைவரும் நிறைவாக உண்ட பிறகும் பாத்திரங்களில் ரொட்டியும், இறைச்சியும் பழய நிலையிலேயே இருந்தன! அவற்றை அண்டை வீட்டாருக்கு பகிர்ந்தளித்தனர்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது ஆட்சிக் காலத்திலும் மிகவும் எளிமையான உணவையே உண்டு வந்தார்கள். அவர்கள் பெரும்பாலும் உப்புடன் காய்ந்த ரொட்டியை நீரில் ஊரவைத்து, அதையே சாப்பிடுவார்கள். ஒரு நாள், அன்னாரின் திருப்புதல்வியார் உப்பும், காய்ந்த ரொட்டி மற்றும் பாலை கொண்டு வந்து சாப்பிடக் கொடுத்தார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பாலை திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். “எனக்கு இந்த காய்ந்த ரொட்டியும் தண்ணீருமே போதுமானது” என்றும் கூறிவிட்டார்கள். சில சமயம் வெறும் பேரீத்தம் பழங்களை மட்டும் சாப்பிட்டு பசியாறுவார்கள். (அலிய்யுல் முர்துஜா பக்கம் 145)

ஹழரத் ஜஃபர் இப்னு முஹம்மத் அவர்கள் தமது தந்தையார் மூலமாக அறிவிக்கிறார்கள்: ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், “ஒரு நாள் இரவு நாங்கள் அனைவரும் உணவு உண்ணாமலேயே பசியுடன் உறங்கி விட்டோம். பொழுது விடிந்த போதும் உணவு எதுவும் இருக்கவில்லை. நான் சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் முகத்தைப் பார்த்தேன். அதில் களைப்பும் துயரமும் மண்டிக் கிடந்தன. “நீங்கள் ஏன் இவ்விதம் இருக்கிறீர்கள்?” என்று கேட்டேன். அதற்கு அவர்கள், “நாம் இரவிலும் சாப்பிடவில்லை. காலையிலும் சாப்பிட எதுவும் இல்லை. இரவுக்குக் கூட எந்த உணவுப் பொருளும் நம்மிடம் இல்லை” என்று கூறினார்கள்.

உடனே நான் வேலை தேடிப் புறப்பட்டேன். (கிடைத்த வேலை செய்து ஊதியமும் பெற்றேன்.) அதில் மாவு மற்றும் ஒரு திர்ஹமில் கறி ஆகியவற்றை வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தேன். சுவனத் தலைவியார் மாவைக் கொண்டு ரொட்டி சுட்டார்கள். ஒரு சட்டியில் கறிக் குழம்பும் சமைத்தார்கள். சமையல் வேலை முடிந்ததும் சுவனத்

தலைவியார், “தாங்கள் எனது தந்தையாரை அழைத்து வந்தால் நன்றாக இருக்கும்” என்று கூறினார்கள். உடனே நான் மஸ்ஜிதுக்குச் சென்றேன். மஸ்ஜிதில் அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். “யா அல்லாஹ்! பசியை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்” என்றும் கூறிக் கொண்டிருந்தார்கள்.

நான் அவர்களிடம், “யா ரஸூலுல்லாஹ்! எங்கள் வீட்டில் உணவு தயாராக இருக்கிறது. வாருங்கள் போகலாம்” என்றேன். பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களை கைத்தாங்கலாக அழைத்துக் கொண்டு வீட்டிற்கு வந்தேன். சட்டியில் சாலன் (குழம்பு) கொதித்துக் கொண்டிருந்தது. அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள், “மகளே! ஆயிஷாவுக்காக கொஞ்சம் சாலன் எடுத்து வை” என்று கூறினார்கள். சுவனத்தலைவியார் அவ்விதமே எடுத்து வைத்தார்கள். பிறகு, “ஹஃப்ஸாவுக்காக கொஞ்சம் சாலன் எடுத்து வை” என்றார்கள். இவ்விதமே தமது ஒன்பது வாழ்க்கைத் துணைவியருக்காகவும் சாலன் எடுத்து வைக்கச் செய்தார்கள்.

பிறகு, உமது கணவருக்காகவும், பிளைகளுக்காகவும் சாலன் எடுத்து வை” என்றார்கள். சுவனத்தலைவியார் அவ்விதமே செய்தார்கள். அதன் பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களுடன் சேர்ந்து, அல்லாஹ் நாடிய அளவு நாங்கள் உண்டோம்”. (தபகாத் இப்னு ஸஃத், பாகம் 1, பக்கம் 203.)

ஹழரத் முஃப்தி ஷவ்கத் அலீ பஹ்மீ அவர்கள் தமது ‘முகம்மல் தாரீகே இஸ்லாம்’ என்னும் நூலில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹுவஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வறுமை வாழ்வை விரும்பி ஏற்றார்கள். அன்னாரின் வாழ்க்கை மிகவும் சாதாரணமாகவும், ஏழ்மை நிரம்பியதாகவும் இருந்தது. குடும்பமே பசியும் பட்டினியாகவும் கழித்தது. ஒரு சாதாரண வீட்டிலேயே தமது வாழ்வை கழித்தார்கள். தமக்காக புதியதாக வீடு எதையும் கட்டியதில்லை. தமது அருமைத் துணைவியார், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் சீராக கொண்டு வந்த பொருட்களைக் கொண்டே கடைசி காலம் வரை வாழ்க்கையை நடத்தினார்கள். அன்னாரிடம் ஒரு செம்மறி ஆட்டுத் தோல் இருந்தது. அதை படுக்கையாக பயன்படுத்தினார்கள். (பக்கம் 356)

ஒரு போர்வை இருந்தது. அதைக் கொண்டு தலையை மூடினால், கால்கள் வெளியே தெரியும். கால்களை மூடினால் தலை வெளியே தெரியும். ஒரு பனிக் காலத்தில் தாங்க முடியாத அளவு குளிர் வாட்டியது. அந்த சமயத்திலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹுவஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஒரு பழைய போர்வையை போர்த்தியபடி படுத்திருந்தார்கள். உடல் நடுங்கியபடி இருந்தது. அதைக் கண்ட

ஒருவர், “ஹழரத், பைத்துல்மால் மீது உங்களுக்கும் உரிமை இருக்கிறது. அப்படி இருக்க ஏன் இவ்விதம் கஷ்டப்படுகிறீர்கள்?” என்று கேட்டார். உடனே ஹழரத் அவர்கள், “பைத்துல்மால் முஸ்லிம்களுக்கு உரியது. அதிலிருந்து நான் அபகரிக்கமாட்டேன்” என்று கூறிவிட்டார்கள்.

உடை: ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், மோட்டா ரக துணியாலான குர்தா அணிவதைப் பார்த்தேன்” என்று ஹழரத் அதா இப்னு முஹம்மத் அவர்கள் கூறுகிறார்கள். ஹழரத் அம்ர் இப்னு கைஸ் அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஒட்டுப்போட்ட துணிகள் அணிந்ததைப் பார்த்தேன். ஹழரத் ஹமீத் பின் அப்துல்லாஹ் அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஒரு துணிக்கடைக்குச் சென்றார்கள். அங்கு ஒரு சிறுவன் இருந்தான். “நான் யாரென்று நீ அறிவாயா?” என்று கேட்டார்கள். “நான் உங்களை அறிவேன். நீங்கள் அமீருல் முஃமினீன் ஆவீர்கள்” என்றான் சிறுவன். சிறிது நேரம் கழித்து வேறு ஒருவர் வந்தார். “நான் யாரென்று நீர் அறிவீரா?” என்று அவரிடமும் கேட்டார். அவர், “இல்லை” என்றார். உடனே அவரிடமிருந்து ஒரு சட்டையை விலைக்கு வாங்கி அணிந்துக் கொண்டார். அதன் ஒரு கையை இழுத்த போது அது எதிர்பாராத விதமாக கிழிந்துவிட்டது. சட்டையை கழற்றி, அதை தைத்து கொடுக்கும்படி கூறினார்கள். அவன் தைத்து கொடுத்ததும் அதையே அணிந்துக் கொண்டு அங்கிருந்தும் புறப்ப ஹழரத் அபுல் அஃலா அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வேட்டியை தமது தொப்புளுக்கு மேலாக கட்டியிருந்ததை நான் பார்த்தேன். ஹழரத் காலித் அபீ உமைய அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வேட்டி (தஹ்பந்த்) கட்டியிருந்தார்கள். வேட்டி, அன்னாரின் கணுக் காலை ஒட்டி இருந்தது. (தபகாத் இப்னு ஸஃத், பாகம் 1, பக்கம் 155.)

தொப்பி, தலைப்பாகை: ஹழரத் அபூ ஜஃபர் அன்ஸாரி அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது தலையில் கருப்பு நிற அமாமா (தலைப்பாகை) கட்டியிருந்தார்கள். அதன் ஒரு பகுதி பின்புறமாக தொங்கிக் கொண்டிருந்தது. ஹழரத் அபீ ஹிப்பான் அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வெள்ளை நிற தொப்பி அணிந்திருந்தார்கள். அது மெல்லியதாக இருந்தது. ஹழரத் யஜீது இப்னு ஹாரிஸ் அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் எகிப்து நாட்டின் வெள்ளை நிற தொப்பி அணிந்திருந்தார்கள். (தபகாத் இப்னு ஸஃத், பாகம் 1, பக்கம் 157.)

## ஹழரத் ஃபாத்திமா (ரலி) அவர்களின் சிறப்புகள்:

சுவனத் தலைவியாம் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் தமது திருத் தந்தையார் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது மிகுந்த பாசம் கொண்டவர்களாக இருந்தார்கள். தமது திருத் தந்தையாருக்கு பணிவிடைகளும் செய்து வந்தார்கள். ஹழரத் உம்மு ஹானி ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், “மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்றேன். அப்பொழுது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் துணியால் திரையிட்டு அண்ணலாரை மறைத்துக் கொண்டிருந்தார்கள்!” (புகாரீ, முஸ்லிம்)

(ஒரு முறை) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புனித கஃபாவின் நிழலில் தொழுதுக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அபூஜஹ்லும், குறைஷிகளில் சிலரும் (ஒட்டகத்தின் கருப்பைச் சவ்வுகளை எடுத்து, ஸஜ்தாவிலிருந்த) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தோள் மீது போட்டார்கள். அந்த செய்தியை அறிந்த சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் (விரைந்து வந்து) அதை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மேலிருந்து அந்த அசுத்தங்களை அப்புறப்படுத்தினார்கள். அப்பேது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “இறைவா! குறைஷிகளை நீ கவனித்துக் கொள், இறைவா! குறைஷிகளை நீ கவனித்துக் கொள், ஹாஷிமின் மகன் அபூ ஜஹ்லையும், உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வல்லீத் இப்னு உத்பா, உபை இப்னு கலஃப் மற்றும் உக்பா இப்னு அபீ முஐத் ஆகியோரையும் (நீ தண்டிப்பாயாக!)” என்று பிரார்த்தித்தார்கள். இந்த விஷயம் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூற, ஹழரத் இமாம் புகாரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் பதிவு செய்திருக் கிறார்கள்.

“ஹழரத் ஃபாத்திமா (ரலியல்லாஹு அன்ஹா), சொர்க்கவாசிகளில் பெண்களின் தலைவி ஆவார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். இதை ஹழரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரீ)

“(ஹழரத்) ஃபாத்திமா (ரலியல்லாஹு அன்ஹா) அவர்கள் என்னில் ஒரு பகுதியாவார். எனவே, அவருக்கு கோபமூட்டியவர் எனக்கு கோப மூட்டியவராவார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (புகாரீ)

நபிபெருமானார் ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் (இவ்வுலகை விட்டு) மறைந்த அவர்களின் நோயின் போது ஃபாத்திமா (ரலியல்லாஹுதஆலா அன்ஹா) அவர்களை அழைத்து (ஏதோ) ஒன்றைக் குறித்து அவரிடம் இரகசியமாகக் கூறினார்கள். உடனே, அவர் அழுதார். பின்னர், அவரை (மீண்டும்) அழைத்து அவரிடம் (ஏதோ) ஒன்றைப் பற்றி இரகசியமாகக் கூறினார்கள். உடனே அவர் சிரித்தார்.

பின்னர், அதனைக் குறித்து நாங்கள் கேட்டோம். அப்பொழுது, நபிபெருமானார் ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் (இவ்வுலகை விட்டு) மறைந்த அவர்களின் நோயால் தாம் இறந்தே விடுவார்கள் என்று கூறினார்கள். உடனே நான் அழுதேன். பின்னர், நான்தான் அவர்களைப் பின்பற்றுவதில் (இறப்பதில்) அவர்களின் குடும்பத்தாரில் முதலாவது என்று என்னிடம் இரகசியமாக கூறினார்கள். உடனே நான் சிரித்தேன்" என்று (ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள்) கூறினார்கள். அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள், ஆதாரம்: புகாரீ.

ஹழரத் அபீ பஹீஹ் அவர்கள் தமது தந்தையார் வாயிலாக கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் (தமது அருமை மகளார்) ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை எனக்கு நிச்சயம் செய்தும், பிறகு நிகாஹ் செய்தும் வைத்தார்கள். அப்போது நான் "யா ரஸூலுல்லாஹ்! உங்களுக்கு நான் மஹ்பூபானவனாக இருக்கிறேனா? அல்லது ஹழரத் ஃபாத்திமா (ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் மஹ்பூபானவராக இருக்கிறார்களா?" என்று கேட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள், "அவர் (ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா) எனக்கு உம்மை விட அதிக மஹ்பூபானவராக இருக்கிறார். நீர் எனக்கு அவரை விட மஹ்பூபானவராக இருக்கிறீர்" என்று கூறினார்கள் என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூபா நகர பள்ளிவாசலின் மேடையில் நின்று கூறினார்கள். (இமாம் நஸாயீ)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், "கியாமத்து நாளன்று அறிவிப்பாளர் ஒருவர் திரைக்குப் பின்னாலிருந்து, "மஹஷரை உடையவர்களே! உங்கள் பார்வையைத் தாழ்த்திக் கொள்ளுங்கள். ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கடந்து செல்லட்டும்" என்று கூறுவார். அப்போது ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் இரண்டு பச்சை நிற போர்வைகளை போர்த்தியபடி அங்கிருந்து கடந்து செல்வார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறுகிறார்கள், "சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கோபம் கொள்ளும் போது அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத்தும் கோபமடைகிறான். அவர்கள் மகிழ்ச்சி கொள்ளும் போது அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத்தும் மகிழ்ச்சியடைகிறான்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 1, பக்கம் 173)

உஹது போரின் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தலைக்கவசம் அவர்களின் புனித தலையிலேயே நொறுக்கப்பட்டது. அதனால் அவர்களின் முகம் முழுவதும் இரத்தம் வழியத் தொடங்கியது. மேலும் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நடுப் பல்லும் உடைந்தது! அப்பொழுது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் (காயத்தைக் கழுவ தமது) கேடயத்தில் தண்ணீர் கொண்டு வந்தார்கள். சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அந்த தண்ணீரைக் கொண்டு அண்ணலாரின் காயத்தைக் கழுவினார்கள். ஆயினும், இரத்தம் வழிவது நிற்கவில்லை! உடனே, ஒரு பாயை எடுத்து அதனை எரித்து (அதன் சாம்பலை) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காயத்தின் மீது வைத்து அழுத்தினார்கள். எனவே, இரத்தம் வழிவது நின்றுவிட்டது. (புகாரீ)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முன்னறிவிப்பின்படியே ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள் அதே ஹிஜ்ரி 11 ல், ரமளான் மாதம் 3 ஆம் தேதியில் இவ்வுலகை விட்டும் பிரிந்தார்கள். ஒரு பக்கம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேரிழப்பு! சில மாதங்களிலேயே அன்புத் துணைவியாரின் பேரிழப்பு!! ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் துடித்துப்போய்விட்டார்கள். ஆயினும், ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களின் வஸியத்படி, ஹழரத் அஸ்மா பின்த்து உமைஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களுடன் சேர்ந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களே குளிப்பாட்டினார்கள். ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்கள் மன வேதனையுடன் செய்திருந்த வஸியத்படி அன்னாரின் இறப்புச் செய்தியை கலீஃபா மற்றுமுள்ள ஸஹாபாக்களுக்கு அறிவிக்கவில்லை! ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களின் ஜனாஸா, அதே இரவில் இரகசியமாக கொண்டு செல்லப்பட்டு ஜன்னத்துல் பக்கீயில் நல்லடக்கம் செய்யப்பட்டது. ஜனாஸா தொழுகையை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களே நிறைவேற்றினார்கள்.

## ஹழரத் இமாம் ஹஸன், இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் சிறப்புகள்:

**ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு** அவர்கள் ஹிஜ்ரி 3, ரமலான் மாதத்தில், செவ்வாய்க் கிழமையன்று, புனித மதீனா மாநகரில் பிறந்தார்கள். அவர்கள் இரண்டாம் இமாமாக இருக்கிறார்கள். ஹழரத் இமாம் ஹஸன் அவர்களின் குன்னியத் பெயர் அபூ முஹம்மத் என்பதாகும். 'தகீய்யுன்', ஜக்கீயுன், தய்யிபுன், ஸய்யத், ஸிப்து, வலீ, முஜ்தபா போன்றவை ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் சிறப்புப் பெயர்களாகும். ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது தலையிலிருந்து மார்பு வரை அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திரு உருவத்தை ஒத்து இருந்தார்கள்.

ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பத்து முறை நடந்து சென்று ஹஜ்ஜை நிறைவேற்றினார்கள். மூன்று முறை தம்மிடமிருந்த சொத்தில் பாதியை இறைவழியில் ஸதகா கொடுத்தார்கள். இரண்டு முறை தமது செல்வம் முழுவதையும் இறைவழியில் ஸதகா கொடுத்தார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 138)

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வஃபாத் ஆன போது, ஹழரத் இமாம் ஹஸன் அவர்களின் வயது, ஏழு வருடம், ஆறு மாதங்களாக இருந்தது. ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி 50, ஸபர் மாதம் 30ஆம் நாள் அல்லது ரபீஉல் அவ்வல் மாதம், வியாழக் கிழமையன்று விஷம் கொடுக்கப்பட்டதால் ஷஹீத் ஆனார்கள். அன்னாரின் அடக்கத்தலம் புனித மதீனா நகரிலுள்ள ஜன்னத்துல் பகீயில் உள்ளது.

ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி 4, ஷஅபான் மாதம், 4 அல்லது 5ஆம் தேதியில், செவ்வாய்க் கிழமையன்று புனித மதீனா மாநகரில் பிறந்தார்கள். ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் குன்னியத் பெயர், அபூ அப்துல்லாஹ் என்பதாகும். ஜக்கீயுன் என்பது தங்களின் சிறப்புப் பெயராகும். ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது திரு மார்பிலிருந்து பாதங்கள் வரை, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் உருவத்தை ஒத்து இருந்தார்கள். ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் மோதிரத்தில் 'லிகுல்லி அஜலின்' என செதுக்கப்பட்டிருந்தது. ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி 61, முஹர்ரம் மாதம் 10 ஆம் நாள், வெள்ளிக்கிழமை ளுஹருடைய நேரத்தில், கர்பலாவில் ஷஹீத் ஆனார்கள்.

ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நடந்து சென்று இருபத்தைந்து ஹஜ்ஜை நிறைவேற்றினார்கள். எப்பொழுதும் தொழுகை, நோன்பு, ஹஜ், ஸதகா என்று மார்க்க விஷயங்களிலேயே லயித்து இருந்தார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 145)

**காதுகளில் பாங்கு:** அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது பேரப் பிள்ளைகளின் பிறப்பின் போது அவர்களின் காதுகளில் பாங்கு கூறினார்கள். அதைப் பற்றி ஹழரத் அபூ ராஃபிஆ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களது வீட்டில் ஹழரத் ஹஸன் பின் அலீ பிறந்தபோது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுகையைப் போன்று அவர்களின் காதுகளில் பாங்கு கூறினார்கள்" என்று அறிவித்திருக்கிறார்கள். (அபூதாவூது, ஜாதுல் மஅத், பாகம் 2, பக்கம் 595)

**அகீகா:** அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்காக ஒரு செம்மறி ஆட்டையும், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்காக ஒரு செம்மறி ஆட்டையும் அகீகா கொடுத்தார்கள். அதைப்பற்றி ஹழரத் அப்துல் அஃக் அவர்கள், ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு வாயிலாக அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாகூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்காக ஒரு செம்மறி ஆட்டையும், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்காக ஒரு செம்மறி ஆட்டையும் அகீகா கொடுத்தார்கள். ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உஹதுடைய ஆண்டிலும், ஒரு வருடம் கழித்து ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் பிறந்தார்கள். (ஜாதுல் மஅது)

ஹழரத் ஜஃபர் பின் முஹம்மத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது பேரர்களின் அகீகாவின் போது, "அகீகாவின் இறைச்சியில் ஒரு காலை தாய்ச்சியின் வீட்டுக்கு அனுப்பிவிடுங்கள். நீங்களும் சாப்பிடுங்கள். (மற்றவர்களுக்கும்) சாப்பிடக் கொடுங்கள்" என்று கூறினார்கள். (ஆபூதாவூது, ஜாதுல் மஅது)

**தலைமுடி இறக்குதல்:** ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஒரு ஆட்டை அகீகா கொடுத்தார்கள். பிறகு (சுவனத் தலைவி) ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா

அவர்களிடம், “இக்குழந்தையின் தலைமுடியை இறக்குங்கள். தலைமுடியின் எடைக்கு ஈடாக வெள்ளியை தருமம் செய்யுங்கள்” என்று கூறினார்கள். அவ்விதமே நாங்கள் தலைமுடியை எடைப் போட்டோம். அது ஒரு திர்ஹம் அல்லது அதற்கு சற்று குறைவாக இருந்தது. (திர்மிதீ, ஜாதுல் மஅது, பாகம் 2, பக்கம் 592)

ஹழரத் ஸல்மான் பார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான் ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரின் பெயர்களை, ஹழரத் ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் பிள்ளைகளான ஷப்பர் மற்றும் ஷப்பீர் ஆகியவர்களின் பெயர்களைக் கொண்டே வைத்தேன்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 4, ஹதீஸ் எண்: 6045.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், குழந்தை **ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு** அவர்களைக் கட்டியணைத்து முத்தமிட்டு, “இறைவா! இவரை நீ நேசி! இவரை நேசிப்பவரையும் நீ நேசி” என்று கூறினார்கள் என்று ஹழரத் அபூஹூரைரா ரலியல்லாஹூ அன்ஹு அவர்கள் அறிவித்தார்கள். (புகாரீ)

ஹழரத் உக்பா இப்னு ஹாரிஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அபூபக்ர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அஸர் தொழுகையை தொழுதார்கள். பிறகு (மஸ்ஜிதிலிருந்து) நடந்தபடியே கிளம்பினார்கள். அப்பொழுது ஹழரத் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே, அவர்களைத் தூக்கி தம் தோளின் மீது ஏற்றிக் கொண்டு, “என் தந்தை உனக்கு அர்ப்பணமாகட்டும்! நீ (தோற்றத்தில் உனது திருப்பாட்டனார்) அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களை ஒத்திருக்கிறாய், (உனது தந்தையார்) ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை ஒத்திருக்கவில்லை!” என்று கூறினார்கள். அப்போது (இதை செவியுற்ற) ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள். (புகாரீ)

ஹழரத் இக்ரிமா மற்றும் ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹும் அறிவிக்கிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், குழந்தையான ஹழரத் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தமது திருத் தோள்களில் சுமந்துக் கொண்டிருந்தார்கள். அதைக் கண்ட ஒருவர், “இந்த குழந்தை அற்புதமான சவாரியைப் பெற்றிருக்கிறது!” என்று கூறினார். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “சவாரி

செய்பவரும் அற்புதமானவர்தான்!" என்று கூறினார்கள். (பர்காதே ஆலே ரஸூல், பக்கம் 135)

ஹழரத் பராஉ பின் ஆஸிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் ஹஸன் அவர்களை தமது திருத் தோள்களில் சுமந்தபடி, "யா அல்லாஹ்! நான் இவரை நேசிக்கக் கூடியவனாக இருக்கிறேன். நீயும் இவரை நேசிப்பாயாக!" என்று துஆ செய்தார்கள்.

ஹழரத் அபூ அய்யூப் அன்ஸாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்றேன். அப்போது, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் அண்ணலாருக்கு முன்பாகவும், அண்ணலாரின் மடியிலும் அமர்ந்து விளையாடிக் கொண்டிருந்தனர். நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், "அண்ணல் நபியே! (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) தாங்கள் இப்பிள்ளைகள் மீது பிரியம் கொண்டுள்ளீர்களா?" என்று கேட்டேன். "ஆம், இவர்கள் இருவரும் எனது இந்த உலகத்தின் பூக்கள் ஆவார்கள். நான் இவர்களை நுகர்ந்து மகிழ்கிறேன், நிம்மதியும் அடைகிறேன்" என்று கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர்-தப்ரானீ, பாகம் 3, ஹதீஸ் எண்: 3892, பக்கம் 130.

ஹழரத் அபூ பக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஹாபா பெருமக்களுக்கு தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஸஜ்தா செய்யும் போது, குழந்தையான ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ன்ஹு அவர்கள், அண்ணலாரின் புனிதமான முதுகில் ஏறி விளையாடத் தொடங்குவார்கள். இவ்விதம் பலமுறை நடந்தது. ஸஹாபா பெருமக்கள் இதுபற்றி கேட்டபோது, "எனது இந்த பிள்ளை தலைவர் ஆவார். கூடிய விரைவில் அல்லாஹ் இவரைக் கொண்டு முஸ்லிம்களின் இரு கூட்டத்தாருக்கிடையில் அமைதியை ஏற்படுத்துவான்" என்று கூறினார்கள். (பரக்காத்தே ஆலே ரசூல், பக்கம் 136)

"(**ஹழரத் ஹஸன், ஹழரத் ஹுஸைன்** ஆகிய) அவர்கள் இருவரும் (இந்த) உலகின் இரண்டு துளசி மலர்கள் ஆவார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அபீ நுஅம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அறிவித்தார்கள்.(புகாரீ)

ஹழரத் ஸல்மான் பார்ஸி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், " எவர் ஹழரத் இமாம் ஹஸன் மற்றும்

ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரை நேசிக்கிறாரோ, அவரை நானும் நேசிக்கிறேன். எவரை நான் நேசிக்கிறேனோ அவரை அல்லாஹ்வும் நேசிக்கிறான். எவர் இவர்கள் மீது பகை கொள்கிறாரோ, அவர் என்னை பகைத்தவர் ஆவார். என்னைப் பகைத்தவரை அல்லாஹ்வும் பகைக்கிறான்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 4, ஹதீஸ் எண்: 5985, பக்கம் 459.

ஹழரத் உஸ்ஸாமா பின் ஜைத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "நான் ஒரு தேவையின் பொருட்டு இரவு நேரத்தில் அண்ணல் நபி ஸலல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஏதோ ஒன்றின் மீது போர்வையை போர்த்தியபடி வெளியே வந்தார்கள். போர்வைக்குள் என்ன இருந்தது என்பதை நான் அறிந்திருக்கவில்லை. நான் எனது தேவையைப் பற்றி அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் முறையிட்ட பிறகு, "யா ரஸூலுல்லாஹ்! தாங்கள் எதன் மீது போர்வையைப் போர்த்தி யிருக்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் மீதிருந்த போர்வையை விலக்கினார்கள். (போர்வைக்குள்) ஒரு தொடையில் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் மற்றொரு தொடையில் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் அமர்ந்திருந்தார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "இவர்கள் இருவரும் எனது பிள்ளைகளாகவும், எனது திரு மகளின் பிள்ளைகளாகவும் இருக்கிறார்கள். யா அல்லாஹ்! நான் இவர்கள் இருவர் மீதும் அன்பு வைத்திருப்பதை நீ அறிவாய். நீயும் இவர்கள் மீது நேசம் கொள்வாயாக!" என்று பிரார்த்தித்தார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி, கஸாயிஸ் அலீ, பக்கம் 133)

ஹழரத் அபூ ஸயீத் அல் குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரும் சுவனத்து இளைஞர்களின் தலைவர்கள் ஆவார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (இமாம் நஸாயீ)

ஹழரத் ஹஸீஃபா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் நாங்கள் இஷா தொழுகையை தொழுதோம். பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கிருந்து புறப்பட்டார்கள். நானும் அவர்களை பின் தொடர்ந்துச்

சென்றேன். திடீரென ஒருவர் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எதிரில் வந்தார். அவர் சென்றதும், “ஹுஸைஃபாவே! நீர் அவரைப் பார்த்தீரா?” என்று கேட்டார்கள். “ஆம், நான் அவரைப் பார்த்தேன்” என்று கூறினேன்.

அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “அவர் ஒரு வானவர் ஆவார். அவர் இதற்கு முன்னால் பூமிக்கு வந்ததில்லை. அவர் எனக்கு ஸலாம் கூறுவதற்காக அல்லாஹ்வின் உத்தரவைப் பெற்று வந்தார். அவர் எனக்கு ஸலாம் கூறிவிட்டு, ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகிய இருவரும் சுவனத்து இளைஞர்களின் தலைவர்கள் ஆவார்கள். ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா சுவனத்து பெண்களின் தலைவி ஆவார்” என்று சுப செய்தியையும் கூறிச் சென்றார் என்று கூறினார்கள். (பைஹகீ, இப்னு அஸாகிர், கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக்கம் 193)

ஹழரத் அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருச்சமுகத்தில் ஆஜராகும் போதெல்லாம் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் புனித முதுகின் மீது விளையாடிக் கொண்டிருப்பார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “எனது இந்த உம்மத்துக்களில் இவர்கள்தான் எனக்கு நறுமணமாக இருக்கிறார்கள்” என்றும் கூறுவார்கள். (இமாம் நஸாயீ)

ஹழரத் அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மஸ்ஜிதுக்கு வந்து, “சிறிய குழந்தை எங்கே?” என்று கேட்டார்கள். அப்போது ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் விளையாடியபடி அங்கு வந்து, அண்ணலாரின் புனித மடியில் அமர்ந்தார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் திருவாயைத் திறந்து, அவர்களின் அதரங்களில் முத்தமிட்டார்கள். பிறகு, “யா அல்லாஹ்! நான் இவரை நேசிக்கிறேன். நீயும் இவரை நேசிப்பாயாக! இவரை நேசிப்பவரையும் நீ நேசிப்பாயாக!” என்று துஆ செய்தார்கள். (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 145)

ஹழரத் காலித் பின் மஃதான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “(ஹழரத் இமாம்) ஹஸன் என்னோடு இருக்கிறார். (ஹழரத் இமாம்) ஹுஸைன் ஹழரத் அலீயோடு இருக்கிறார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள்

கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2562, பக்கம் 307.

மற்றொரு அறிவிப்பில் ஹழரத் அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்களே கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் அதரங்களில் முத்தமிட்டு, பேரீச்சம்பழத்தை உறிஞ்சுவதைப் போல உறிஞ்சினார்கள்.

அந்த புனிதமான அதரங்களைத்தான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்துக்களில் சிலர் தாகத்தால் தகிக்கச் செய்து தவிக்க விட்டார்கள்!

ஹழரத் அபூ ஸயீத் அல் குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் இமாம் ஹஸன் மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் சுவனத்து இளைஞர்களின் தலைவர்கள் ஆவார்கள். அவர்களின் தந்தையோ அவர்களை விடவும் சிறப்பானவர் ஆவார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2551, பக்கம் 302.

ஹழரத் இம்ரான் இப்னு சுலைமான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹஸன் மற்றும் ஹுஸைன் ஆகியவை சுவனவாசிகளின் பெயர்களாகும். அறியாமைக் காலத்தில் இப்பெயர்கள் (எவருக்கும் வைத்து) இருக்கவில்லை". (பரக்காத்தே ஆலே ரஸூல், பக்கம் 211)

ஹழரத் இப்னு அபீ நுஅம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "நான் ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் இருந்தேன். அப்போது ஒருவர் வந்து, "என்னுடைய ஆடையில் கொசுவின் இரத்தம் பட்டுவிட்டது. நான் அந்த ஆடையுடனேயே தொழுதுவிட்டேன். தொழுகை கூடுமா? என்று கேட்டார். அப்போது ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "நான் ஈராக்கைச் சேர்ந்தவன்" என்று கூறினார்.

உடனே ஹழரத் அவர்கள், "இந்த மனிதரைப் பாருங்கள்! இவர் கொசுவின் இரத்தம் பற்றி என்னிடம் கேட்கிறார்! ஆனால் இவர்களோ அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேரரையே கொலை செய்துவிட்டார்கள்! நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "என்னுடைய இந்த பேரரும், ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹும் அவர்களும் எனக்கு இந்த உலகத்து நறுமணங்கள்" என்று திருவாய்

மலர்ந்தருளியதை கேட்டிருக்கிறேன்” என்று கூறினார்கள். (கஸாயிஸ் அலீ, பக்கம் 136)

ஹழரத் மவ்லானா அஷ்ரப் அலி தானவி அவர்கள் தமது ‘ஜமாலுல் அவ்லியா’ என்னும் நூலில், ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரின் கராமத்துக்களைப் பற்றி கூறும் போது, “ஒருவர் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் புனித அடக்கத்தலத்தின் மீது அமர்ந்து மலம் கழித்துவிட்டார். அதைத் தொடர்ந்து அவருக்கு பைத்தியம் பிடித்துவிட்டது. அவர் நாயைப் போல குரைக்கவும் தொடங்கினார். ஒரு நாள் அவர் இறந்து விட்டார். பிறகு அவரது கபரிலிருந்தும் நாயின் குரைப்பு கேட்டுக் கொண்டே இருந்தது. இதை ஹழரத் அஃமஷ் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் அறிவிப்பில் ஹழரத் இமாம் அபூ நுஜம் மற்றும் ஹழரத் இமாம் இப்னு அஸாகிர் ரஹ்மதுல்லாஹி அலைஹிம் கூறியதாகவும் எழுதியுள்ளார்கள்.

அதைப் போலவே ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கராமத்துக்களைப் பற்றி எழுதும் போது, ஹழரத் இப்னு ஷிஹாப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் அறிவிப்பை ஆதாரமாகக் கொண்டு எழுதியுள்ளார்கள். அல்லாஹு ஸுப்ஹானஹு வதஆலா ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் போர் புரிந்த ஒருவரைக் கூட விட்டு வைக்கவில்லை. அந்த போரில் அப்துல்லாஹ் பின் ஹஸீன் என்பவன், போரின் போதும் தண்ணீர் தடை செய்யப்பட்ட போதும், “ஹழரத் ஹுஸைன் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களே! நீங்கள் தண்ணீரை நெருங்கவும் முடியாது. அது வானத்தின் நடுவிலே இருக்கிறது! இறைவன் மீது ஆணையாக, நீங்கள் அதிலிருந்து ஒரு துளி நீரையும் அடைய முடியாது. நீங்கள் தாகத்துடனேயே ஷஹீத் ஆகவேண்டும்!” என்று கூறினான்.

அதைக் கேட்ட ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “யா அல்லாஹ்! இவனை தாகத்தால் மரணிக்கச் செய்வாயாக!” என்று துஆ செய்தார்கள். அதன் பிறகு அவனுடைய நிலைமோசமானது. அவன் தாகத்தால் தவிக்கத் தொடங்கினான். எவ்வளவு தண்ணீர் குடித்த போதும் தாகம் தணியாமல் துடிதுடித்தான். பின்னர் அடங்காத தாகத்துடனேயே மரணித்தான். (ஜமாலுல் அவ்லியா, பக்கம் 34)

## போர்கள்

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கலந்து கொண்ட போர்களில் 'தபூக்' போரைத் தவிர, மற்ற அனைத்துப்

போர்களிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கலந்து கொண்டு வீர தீர சாகசங்களைப் புரிந்தார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ இப்னு அபி தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை /போருக்கு/ அனுப்பினால், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு வலது புறத்தில் ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களும், இடது புறத்தில் ஹழரத் மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் உடன் செல்வார்கள். அல்லாஹ் வெற்றி வழங்கியதும் அன்னார் திரும்பி வருவார்கள்" என்று ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள். /அல் முஃஜும் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம்2, ஹதீஸ் எண்: 2652, பக்கம் 365/

ஹழரத் உம்மு அதிய்யா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு படைப் பிரிவை அனுப்பிவைத்தார்கள். அதில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் இருந்தார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தமது திருக் கரங்களை உயர்த்தி, "யாஅல்லாஹ்! அலீயை எனக்கு மீண்டும் காட்டாதவரை எனக்கு மரணத்தைக் கொடுக்காதே!" என்று துஆ செய்தார்கள். (ஹழரத் அலீ – ஷாஹ் வலியுல்லாஹ், பக்கம் 98)

**பத்ருப் போர்:**

இஸ்லாமிய வரலாற்றில் முதல் போராக கருதப்படும் பத்ருப் போர் ஹிஜ்ரி இரண்டு, ரமலான் மாதத்தில் நடைபெற்றது. இப்போரில், பிரதான போருக்கு முன்னால் நடைபெறும் தொடக்க சண்டையில் குறைஷிகளின் பெருந்தலைவனான உத்பா இப்னு ரபீஆ என்பவன் உறுமிக்கொண்டு வந்து போருக்கு அறைகூவல் விடுத்தான்! அவனோடு அவனுடைய இளவல் ஷைபா என்பவனும், மகன் வலீது என்பவனும் முன் வந்து நின்றார்கள். அவர்களை எதிர்கொள்ள அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் உபைதா இப்னு ஹாரிஃஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, ஹழரத் ஹம்ஹா இப்னு அப்துல் முத்தலிப் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹு ஆகியோரை அனுப்பினார்கள். இவர்களில், ஹழரத் உபைதா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் உத்பாவையும், ஹழரத் ஹம்ஸா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் ஷைபாவையும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் வலீதையும் எதிர்கொண்டார்கள்.

பத்ருப் போரில் அலம் என்னும் கொடியை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களே சுமந்து சென்றார்கள். என்று ஹழரத் கத்தாதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள். சண்டை தொடங்கியதுமே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களே முதலாவதாக பாய்ந்து சென்று தமது வாளால் வலீதை வெட்டி இரண்டாய்ப் பிளந்தார்கள்!

அடுத்து ஹழரத் ஹம்ஸா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் ஷைபாவை வெட்டிச் சாய்த்தார்கள்! ஹழரத் உபைதா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் உத்பாவை போராடி வீழ்த்தினார்கள். ஆயினும் உத்பா வீசிய வாளால் தாமும் காயமுற்று தடுமாறினார்கள். இதைக் கண்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் மின்னலென உத்பா மீது பாய்ந்தார்கள். உத்பாவையும் கொன்று போட்டார்கள். அதன் பிறகு நடைபெற்ற பிரதான போரிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் பாய்ந்து பாய்ந்து போர் புரிந்தார்கள். வெற்றி வீரராய் வலம் வந்தார்கள். இப்போரின் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது 'துல்ஃபிகார்' என்னும் வாளை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கொடுத்தார்கள். இப் போரின் வெற்றிக்குப் பிறகு அவ்வாளை நிறந்தரமாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கே கொடுத்துவிட்டார்கள் என்று ஹாபிழ் இப்னு அஸாகிர் ரஹ்மதுல்லாஹி அலைஹி கூறியுள்ளார்கள்.

ஹழரத் அபூ இஸ்ஹாக் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அறிவிக்கிறார்கள், "ஹழரத் பராஉ இப்னு ஆஸிப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் ஒருவர், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பத்ருப் போரில் பங்கெடுத்தார்களா?" என்று கேட்டார். (அதற்கு ஹழரத் பராஉ அவர்கள், "ஆம், பங்கெடுத்தார்கள்) கவசத்திற்கு மேல் கவசம் அணிந்துக் கொண்டு (போர் களத்தில்) தனித்துப் போராடினார்கள்" என்று கூறினார்கள். (புகாரீ)

## உஹதுப் போர்:

ஹிஜ்ரி 3 - ம் வருடத்தில் நடைபெற்ற உஹதுப் போரிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது வீரத்தை உலகத்திற்கு பறை சாற்றினார்கள். தொடக்கத்திலேயே, கொடியேந்தி கொக்கரித்துக் கொண்டு வந்த குறைஷியனை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் தமது வாளால் வெட்டிப் போட்டார்கள். அடுத்து கொடியேந்தி வந்தவனை ஹழரத் ஹம்ஸா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் கொன்றார்கள். பிரதான போரிலும் இவ்விருவரும் சுழன்று சுழன்று போர் புரிந்தார்கள். இவர்களோடு இவர்களின் வாட்களும் திக்கெட்டும் சுழன்றன.

எதிரிகளின் தலைகளை பனங்காய்களைப் போல சீவித் தள்ளின. படைகள் அணி அணியாய் சிதறிப் போயின. இவர்களோடு ஹழரத் ஸுபைர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு, ஹழரத் அபூ துஜானா ரலியல்லாஹுதஆலா அன்ஹு ஆகியோரும் மற்றுமுள்ள தோழர்களும் சேர்ந்து கடுமையாக போர் புரிந்தனர்.

தாக்குதலை தாங்க முடியாமல் எதிரிகள் தடுமாறினர். இந்த சூழ்நிலையில் குறைஷிகளின் முன்னணிப் படைத்தலைவராக இருந்த அபூஸுஃப்யான் ஒரு சூழ்ச்சியை மேற்கொண்டார். தடுமாறிக் கொண்டிருந்த தம் வீரர்களிடம், அவர்களிடமிருந்த பொருட்களையும், சுமைகளையும் உதறி எறிந்து விட்டு ஓடும்படியாகக் கூறினான். அவர்களும் அவ்விதமே ஓட்டம் பிடித்தனர். எதிரிப் படைகள் தங்களிடமிருந்த பொருட்களையும், சுமைகளையும் விட்டு விட்டு தோற்றோடுவதாக எண்ணிய நபித் தோழர்கள், அப்பொருட்களை சேகரிப்பதில் ஈடுபட்டனர். எக்காரணம் கொண்டும் இருக்கும் இடத்தை விட்டும் நகரக் கூடாது என்று எச்சரித்து, கணவாய்க்கு காவலாக நிறுத்தியிருந்த தோழர்களும் எதிரிகள் போட்டு விட்டுச் சென்ற பொருட்களை சேகரிக்க ஓடினர். இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்ட எதிரிகள், கணவாய் வழியாக பின்புறமாக வந்து மீண்டும் தாக்கினர்.

இதனால் குழப்பமுற்ற முஸ்லிம்கள் தடுமாறிப் போனார்கள். தோழர் யார்? எதிரி யார்? என்பதும் புரியாமல் ஒருவரை ஒருவர் வெட்டினர். இதற்கிடையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கொல்லப்பட்டதாக வதந்தியும் பரவியது. இதன் காரணமாக முஸ்லிம்கள் மேலும் தடுமாறினர். இச்சூழ்நிலையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சுற்றி ஒரு அரண் போல நின்று சில நபித் தோழர்களே அவர்களைப் பாதுகாத்தனர். அவர்களிலே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களும் இருந்தார்கள்.

இப்போரில் ஹழரத் முஸ்அப் இப்னு உமைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷஹீத் ஆன பிறகு, இஸ்லாமியக் கொடியை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களே ஏந்தி போர் புரிந்தார்கள். எதிரிகள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நெருங்கவிடாது தடுத்தனர். ஆயினும் இப்போரில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய திருமுகத்தில் கடுமையான காயம் ஏற்பட்டது.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களும் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களும் சேர்ந்து அக்காயத்தைக் கழுவி சுத்தம் செய்து சிகிச்சை அளித்தனர். இப்போரில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களின் திரு உடலில் பதினேழு இடங்களில் காயங்கள் ஏற்பட்டிருந்தன.

உஹது போரில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காயம் அடைந்தபோது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காயத்திற்கு எதனால் சிகிச்சை செய்யப்பட்டது? என்று ஹழரத் ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாயிதி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் மக்கள் கேட்டனர். அதற்கு அவர், "இந்த விஷயத்தை என்னை விட அதிகம் அறிந்தவர் எவரும் இல்லை. ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது கேடயத்தில் தண்ணீர் கொண்டு வந்தார். சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அந்தத் தண்ணீரால் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திரு முகத்திலிருந்த இரத்தத்தை கழுவினார்கள். பிறகு ஒரு பாய் எரித்து கரிக்கப்பட்டது. அதன் சாம்பல் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காயத்தின் மீது பூசப்பட்டது" என்று கூறினார். (புகாரீ)

ஹழரத் முஹம்மத் பின் உபைதுல்லாஹ் பின் அபூ ராஃபிஆ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது தந்தை மூலமாக கூறுகிறார்கள், "உஹது போரின் போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வீரதீரத்துடன் போர் புரிந்து, எதிரிகளை கொன்று குவித்தபோது, ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "யா ரஸூலுல்லாஹ் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்)! நிச்சயமாக இவரே தேற்றுபவராக இருக்கிறார்" என்று கூறினார். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அவர் என்னிலிருந்து இருக்கிறார். நான் அவரிலிருந்து இருக்கிறேன்" என்று கூறினார்கள். உடனே, ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், "யா ரஸூலுல்லாஹ்! ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) நான் தங்கள் இருவருடனும் இருக்கிறேன்" என்று கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 1, பக்கம் 472)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களின் வீரத்தைக் கண்டு 'ரிழ்வான்' என்னும் சுவனத்தின் காவலர்,

لاَ فَتٰى اِلاَّ عَلِىْ لاَ سَيْفَ اِلاَّ ذُوالْفِقَارِ ه

"அலீயைப் போன்றதோர் ஆண்மையாளருமில்லை, துல்ஃபிகாரைப் போன்றதொரு வாளுமில்லை" என வாழ்த்தியதாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

**அகழ்ப் போர்:**

இப்போர் ஹிஜ்ரி 5 - ம் ஆண்டில் நடைபெற்றது. இப்போரில் முஸ்லிம்கள் முதன் முதலாக நகரைச் சுற்றி அகழ் தோண்டி, அகழுக்கு இப்பக்கமிருந்தே போரிட்டனர். இப்போரிலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் தமது வீரத்தை வெளிப்படுத்தினார்கள். இப்போரில், மக்கத்து குறைஷிகள் பெரும் படையுடன் வந்து அகழின் அப்பக்கம் பாளையம் இறங்கி இருந்தனர். அகழை தாண்ட வழியறியாது அவர்கள் அல்லல் பட்டுக் கொண்டிருந்தனர். இந்நிலையில் நான்கு பேர்கள் மட்டும் அகழின் குறுகிய பகுதி ஒன்றை கண்டறிந்து, அதை தாண்டி விட்டனர். அந்த நால்வரில் அம்ரு இப்னு அப்துவுத் என்பவனும் ஒருவன். இவன் பேராற்றலில் ஆயிரம் வீரர்களுக்கு சமமாக கருதப்பட்டவன்!

அரபு சமூகத்தில் தனிச் செல்வாக்கு பெற்றவன். அவனை எதிர்த்து போரிட எவருமில்லை எனக் கருதப்பட்டவன். அப்படிப்பட்ட அவன், முஸ்லிம் படைகளுக்கு எதிரே நின்று, தன்னோடு போர் புரிய வருமாறு முஸ்லிம்களுக்கு அறைகூவல் விடுத்தான். உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் எழுந்து, அவனது கதையை முடிக்க புறப்பட்டார்கள். ஆயினும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை தடுத்து நிறுத்தி விட்டார்கள். முஸ்லிம்கள் தரப்பிலிருந்து எவரும் தன்னை எதிர்க்க முன்வராததைக் கண்ட அவன், ஆணவம் மிகுந்து மீண்டும் அறைகூவல் விடுத்தான்! இம்முறையும் அவனை எதிர்க்க ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களே புறப்பட்டார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இம்முறையும் தடுத்து நிறுத்திவிட்டார்கள்.

மூன்றாவது முறை அவன் கொக்கரித்த போது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அம்ரு இப்னு அப்துவுத்துடன் மோத ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களுக்கு அனுமதி வழங்கினார்கள். தங்களுடைய 'துல்ஃபிகார்' என்னும் வாளையும், தமது அமாம என்னும் தலைப்பாகையையும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களுக்கு கொடுத்தார்கள். பிறகு, "இறைவா! நீ ஆணவக்காரன் மீது அலீயுடன் துணை நில்" என்று துஆ செய்து போருக்கு அனுப்பி வைத்தார்கள். (இப்னு ஸஅத்)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் அலட்சியமாக நடந்து சென்று அம்ரிப்னு அப்துவுத்துக்கு எதிரே நின்றார்கள். பிறகு அவனைப் பார்த்து, "அம்ரே! அல்லாஹ்வையும் அவன் தூதரையும் ஏற்று இஸ்லாத்தின் பக்கம் வந்துவிடு" என்றார்கள். அதற்கு அவன் மறுத்துவிட்டான். "அப்படியானால் போரை விட்டும் நீ

விலகிவிடு" என்றார்கள். "ஊஹூம், மாட்டேன்" என்றான் அவன். "அப்படியானால் என்னோடு போர் புரிய வா!" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள், அவனை போருக்கு அழைத்தார்கள். இவ்வழைப்பைக் கேட்டு அவன் திகைத்தான்! 'தன்னை போருக்கு அழைக்கவும், எதிர்த்து போரிடவும் ஒருவர் இருக்கிறாரா?' என்று ஆச்சரியப்பட்டான்! ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களைப் பார்த்து பார்த்து கோபப்பட்டான். இரத்தம் கொதிக்க, கண்கள் சிவந்துபோனான்!

அடுத்தகணம், அவன் வெறியோடு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களை வாளால் தாக்கினான். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள் அவனுடைய தாக்குதலை தமது கேடயத்தினால் தடுத்தார்கள். உடனே, மின்னலென அவன் மீது பாய்ந்து பதில் தாக்குதலையும் தொடுத்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களின் வாள், அம்ரு இப்னு அப்துவுத்துடைய நெஞ்சை பிளந்து. இடுப்பின் கீழாய் இறங்கியது! இதனால் அவன் இரு கூறுகளாகி செத்தொழிந்தான். ஓராயிரம் வீரர்களுக்கு ஒப்பானவனை ஒரே வீச்சில் கொன்று விட்டு, வெற்றி வீரராய் திரும்பினார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள். அகழ் போரில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களின் வீரத்தைக் கண்டு மகிழ்ந்த அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள்,

لَمُبَارَزَةُ عَلِيِّ ابْنُ اَبِيْ طَالِبٍ يَوْمَ الْخَنْدَقِ اَفْضَلُ مِنْ
اَعْمَالُ اُمَّتِيْ اِلىٰ يَوْمَ الْقِيٰمَةِ ه

"அன்றைய தினம் அலீ இப்னு அபீதாலிப் (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்கள் வெளிப்படுத்திய துணிவு, உலக முடிவு நாள் வரை என் சமுதாயத்தார் ஆற்றக் கூடிய நற்செயல்களை விட மேலானது" என்று புகழ்ந்தார்கள்.

அகழ்ப் போரின் போதுதான் அஸர் தொழுகையைக் கூட தொழ முடியாதபடி போர் உத்வேகத்துடன் நடந்தது. அந்த நேரத்தில்தான் எதற்குமே, எவருக்குமே சபிக்காத அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், “எதிரிகளுடைய புதை குழிகளையும், வீடுகளையும் அல்லாஹ் நெருப்பால் நிரப்புவானாக!” என்று சபித்தார்கள். இது பற்றி ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், “அகழ்ப்போரின் போது நாங்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள், “எதிரிகளுடைய புதை குழிகளையும் அவர்களுடைய வீடுகளையும் அல்லாஹ் நெருப்பால் நிரப்புவானாக! அவர்கள், சூரியன் மறையும் வரை நடுத் தொழுகையிலிருந்து

நம்முடைய கவனத்தைத் திருப்பி விட்டார்களே!” என்று கூறினார்கள். (அஸர் தொழுகையே நடுத் தொழுகையாகும்) (புகாரீ)

## கைபர் போர்:

கைபர் என்ற இடம் திருமதீனாவிலிருந்து சுமார் எண்பது மைல் தூரத்தில் அமைந்திருந்தது. இங்கு யூதர்கள் கோட்டைகளை ஏற்படுத்தி அதனுள்ளே வசித்து வந்தார்கள். இவை ஏறத்தாழ பதினோரு கோட்டைகளை கொண்டிருந்தன. இவற்றில் 'கமூஸ்' என்னும் கோட்டையே மிகவும் உறுதிவாய்ந்ததாக இருந்தது. இந்த கோட்டைகள் முஸ்லிம்களுக்கு அச்சுறுத்தும் விதமாக அமைந்திருந்தன. யூதர்களும் அடிக்கடி முஸ்லிம்களுக்கு தொல்லைகளைக் கொடுத்து வந்தனர். ஒரு பெரும் படையை ஏற்படுத்தி, திருமதீனா மீது போர் தொடுக்கவும் திட்டமிட்டிருந்தனர். எனவே, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அக்கோட்டைகளை கைப்பற்ற முடிவு செய்தார்கள். அதன்படி ஹிஜ்ரீ 7, முஹர்ரம் மாதத்தில் சுமார் ஆயிரத்து அறுநூறு தோழர்களுடன் கைபரை அடைந்தார்கள். யூதர்கள், கோட்டைகளை நெருங்காவண்ணம் கடுமையான தடைகளை ஏற்படுத்தி இருந்தனர். ஆயினும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சிறிய படை கைபர் கோட்டைகளை ஒன்றன் பின் ஒன்றாக வெற்றி கொண்டது! 'கமூஸ்' கோட்டை மட்டுமே மீதமிருந்தது. முஸ்லிம்கள் அக்கோட்டையை வீழ்த்த ஆறு நாட்கள் வரை முயற்சி செய்தனர். ஆயினும் வெற்றி கிட்டவில்லை! ஆறாம் நாள் மாலையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் தோழர்களிடம்,

لَاُعْطِيَنَّ الرَّائْيَةَ غَدً الرَّجُلٌ يَفْتَحُ اللهُ عَلٰى يَدَيْهِ يُحِبُّ
اللهَ وَرَسُوْلَهُ وَيُحِبُّهُ اللهُ وَرَسُوْلُهُ ه

"நாளை நான் கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று முன்னறிவிப்பு செய்தார்கள். இப்பெரும் பேறு தமக்கே கிடைக்க வேண்டும் என்று நபித் தோழர்கள் ஒவ்வொருவரும் ஆசை கொண்டனர். இரவு முழுவதும் தூக்கம் பிடிக்காமல் தவித்தனர். மறுநாள் காலை, தோழர்கள் அனைவரும் ஆவலோடு காத்திருந்த வேளையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அலீ இப்னு அபீதாலிப் எங்கே?" என்று கேட்டார்கள்.

"கண்களில் வேதனையால் அவர் படுத்திருக்கிறார்" என தோழர்கள் கூறினர். "அவர்களை இங்கே அழைத்துவாரும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம்

தோழர்களை பணித்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களை தோழர்கள் அழைத்து வந்ததும், அன்னாரின் கண்களிலே தமது உமிழ் நீரை தடவினார்கள். உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கண்களின் வேதனை முற்றிலும் தீர்ந்தவராக குணமடைந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாமிய கொடியை அன்னாரிடம் கொடுத்தார்கள். தங்களின் போர் அங்கியையும், வாளையும் கொடுத்தார்கள். வெற்றிக்காக துஆ செய்து வழியனுப்பி வைத்தார்கள். இந்த விஷயம் பற்றி பல்வேறு ஹதீஸ்கள் பதிவு செய்யப் பட்டுள்ளன. அவற்றில் சில:

ஹழரத் ஸஹல் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கைபர் போரின் போது, "நாளை நான் ஒரு மனிதரிடம் இஸ்லாமியக் கொடியைக் கொடுப்பேன். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் அவருடைய கரங்களில் வெற்றியைக் கொடுப்பான். அவர் (எத்தகையவர் எனில்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார். அவரை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிறார்கள்" என்று கூறினார்கள். மக்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவரிடம் கொடியைக் கொடுப்பார்கள்?" என்று தமக்குள் பேசியபடி இரவைக் கழித்தார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் கொடி தமது கைகளிலேயே கொடுக்கப்பட வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்.

(காலையில்) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அலீ எங்கே?" என்று கேட்டார்கள். (மக்கள்) "அலீ அவர்களுக்கு கண் வலி" என்று கூறினார்கள். எனவே, (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அழைத்து வரச் செய்து) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீயின் இரண்டு கண்களிலும் தமது புனித எச்சிலை தடவி, அவர்களின் (கண் வலி நீங்கிட) துஆவும் செய்தார்கள். உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் முற்றிலுமாக குணமடைந்தார்கள். பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாமிய கொடியை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கொடுத்தார்கள்.

"கைபர் வாசிகள் நம்மைப் போன்று (முஸ்லிம்களாக) ஆகும் வரை நான் அவர்களுடன் போர் புரிவேன்" என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூறினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், (அலீயே!) நீங்கள் நிதானத்துடன் சென்று அவர்களின் களத்தில் இறங்குங்கள். பிறகு அவர்களை இஸ்லாத்தின் பக்கம் அழையுங்கள். (இஸ்லாத்தை ஏற்பதால்) அவர்கள் மீது கடமையாகுபவற்றை அவர்களுக்கு தெரிவியுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்கள் வாயிலாக

அல்லாஹ் ஒருவரை நேர்வழியில் செலுத்துவது சிவப்பு ஒட்டகங்களை (தர்மம்) செய்வதை விட உங்களுக்குச் சிறந்ததாகும்" என்று கூறினார்கள். (புகாரீ)

ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். எனவே ஸஹாபா பெருமக்கள் அந்த கொடியையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கொடியை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் வழங்கினார்கள். (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

ஹழரத் அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று கூறினார்கள். எனவே மக்கள் 'அந்த (அதிர்ஷ்டசாலி) நபர் யார் என்று தமது சிரங்களை உயர்த்தி பார்த்துக் கொண்டே இருந்தார்கள்.

(காலையில்) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "அலீ இப்னு அபீதாலிப் எங்கே?" என்று விசாரித்தார்கள். "அவர்களுக்கு கண் வலி" என்று மக்கள் கூறினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது புனிதமான உமிழ் நீரை தமது இரு கரங்களிலும் தடவி, அதை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் இரு கண்களிலும் தடவினார்கள். பிறகு கொடியை அன்னாரிடம் வழங்கினார்கள். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் அவர்களுக்கு வெற்றியைக் கொடுத்தான். (கஸாயிஸ் அலீ - இமாம் நஸாயீ, பக்கம் 33)

ஹழரத் இம்ரான் பின் ஹஸீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், (கைபர் போரின் போது) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று கூறினார்கள். (மறுநாள் காலை) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அழைத்தார்கள். அவர்கள் கண்

வலியுடன் இருந்தார்கள். அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கரங்களில் வெற்றியைக் கொடுத்தான். (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ)

ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் திருத் தந்தையார் (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்கள் ஷஹீது ஆன பிறகு, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கருப்பு நிற அமாம (தலைப்பாகை) அணிந்துக் கொண்டு வந்தார்கள். பிறகு மக்களை ஒன்று கூட்டி, “கடந்த நாளில் நீங்கள் (சிறந்த) மனிதர் ஒருவரை ஷஹீத் ஆக்கியிருக்கிறீர்கள். அவருடைய அந்தஸ்தை அவருக்கு முன்னால் வந்த மக்களில் எவரும் அடையவில்லை. இனி வரும் காலங்களிலும் அவருடைய இடத்தை எவரும் அடையப் போவதுமில்லை. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரைப் பற்றி (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பற்றி), "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர். ஹழரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வலது புறமாகவும், ஹழரத் மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இடது புறமாகவும் நின்று அவருடன் போர் புரிகின்றனர்” என்று கூறினார்கள். (கஸாயிஸ் அலீ – இமாம் நஸாயீ)

ஹழரத் அப்துல்லாஹ் பின் புரைதா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், தமது தந்தையார் ஹழரத் புரைதா அவர்கள் மூலமாக அறிவிக்கிறார்கள், “கைபர் போரின் போது வீரர்கள் அனைவரும் சரிசமமாக நடந்துக் கொண்டிருந்தோம். அந்நாளில் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கொடியை ஏந்தினார்கள். ஆயினும் கைபர் கோட்டை வெற்றிக் கொள்ளப்படவில்லை! அடுத்த நாள் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கொடியை ஏந்திச் சென்றார்கள். அவராலும் கைபர் கோட்டை வெற்றிக் கொள்ளப்பட வில்லை. அச்சமயம் வீரர்கள் (உணவு) பற்றாக்குறையால் கடுமையாக பாதிக்கப்பட்டிருந்தார்கள்.

எனவே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று கூறினார்கள். கைபர் கோட்டை வெற்றி கொள்ளப்பட்டு விடும் என்ற மகிழ்ச்சியில் நாங்கள் இரவைக் கழித்தோம். காலையில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஃபஜ்ரு தொழுகையை நிறைவேற்றினார்கள். பிறகு கொடியை வழங்க எழுந்து நின்றார்கள்.

ஹழரத் புரைதா அஸ்லமி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், “கைபர் போரின் போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு கோட்டையிந் முன் பாளையம் இறங்கினார்கள். அச்சமயம் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கொடியை வழங்கி, அன்னாருடன் படை வீரர்களையும் அனுப்பி வைத்தார்கள். அன்னார் கைபர்வாசிகளுடன் போர் புரிந்தார்கள். ஆயினும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் படை வீரர்களும் சிதறுண்டு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் திரும்பிவந்தார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "நாளை நான் இக்கொடியை கொடுக்கும் மனிதரின் கரத்தில் அல்லாஹ் வெற்றியைக் கொடுப்பான். அவர் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நேசிப்பவர். அல்லாஹ்வும் அவன் தூதரும் அவரை நேசிக்கின்றனர்" என்று கூறினார்கள்.

மறுநாள் காலை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை அழைத்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கண் உபாதையுடன் இருந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது புனித உமிழ் நீரை அன்னாரின் கண்களில் தடவினார்கள். (அதனால் கண் உபாதை முற்றிலுமாக குணமடைந்தது) பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கொடியை வழங்கி, அன்னாருடன் படைவீரர்களையும் அனுப்பி வைத்தார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கோட்டையை அடைந்தார்கள். அவர்களுக்கு முன்னால் மர்ஹப் (என்னும் யூத மன்னன்) நின்று, “நானே மர்ஹப். இது கைபருக்கு தெரியும். போர் உக்கிரமானால், நான் ஆயுதம் ஏந்திய வீர தீரன் (ஆவேன்)” என்னும் கவிதையை பாடிக் கொண்டிருந்தான். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அவன் மீது பாய்ந்து, அவனது தலையை வாளால் தாக்கினார்கள். அன்னாரின் வாள் மர்ஹபின் தலையைப் பிளந்தது! கோட்டையும் வெற்றிக் கொள்ளப்பட்டது. (ஹழரத் இமாம் நஸாயீ ரஹ்மதுல்லாஹி அலைஹி)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கமூஸ் கோட்டையை நெருங்கினார்கள். அக்கோட்டையின் தளபதியாக மர்ஹப் என்பவன் இருந்தான். அவன் ஓராயிரம் வீரர்களுக்கு ஒப்பானவன். வீராதி வீரன். சூராதி சூரன். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கோட்டையை நெருங்கியதும் முதலாவதாக மர்ஹபின் தந்தை கோட்டைக்கு வெளியே வந்து, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களைத் தாக்கினான். அந்த தாக்குதலை லாவகமாக தடுத்த ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள், திருப்பி அவன் மீது தாக்குதலை

தொடுத்தார்கள். அன்னாரின் வாள் அவனை வெட்டி கொன்று போட்டது!

இதனைக் கண்ட மர்ஹப் உறுமியபடியே வெளியே வந்தான். அவனை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் குதிரையோடு வெட்டிப் பிளந்தார்கள். அவனுக்கு பின்னால் ஓடிவந்த வீரர்களையும் வெட்டிக் கொன்றார்கள். இதனைக் கண்ட மற்ற வீரர்கள் பயந்து கோட்டைக்குள் புகுந்து அதன் கதவை மூடிவிட்டார்கள்.

அவர்களை விரட்டிச் சென்ற ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள், கண நேரத்தில் அகழியையும் தாண்டினார்கள். கோட்டைக் கதவை தமது திருக்கரங்களால் பற்றிப் பிடித்து உலுக்கினார்கள். அன்னாரின் வேகத்துக்கும், வீரத்துக்கும் ஈடு கொடுக்க முடியாமல் கோட்டைக் கதவு நிலையோடு பெயர்ந்தது. ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கோட்டைக் கதவையே கேடயமாக பயன்படுத்தி எதிர்கொண்ட வீரர்களுடன் போர் புரிந்தனர். அதேசமயம் முஸ்லிம் வீரர்களும் கோட்டைக்குள்ளே புகுந்தார்கள். சிறிது நேரத்திலேயே கமூஸ் கோட்டை வெற்றிக் கொள்ளப்பட்டது! போர் ஓய்ந்த பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் பெயர்த்துப் போட்ட கோட்டைக் கதவின் நிலையை ஏழு பேர்கள் சேர்ந்து தூக்க முயன்றார்கள். முடியவில்லை. நாற்பது பேர்கள் சேர்ந்து முயன்றார்கள். முடியவில்லை. எழுபது பேர்கள் ஒன்று கூடி முயற்சி செய்தார்கள். அவர்களால் நிலையை அசைக்கக்கூட முடியவில்லை!

ஹழரத் அப்துல்லாஹ் பின் அஹ்மத் இப்னு ஹம்பல் ரஹமதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கைபருடைய நாளில் கொடியை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கொடுத்தார்கள். உடனே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வேகமாக கோட்டையை நோக்கி முன்னேறினார்கள். கோட்டையை நெருங்கி, அதன் கதவை பிடித்து இழுத்து கீழே தள்ளினார்கள். பிறகு, எழுபது பேர் சேர்ந்து அதை மீண்டும் அதனிடத்தே நிறுத்தினார்கள்". (பர்காதே ஆலே ரஸூல், பக்கம் 130)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் வெற்றி வீரராய் திரும்பிய போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்,

بَلَغَنِىْ ثَنَآئُكَ الْمَشْكُوْرُ وَضِيْعَكَ الْمَذْكُوْرُ قَدْ رَضِىَ اللهُ عَنْهُمْ وَرَضِيْتُ اَنَا عَنْكَ ه

"நன்றிக்குரிய உம் பெருமைகள் எம்மை எட்டின. உமது ஆற்றல்கள் விவரிக்கப்பட்டன. அல்லாஹ் அவற்றைப் பொருந்திக் கொண்டான். நானும் உம்மைக் கொண்டு பொருத்தங் கொண்டேன்" என்று பெருமிதத்துடன் கூறினார்கள்.

இப்படி ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களின் வீர தீர சாகசங்கள் ஏராளம் ஏராளம். அவற்றைப் படிப்பவர்கள் வியக்கிறார்கள்! கேட்பவர்கள் சிலிர்க்கிறார்கள்! கோழைகள் வீரம் பெறுகிறார்கள்! அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களே ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்களின் வீரத்தைக் கண்டு அவர்களை,

اَسَدُ اللهِ الْغَالِبْه

'அஸதுல்லாஹில் காலிப்' - **அல்லாஹ்வின் சிங்கம்** - என்று புகழ்ந்திருக்கிறார்கள்.

حَيْدَرِ كَرَّار

'ஹைதரே கர்ரார்' - பாய்ந்து கிழிக்கும் வேங்கை - என்று மற்றொரு முறை புகழ்ந்திருக்கிறார்கள்!

### ஹம்தான் வெற்றி:

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தபூக் போரிலிருந்து திரும்பிய பிறகு, ஹம்தான் கிளையில் இஸ்லாத்தை ஏற்காதவர்களுக்கு இஸ்லாமிய அழைப்பு பணியை மேற்கொள்ள ஹழரத் காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் ஒரு குழுவை அனுப்பி வைத்தார்கள். ஹழரத் காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆறு மாதங்கள் வரை அழைப்புப் பணியை மேற் கொண்டார்கள். ஆனால், ஒருவர் கூட இஸ்லாத்தை ஏற்கவில்லை.

அதன் பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அப்பணிக்காக ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களை அனுப்பிவைத்தார்கள். ஒரு கடிதத்தையும் எழுதி அனுப்பிவைத்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அக்கடிதத்தை படித்துக் காண்பித்து, இஸ்லாமிய

அழைப்பை மேற்கொண்டார்கள். அல்லாஹ்வின் பேரருளால் ஹம்தானிலிருந்த மக்கள் அனைவரும் இஸ்லாத்தை ஏற்றார்கள். உடனே இந்த சந்தோஷ செய்தியை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கடிதம் மூலமாக தெரிவித்தார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்விஷயத்தை அறிந்ததும் மிகவும் மகிழ்ந்தவர்களாக ஸஜ்தா செய்தார்கள். பிறகு தமது திருச் சிரத்தை உயர்த்தி, “ஸலாமுன் அலா ஹம்தான், ஸலாமுன் அலா ஹம்தான்” என்று இரண்டு முறை கூறினார்கள்.

## கிலாஃபத்

ஹழரத் ஸயீதுப்னு ஜும்ஹான் அவர்கள், ஹழரத் ஸஃபீனா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வாயிலாக கூறுகிறார்கள், “என்னுடைய உம்மத்தில் கிலாஃபத் முப்பது ஆண்டுகள் வரை இருக்கும். அதன் பிறகு அரசாட்சி அமையும். நீர் கிலாஃபத்தின் போதும் இருப்பீர்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். அதைப் போலவே நான் ஹழரத் அபூபக்கர், ஹழரத் உமர், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹும் மற்றும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் ஆகியோரின் கிலாஃபத்தில் இருந்தேன். (கிலாஃபத்தின் காலத்தை கணக்கிட்டுப் பார்த்தபோது) அது முப்பது ஆண்டுகளாகவே இருந்தது! அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 4, ஹதீஸ் எண்: 6328.

மற்றொரு அறிவிப்பில் ஹழரத் ஸயீத் அவர்களே கூறுகிறார்கள், “ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கிலாஃபத் ஆட்சிக் காலம் இரண்டு ஆண்டுகளாகவும், ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கிலாஃபத் ஆட்சிக் காலம் பத்து ஆண்டுகளாகவும், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கிலாஃபத் ஆட்சிக் காலம் பன்னிரண்டு ஆண்டுகளாகவும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கிலாஃபத் ஆட்சிக் காலம் ஆறு ஆண்டுகளாகவும் (ஆக மொத்தம் முப்பது ஆண்டுகள் கிலாஃபத் ஆட்சி முறை இருந்தது.) அல் முஅஜம் அல் கபீர், பாகம் 4, ஹதீஸ் எண்: 6330.

### முதல் கலீஃபா:

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது இறுதி நேரத்தில் உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் இல்லத்தில் படுத்திருந்தார்கள். அவர்களுடன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்றும் ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் இருந்தார்கள்.

அதேசமயம் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் கலீஃபாவை தேர்ந் தெடுப்பது பற்றி அன்ஸார்களுடன் ஆலோசனை செய்துக் கொண்டிருந்தார்கள். இது பற்றி உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், "(எனது தந்தை) ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் (பனூ ஹர்ஸ் குலத்தாரின் இல்லங்கள் அமைந்துள்ள) 'ஸுன்ஹ்' என்னுமிடத்தில் இருந்து கொண்டிருந்த போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறப்பெய்தி னார்கள்" என்று அறிவித்துள்ளார்கள். (புகாரீ)

ஹழரத் இமாம் புகாரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கிலாஃபத் பற்றி கூறும்போது, ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் (கலீஃபாவை தேர்ந்தெடுக்க) அன்சாரிகளிடம் வந்தார்கள். அப்போது ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அன்சார்களிடம் பேச முயன்றார்கள். ஆனால் அவரை ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தடுத்து, மௌனமாக இருக்கச் சொல்லிவிட்டார்கள். பிறகு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "(குரைஷிகளான) நாங்கள் கலீஃபாவாக இருப்போம். அன்ஸாரிகளான நீங்கள் அமைச்சர்களாக இருங்கள்" என்று கூறினார்கள். அதை அன்ஸாரியான ஹழரத் ஹுபாப் இப்னு முன்திர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை. அவர், அன்ஸார்களில் இருந்தும் ஒரு கலீஃபா இருக்க வேண்டும் என்று கூறினார். அப்போது ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "குரைஷிகள் தாம் சிறந்த செயல்திறன் மிக்கவர்கள். எனவே, ஹழரத் உமர் இப்னு கத்தாப் ரலியல்லாஹு அன்ஹு அல்லது ஹழரத் அபூ உபைதா இப்னு அல் ஜர்ராஹ் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரில் ஒருவருக்கு பைஅத் செய்யுங்கள்" என்று கூறினார்கள்.

உடனே ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மிகவும் பிரியமான வராக இருப்பவர் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்தாம். எனவே, அவரே நமக்கு தலைவர்" என்று கூறியபடியே ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கரங்களைப் பிடித்து பைஅத் செய்தார்கள். அதைக் கண்ட மற்றவர்களும் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கரங்களின் மீது பைஅத் செய்தார்கள். இப்படியாக ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

ஹழரத் இமாம் புகாரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மேலும் கூறும் போது, ஹழரத் அபூபக்கர் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லம் அவர்களின் இல்லத்திற்கு வந்தார்கள். அச்சமயம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத் ஆகிவிட்டிருந்தார்கள். எனவே, ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உள்ளே சென்று, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது போர்த்தியிருந்த போர்வையை விலக்கி, அண்ணலாரின் புனித நெற்றியில் முத்தமிட்டார்கள். பிறகு, "தங்களுக்கு என் தந்தையும் தாயும் அர்ப்பணமாகட்டும். தாங்கள் உயிரோடு இருக்கும் போதும் நறுமணம் கமழ்ந்தவர்களாக இருந்தீர்கள். இறந்த நிலையிலும் மணம் கமழுகிறீர்கள்" என்று கூறிவிட்டு வெளியே வந்தார்கள்.

**إِنَّكَ مَيِّتٌ وَإِنَّهُم مَّيِّتُونَ**

வெளியில் கூடியிருந்தவர்களிடம் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை வணங்கிக் கொண்டிருந்தவர்கள், அவர்கள் இறந்துவிட்டார்கள் என்பதை அறிந்துக் கொள்ளட்டும். அல்லாஹ்வை வணங்கிக் கொண்டிருந்தவர்கள், அல்லாஹ் என்றும் உயிர் வாழ்பவன் என்பதையும், அவன் இறக்கமாட்டான் என்பதையும் புரிந்துக் கொள்ளட்டும்" என்று கூறிவிட்டு, 'நபியே! நீங்களும் இறப்பவர்தாம்; அவர்களும் இறப்பவர்களே' என்னும் அத்தியாயம் 39, ஸூரத்துஜ் ஜுமர், வசனம் 30 ஐயும் ஓதிக் காண்பித்தார்கள்.

**وَما مُحَمَّدٌ إِلّا رَسولٌ قَد خَلَت مِن قَبلِهِ الرُّسُلُ ۚ أَفَإِن ماتَ أَو قُتِلَ انقَلَبتُم عَلىٰ أَعقابِكُم ۚ وَمَن يَنقَلِب عَلىٰ عَقِبَيهِ فَلَن يَضُرَّ اللَّهَ شَيئًا ۗ وَسَيَجزِي اللَّهُ الشّاكِرينَ**

மேலும், "முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (இறைவனின்) தூதரே அன்றி (வேறு) அல்லர்; அவருக்கு முன்னரும் (அல்லாஹ்வின்) தூதர்கள் பலரும் (காலம்) சென்று விட்டார்கள்; அவர் இறந்து விட்டால் அல்லது கொல்லப்பட்டால், நீங்கள் உங்கள் குதிகால்களின் மேல் (புறங்காட்டித்) திரும்பிவிடுவீர்களா? அப்படி எவரேனும் தம் குதிகால்கள் மேல் (புறங்காட்டித்) திரும்பி விடுவீரானால் அவர் அல்லாஹ்வுக்கு எவ்விதத் தீங்கும் செய்துவிட முடியாது; அன்றியும், அல்லாஹ் நன்றியுடையோருக்கு அதி சீக்கிரத்தில் நற்கூலியை வழங்குவான்" என்னும் அத்தியாயம் 3, ஸூரத்துல் ஆல இம்ரான், வசனம் 144 வசனத்தையும் ஓதிக் காண்பித்தார்கள். அதைக் கேட்டு மக்கள் விம்மி விம்மி அழுதார்கள். (புகாரீ)

அதன்படியாக, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹிஜ்ரி 11, ரபீஉல் அவ்வல் மாதம், பன்னிரண்டாம் நாள் திங்கட்கிழமை முற்பகலில் வஃபாத் ஆனார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வயது 63 ஆண்டுகள், 4 நாட்கள் ஆகியிருந்தன.

மறுநாள் செவ்வாய்க் கிழமை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகளை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தொடங்கினார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அணிந்திருந்த ஆடைகளுடனேயே அவரை குளிப்பாட்டினார்கள். இப்பணியில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடன் ஹழரத் அப்பாஸ், ஹழரத் ஃபழல் இப்னு அப்பாஸ், குஸம் இப்னு அப்பாஸ், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முன்னாள் அடிமை ஷுக்ரான், உஸாமா இப்னு ஜைத், அவ்ஸ் இப்னு கவ்லீ ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் ஈடுபட்டனர்.

ஹழரத் அப்பாஸ், ஹழரத் ஃபழல், ஹழரத் குஸம் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திரு உடலை புறட்ட, ஹழரத் உஸாமாவும், ஹழரத் ஷுக்ரானும் புனித உடல் மீது நீரை ஊற்ற, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் குளிப்பாட்டினார்கள். இவ்வாறே இலந்தை இலை கலந்த நீரால் மூன்று முறை குளிப்பாட்டினார்கள். இதற்காக ஹழரத் ஸஅதுப்னு கைஸமாவுக்கு சொந்தமான 'கர்ஸ்' என்னும் கிணற்றிலிருந்து நீர் கொண்டு வரப்பட்டது. இந்த கிணற்று நீரைத்தான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது வாழ்நாள் முழுவதும் அருந்தி வந்தார்கள். (தபகாத் இப்னு ஸஅத்)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஜனாஸா தொழுகையை முதலில் அவர்களுடைய குடும்பத்தாரும், அடுத்து முஹாஜிர்கள், அன்ஸார்கள், பெண்கள், சிறுவர்கள் என்று தொடர்ந்து தொழுதுக் கொண்டிருந்தார்கள்.

இப்பணிகள் நிறைவடைந்த பிறகும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பைஅத் செய்யாமலேயே இருந்து வந்தார்கள். இதைப் பற்றி ஹழரத் இமாம் புகாரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மேலும் கூறும் போது,

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத் ஆன பிறகு, அன்னாரின் திருப் புதல்வியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், கலீஃபா ஹழரத் அபூபக்கர்

ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம், தங்களுக்கு அல்லாஹ் ஒதுக்கித் தந்திருந்த மதீனா மற்றும் ஃபதக் சொத்திலிருந்தும், கைபரில் கிடைத்த ஐந்தில் ஒரு பகுதி நிதியில் மீதமிருந்ததிலிருந்தும் தமக்கு சேர வேண்டிய வாரிசு உரிமையைக் கேட்டார்கள். அதற்கு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “இறைத்தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், (நபிமார்களான) எங்கள் சொத்துகளுக்கு வாரிசாக எவரும் வர முடியாது. நாங்கள் விட்டுச் செல்பவை எல்லாம் தர்மம் செய்யப்பட வேண்டியவை ஆகும். இச் சொத்திலிருந்து முஹம்மதின் குடும்பத்தினர் சாப்பிடுவார்கள்” என்று கூறியுள்ளார்கள். (எனவே) அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் இதில் எந்த மாற்றத்தையும் செய்ய மாட்டேன்” என்று கூறிவிட்டார்கள்.

இதனால் சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது மனவருத்தம் கொண்டு, தாம் இறக்கும் வரையில் அவர்களுடன் பேசாமலே இருந்தார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத் ஆன பிறகு, சுவனத் தலைவியார் ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஆறுமாத காலம் வரை மட்டுமே வாழ்ந்தார்கள். சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வபாத் ஆன போது, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், (சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் இறப்பதற்கு முன் கேட்டுக் கொண்டபடி) இரவு நேரத்திலேயே ஜன்னத்துல் பகீயில் நல்லடக்கம் செய்தார்கள். அதுபற்றி கலீஃபா ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்குக் கூட தெரிவிக்கவில்லை! சுவனத் தலைவியாரின் ஜனாஸா தொழுகையையும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களே நடத்தினார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்திலும், சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் வாழ்ந்திருந்த காலத்திலும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீது மக்கள் மிகுந்த மரியாதைக் கொண்டிருந்தார்கள். ஆனால், அவ்விருவரும் வபாத் ஆன பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீதிருந்த தனிமரியாதை குறையத் தொடங்கியது. இந்த மாற்றத்தை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களும் புரிந்துக் கொண்டார்கள்.

எனவே, ஆறு மாதங்களுக்குப் பிறகு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பைஅத் செய்ய நாட்டம் கொண்டார்கள். அதன்படி ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தனியாக தம்மிடத்தில் அழைத்தார்கள். ஆயினும், ஹழரத்

உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனியாக செல்வதை விட்டும் தடுக்க முயன்றார்கள். ஆயினும் ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனியாகவே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் சென்றார்கள்.

அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அன்புடன் வரவேற்றும், ஏகத்துவ உறுதிமொழியைக் கூறியும், அல்லாஹ்வைப் போற்றியும் மகிழ்ந்தார்கள். பிறகு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம், "நாங்கள் தங்களின் சிறப்பையும், அல்லாஹ் தங்களுக்கு வழங்கியிருக்கும் கிலாஃபத்தையும் ஏற்றுக் கொள்கிறோம். அல்லாஹ் தங்களுக்கு வழங்கியிருக்கும் கிலாஃபத்து பற்றி நாங்கள் பொறாமைப்பட வில்லை. ஆயினும் கிலாபத்து விஷயத்தில் எங்களிடம் ஆலோசனை கலக்காமல் தன்னிச்சையாக செயல்பட்டு விட்டீர்கள். ஆனால், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் எங்களுக்கு இருக்கும் உறவின் காரணத்தினால் கிலாஃபத் விஷயத்திலும் எங்களுக்கும் பங்கு உண்டு என நாங்கள் நம்பினோம்" என்று கூறினார்கள்.

அதைக் கேட்டு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கண்ணீர் விட்டு அழுதார்கள். பிறகு, "என்னுடைய உயிர் எவன் கையில் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! என்னுடைய உறவினர்களுடன் உறவைப் பேணி வாழ்வதை விட, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உறவினர்களே எனக்கு மிகவும் உவப்பானவர்கள்" என்று கூறினார்கள்.

அன்று லுஹ்ருத் தொழுகை முடிந்த பிறகு ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மிம்பர் மீதேறி ஏகத்துவ உறுதி மொழி, இறைவனையும் புகழ்ந்தார்கள். பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் எழுந்து, இஸ்திக்ஃபார் ஓதினார்கள். ஏகத்துவ உறுதி மொழியையும் கூறினார்கள். ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் சிறப்புகளையும் கூறினார்கள். பிறகு, ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பைஅத் செய்வதில் கால தாமதம் ஆனதற்குக் காரணம், அன்னார் மீது கொண்ட பொறாமையோ, அல்லாஹ் அன்னாருக்கு வழங்கிய சிறப்புகளை நிராகரித்தோ அல்ல என்பதை உறுதிப்படுத்திக் கூறினார்கள். பிறகு, கலீஃபாவை தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தாராகிய எங்களுக்கும் பங்கு உண்டு என்று நாங்கள் கருதியதேயாகும்.

ஆனால், அழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் எங்களிடம் கேட்காமலேயே தன்னிச்சையாக செயல்பட்டு விட்டார்கள். அதனால் எங்களுக்கு மனவருத்தம் ஏற்பட்டது" என்றும் கூறினார்கள்.

பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கரங்கள் தொட்டு பைஅத்தும் செய்தார்கள். அதனால் முஸ்லிம்கள் மகிழ்ச்சியடைந்து (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பார்த்து) "நீங்கள் சரியாகவே சொன்னீர்கள்" என்றும் கூறினார்கள். அதன் பிறகு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மக்களிடையே மீண்டும் நெருக்கமானவர்களாக ஆகிவிட்டார்கள். (புகாரீ 4240, 4241, அஸ்ஸவாயிகுல் முஹர்ரிகா, பக்கம் 71)

ஹழரத் இமாம் ஹாகிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், முதலாம் கலீஃபா ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இரண்டு ஆண்டுகள் மற்றும் ஏழு மாதங்கள் வரை ஆட்சி புரிந்தார்கள். (தாரீகே குலஃபா, பக்கம் 91)

## இரண்டாம் கலீஃபா:

இரண்டாம் கலீஃபா ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் 'ஆமுல் ஃபீல்' என்னும் யானை ஆண்டின் நிகழ்வுக்குப் பிறகு சுமார் பதின் மூன்று ஆண்டுகள் கழித்துப் பிறந்தார்கள். ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நாற்பது ஆண்களும் பதினோரு பெண்களும் இஸ்லாத்தை ஏற்ற பிறகு இஸ்லாத்தில் இணைந்தார்கள். ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நுபூவத்தின் ஆறாம் ஆண்டு துல் ஹஜ் மாதம், தமது இருபத்தாறாம் வயதில் இஸ்லாத்தை ஏற்றார்கள் என்று ஹழரத் இப்னு ஸஅத் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள். ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தில் இணைந்த பிறகு, இஸ்லாம் மார்க்கம் வெளிப்படையாகவும், வேகமாகவும் பரவியது. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் 'அஷ்ரத்துல் முபஷ்ஷரா (சுவன நற்பேறு பெற்ற உத்தமர்கள்) என்று சிறப்பிக்கப்பட்ட பத்து பேர்களில் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஒருவர் ஆவார். ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் 539 ஹதீஸ்களை அறிவித்திருக்கிறார்கள். (தாரீகே குலஃபா, பக்கம் 112)

'**தாரீகே குலஃபா**' என்னும் நூலில் ஹாபிழ் ஜலாலுத்தீன் அப்துர்ரஹ்மான் பின் அபூபக்கர் ஸுயூத்தி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இரண்டாவது கலீஃபா தேர்ந்தெடுக்கப்பட்டது பற்றி, ஹழரத் இமாம் வாகதீ ரஹ்மதுல்லஹி அலைஹி அவர்கள் வாயிலாக இவ்விதம் கூறியுள்ளார்கள்.

ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு நோய் முற்றிய போது அவர்கள் ஹழரத் அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப்

ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தம்மிடம் அழைத்தார்கள். அவரிடம் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவர், "தாங்கள் அவர் மீது கொண்டிருக்கும் கருத்தை விட, நான் நான் அவர் மீது உயர்ந்த கருத்தை கொண்டுள்ளேன்" என்று கூறினார்கள்.

பிறகு ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து, அவரிடம் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவர், "அவரைப் போன்ற சிறந்ததொரு மனிதர் நம்மிடையே வேறு எவரும் இல்லை" என்று கூறினார்.

பிறகு முஹாஜிர்களையும் அன்ஸார்களையும் அழைத்து மஷ்வரா செய்தார்கள். அவர்களைத் தொடர்ந்து ஹழரத் ஸயீத் பின் ஜைத் மற்றும் உஸைத் பின் ஹுளைர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரிடமும் மஷ்வரா செய்தார்கள்.

அதனைத் தொடர்ந்து ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து ஒரு வஸீயத்து (மரண சாசனம்) எழுதும்படி கூறினார்கள். அது, "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். இந்த வஸீயத்து நாமாவை அபூபக்கராகிய நான் என்னுடைய மரண நேரத்தில், இந்த உலகை விட்டும் பிரியும் வேளையில் எழுதச் செய்துள்ளேன். மரண வேளை என்பது மிகவும் இக்கட்டான ஒரு நேரமாகும். அச்சமயம் ஒரு காபிர் கூட ஈமான் கொள்ள நாட்டம் கொள்வான். பொய்யனும் அவ்வேளையில் உண்மையையே கூறுவான். நான் எனக்குப் பிறகு ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கலீஃபாவாக தேர்ந்தெடுத்துள்ளேன். மக்களே! நீங்கள் அவருடைய கட்டளைக்கு கீழ்ப்படிந்து நடங்கள். அவர், அல்லாஹ்வுக்கும், அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கும், இஸ்லாம் மற்றும் உங்களுக்கும் பணிவிடை செய்திருக்கிறார். அவர் நீதி தவறாமல் நடந்து கொள்வார் என்னும் நம்பிக்கை எனக்கு இருக்கிறது. அவர் தவறுவாயின் அதற்கான பொறுப்பு அவரையே சேறும். மேலும் உங்கள் அனைவர் மீதும் அல்லாஹ்வின் ஸலாமத்தும், ரஹ்மத்தும் உண்டாவதாக!".

இந்த வஸீயத்து எழுதி முடித்த பிறகு, அதை ஒரு உரையில் வைத்து முத்திரையும் இடப்பட்டது. அது ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டது. அதன் பிறகு மக்கள் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பைஅத் செய்யத் தொடங்கினர். (தாரீகே குலஃபா, பக்கம் 88)

இப்படியாக இஸ்லாத்தில் இரண்டாம் கலீஃபா தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர்கள், ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு

அவர்கள் உயிரோடு இருக்கும் போதே, ஜமாதுல் ஆகிர் மாதம், ஹிஜ்ரி பதின்மூன்றில் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி பதின்மூன்று, ஜமாதுல் ஆகிர் மாதம் 22ம் நாள் வபாத் ஆன நாளில், ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கலீஃபா ஆனார்கள், என்று ஹழரத் இமாம் ஜுஹ்ரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஹிஜ்ரி பதினான்காம் ஆண்டில் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமஷ்க், பஸரா, அய்லா போன்ற நாடுகளை வெற்றிக் கொண்டார்கள். அதே ஆண்டில் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜமாஅத்துடன் தராவீஹ் தொழுகையை தொழவைத்தார்கள். (தாரீக் குலஃபா, பக்கம் 134)

ஹிஜ்ரி பதினைந்தில், 'உர்தன்' வெற்றிக் கொள்ளப் பட்டது. 'தப்ரியா' அமைதி வழியில் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வந்தது. அதே ஆண்டில் ரோமானியர்களுடன் யர்முக் போர் நடைப்பெற்றது. காதிஸிய்யாப் போரும் நடைப் பெற்றது. ஹழரத் இப்னு ஜரீர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், இதே ஆண்டில் ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூபாவை ஒரு நகரமாக விரிவுபடுத்தினார்கள்.

ஹிஜ்ரி பதினாரில் மதாயின், அஹ்வாஸ் ஆகியவை வெற்றிக் கொள்ளப் பட்டன. அதே ஆண்டில் ஜலூலா போர் நடைப் பெற்றது. இதில் அரசர் யஸ்தஜிர்த் தோல்வியடைந்தார். அதே ஆண்டில் பைத்துல் முகத்தஸ் வெற்றிக் கொள்ளப்பட்டது. ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜாபியா என்னும் இடத்தில் பிரசித்தமான குத்பா உரையை ஆற்றினார்கள். அதே ஆண்டில் ஹலப், அந்தாகியா, போன்றவையும் இஸ்லாமிய ஆட்சியின் கீழ் வந்தன.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் ஆலோசனைப்படி, ஹைஜ்ரி 16, ரபீஉல் அவ்வல் மாதம் முதல் "ஹிஜ்ரி" நாள் காட்டிக் கணக்கு தொடங்கப் பட்டது.

ஹிஜ்ரி பதினேழில் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்]ஹு அவர்கள் மஸ்ஜிதுந் நபவியை விரிவுபடுத்தினார்கள். அதே ஆண்டில் ஹிஜாஸ் பகுதியில் பஞ்சம் ஏற்பட்டது. ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் சேர்ந்து இஸ்திஸ்கா (மழை வேண்டி தொழுகை) தொழுதார்கள். அப்போது அவர்களின் தோள்களில் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் திருப் போர்வை இருந்தது.

ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கரங்களைப் பிடித்து

வானத்தின் பக்கம் உயர்த்தியவராக, “யா அல்லாஹ்! நாங்கள் உனது ஹபீப் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் சிறிய தகப்பனாரின் வஸீலாவைக் கொண்டு கேட்கிறோம். யா அல்லாஹ்! பஞ்சத்தைப் போக்குவாயாக. (மழை) நீரை பொழிவாயாக!” என்று துஆ செய்தார்கள். அவர்கள் அங்கிருந்து புறப்படும் முன்பே மழை பொழியத் தொடங்கியது. பல நாட்கள் தொடர்ந்து மழை பொழிந்தது.

ஹிஜ்ரி பதினெட்டில் ஜுந்து, நேஷாபூர் ஆகியவை வெற்றிக் கொள்ளப் பட்டன. ஹல்வான் மீது ஆக்கிரமிப்பும் செய்யப்பட்டது.

ஹிஜ்ரி இருபதில் ரணகளத்திற்குப் பிறகு மிஸர் (எகிப்து) முழுவதும் வெற்றி கொள்ளப் பட்டது. அதே ஆண்டில் ரோமானிய பேரரசர் கைஸர் மரணம் அடைந்தார். அதே ஆண்டில் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கைபர் மற்றும் நஹர்வானில் இருந்த யூதர்களை நாடுகடத்தினார்கள்.

ஹிஜ்ரி இருபத்திரண்டில் அஸர்பைஜான், ஹம்தான் போன்ற நகரங்கள் வெற்றிக் கொள்ளப் பட்டன. அதே ஆண்டின் கடைசியில் புனித ஹஜ்ஜை நிறைவேற்றிய பிறகு ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு ஷஹீத் ஆனார்கள்.

ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆட்சிக் காலத்தில் பல்வேறு விஷயங்கள் முதன் முதலாக தொடங்கப் பட்டன.

1.ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் முதன் முதலாக ‘அமீருல் முஃமினீன்’ என்று அழைக்கப்பட்டார்கள்.

2.ஹிஜ்ரி காலக் கணக்கை முதன் முதலாக தொடங்கினார்கள்.

3.பைத்துல்மாலை ஏற்படுத்தினார்கள்.

4.புனித ரமலான் மாதத்தில் தராவீஹ் தொழுகையை ஜமாஅத்துடன் தொழும் சுன்னத்தான நடைமுறையை ஏற்படுத்தினார்கள்.

5.மது குடிப்பவர்களுக்கு 80 கசையடியை தண்டனையாக ஏற்படுத்தினார்கள்.

6.முத்ஆவை வெளிப்படையாக ஹராம் ஆக்கினார்கள்.

7.ஜனாஸா தொழுகையில் அனைவருமே நான்கு தக்பீர்களை கூறும்படிச் செய்தார்கள்.

8.அலுவலகங்கள் திறக்கப்பட்டன.

9.ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை "அதாலல்லாஹு பகாஅஹ்" என்றும் "அய்த கல்லாஹு" என்றும் கூறினார்கள்.

10.ஸதகா மூலம் வசூலிக்கப்பட்ட பொருளை இஸ்லாமிய பணிகளுக்கு பயன் படுத்தப்படுவதை நிறுத்தினார்கள்.

11.குதிரைகளுக்கும் ஜகாத்து வசூலிக்கச் செய்தார்கள்.

12.ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், புனித ரமலான் மாதத்தில் மஸ்ஜிதுகளை விளக்குகளால் ஒளிரச் செய்தார்கள். அவ்விதம் ஒளிருவதைக் கண்டு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் எவ்விதம் மஸ்ஜிதுகளை விளக்குகளால் ஒளிரச் செய்தாரோ, அதைப் போலவே அவருடைய கப்ரையும் அல்லாஹ் ஒளிரச் செய்வானாக!" என்று துஆ செய்தார்கள். (தாரீக் குலஃபா)

## மூன்றாம் கலீஃபா:

மூன்றாம் கலீஃபாவான ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் 'ஆமுல் பீல்' என்னும் யானைப்படை ஆண்டின் ஆறாவது வருடத்தில் புனித மக்கா நகரில் பிறந்தார்கள். ஹழரத் உஸ்மான் அவர்களும் தொடக்க காலத்திலேயே இஸ்லாத்தை ஏற்றார்கள். அவர்களுக்கு இஸ்லாமிய அழைப்பை ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களே விடுத்தார்கள். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் இரண்டு முறை ஹிஜ்ரத் புரிந்தார்கள். ஒன்று, ஹபஷாவிற்கு. இரண்டு, மதீனாவிற்கு.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது திருமகளார் ஹழரத் ருகையா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை, ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு நிகாஹ் செய்து வைத்தார்கள். ஹழரத் ருகையா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், பத்ரு போரின் போது வபாத் ஆனார்கள். அதன் பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது இன்னொரு மகளான ஹழரத் உம்மு குல்தூம் ரலியல்லாஹு அன்ஹா அவர்களையும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கே நிகாஹ் செய்து வைத்தார்கள். அவர்களும் ஹிஜ்ரி 9ல் புனித மதீனா நகரில் வபாத் ஆனார்கள்.

உலமாக்கள் கூறுகிறார்கள், எந்த ஒரு மனிதரும், எந்த ஒரு நபியின் இரண்டு புதல்வியரை மணம் புரிந்தது கிடையாது. ஆயினும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களின் இரண்டு

புதல்வியரை மணந்தார்கள். அதனால் அவர், 'துன்னுரைன்' (இரண்டு ஒளிகளை உடையவர்) என்று சிறப்பித்துக் கூறப்படுகிறார். (தாரீக் குலஃபா, 152)

'அஷ்ரத்துல் முபஷ்ஷரா' (சுவன நற்பேறு பெற்ற உத்தமர்கள்) என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் சிறப்பிக்கப் பட்ட பத்து நபர்களில் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஒருவர் ஆவார். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் திருக் குர்ஆனை ஒன்று திரட்டியவர் ஆவார். அதனால் அவர் 'ஜாமிஉல் குர்ஆன்' என்றும் சிறப்பிக்கப் படுகிறார். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் 146 ஹதீஸ்களை அறிவித்திருக்கிறார்கள்.

ஸஹீஹ் புகாரீ ஷரீஃபில் ஹழரத் அம்ர் இப்னு மைமூன் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அறிவிக்கிறார்கள், "ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குத்தப்பட்ட நாளில், அதிகாலைத் தொழுகைக்காக நான் தொழுகை அணியில் நின்றுக் கொண்டிருந்தேன். எனக்கும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் இடையில் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தவிர வேறு எவரும் இருக்கவில்லை.

ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மக்களுக்கு தொழுகை நடத்துவதற்கு முன்பாக மக்களை நோக்கி, "சீராக நில்லுங்கள்" என்று கூறுபவராக இருந்தார்கள். பிறகு முன் சென்று தொழுகைக்காக தக்பீர் தஹ்ரீமா கூறுவார்கள். ஹழரத் அவர்கள் முதல் ரக்அத்தில் ஸூரத்து யூஸுஃப் அல்லது ஸூரத்து நஹ்ல் போன்ற ஸூராக்களை ஓதுவார்கள்.

சம்பவ தினத்தன்று அப்போதுதான் தக்பீர் கூறியிருப்பார்கள், அப்போது 'அபூ லுஸலுஆ ஃபைரோஸ்' என்பவன் பிச்சுவாக் கத்தியால் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை குத்திவிட்டான். மேலும் தனக்கு வலப்பக்கமும், இடப்பக்கமும் இருந்தவர்களையும் கத்தியால் குத்தியபடியே ஓடத் தொடங்கினான். அந்த தாக்குதலில் பதின்மூன்று பேர் காயமடைந்தனர். அவர்களில் ஏழு பேர் இறந்துவிட்டனர். இறுதியில் அவனும் தற்கொலை செய்துக் கொண்டான்.

தொழுகையை நடத்திக் கொண்டிருந்த ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கத்திக் குத்து பட்ட நிலையிலும் தொழுகை தடைபடக் கூடாது என்று கவலைப் பட்டவரக, ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கரத்தைப் பிடித்து, தொழுகையை தொடர்ந்து நடத்த தம்முடைய இடத்தில் முன்னிறுத்தினார்கள். ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு

அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் சிறிய ஸூராக்களை ஓதி தொழுகையை முடித்தார்கள்.

அப்போது ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “என்னைக் கொலை செய்தவன் யார் என்று பாருங்கள்?” என்று கூறினார்கள். அப்போது ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “முகீராவின் அடிமைதான் உங்களைக் குத்தியது” என்று கூறினார்கள். உடனே ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “தன்னை ஒரு முஸ்லிம் என்று சொல்லிக் கொள்ளும் ஒருவரின் கைகளால் எனக்கு மரணம் நேரும்படி செய்துவிடாத அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்” என்று கூறினார்கள்.

பிறகு, குற்றுயிராக இருந்த ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை சுமந்துக் கொண்டு அன்னாரின் வீட்டிற்கு கொண்டு சென்றனர். அங்கு அவருக்கு பேரீச்சம் பழச்சாறு கொடுக்கப்பட்டது. அது வயிற்றில் ஏற்பட்டிருந்த காயத்தின் வழியே வெளியேறியது! அப்போது மக்கள், அவர்கள் இறக்கும் நிலையை அடைந்துவிட்டார்கள் என்பதை அறிந்துக் கொண்டனர். அப்போது ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது புதல்வரிடம்,”அப்துல்லாஹ்வே! என் மீது எவ்வளவு கடன் இருக்கிறது என்று பார்” என்று கூறினார்கள். அவ்விதம் கணக்கிட்டுப் பார்த்த போது அது எண்பதாயிரம் திர்ஹம் அளவிற்கு இருந்தது. அதை அடைப்பதற்கான வழிகளை கூறினார்கள்.

பிறகு தமது புதல்வரிடம், “மகனே! உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் சென்று, முதலில் எனது ஸலாமைக் கூறு. பிறகு, உமர் தமது இரு தோழர்கள் அடக்கம் செய்யப்பட்டுள்ள அறையில் தம்மையும் அடக்கம் அடக்கம் செய்ய அனுமதி கோருகிறார்” என்று சொல் என்று கூறினார்கள். அவ்விதமே ஹழரத் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் சென்று அனுமதி கோரினார்கள். அதற்கு உம்முல் முஃமினீன் அவர்கள், “எனக்காக அந்த இடத்தை ஒதுக்கிக் கொள்ள நினைத்திருந்தேன். இப்போது அங்கு அடக்கம் செய்யப்படுவதற்கு என்னை விட அவருக்கே முதலிடம் கொடுத்து விட்டேன். அவரையே அந்த இடத்தில் அடக்கம் செய்துக் கொள்ளுங்கள்” என்று கூறினார்கள். ஹழரத் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது தந்தையாரிடம் வந்து, இதைக் கூறினார்கள். உடனே ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! இதுதான் எனக்கு கவலையளித் துக்கொண்டிருந்தது. இப்போது என் ஆசை நிறைவேறிவிட்டது” என்று சந்தோஷமாகக் கூறினார்கள்.

அப்போது அங்கிருந்த சிலர், “இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! தங்களுக்கு ஒரு பிரதிநிதியை அறிவித்து, இறுதி

உபதேசமும் செய்யுங்கள்” என்று கூறினார். அதற்கு அவர்கள், “அண்ணல் நபி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவரைக் குறித்து திருப்தியடைந்திருந்த நிலையில் இறந்தார்களோ அந்த குழுவினர்தாம் புதிய கலீஃபாவை தேர்வு செய்ய வேண்டும். அந்த குழுவில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஸுபைர் பின் அவ்வாம் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஸஅத் இப்னு அபீ வக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய ஆறு பேர் அடங்குவர்” என்று கூறினார்கள்.

ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கத்திக்குத்துப் பட்டு மூன்று நாட்களுக்குப் பிறகு வபாத் ஆனார்கள். அவர்களை அடக்கம் செய்து முடித்த போது, அந்த ஆறு பேர் கொண்ட ஆலோசனைக் குழுவினர் அடுத்த கலீஃபாவை தேர்வு செய்ய ஓரிடத்தில் கூடினார்கள். அப்போது ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “போட்டியை குறைப்பதற்காக கலீஃபாவை தேர்வு செய்யும் உரிமையை மற்ற மூன்று பேர்களிடம் ஒப்படையுங்கள்” என்று கூறினார்.

அப்போது ஹழரத் ஸுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “என்னுடைய அதிகாரத்தை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு உரியதாக நான் ஆக்கிவிட்டேன்” என்று கூறினார்.

ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “என்னுடைய அதிகாரத்தை நான் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு உரியதாக ஆக்கி விட்டேன்” என்று கூறினார்.

ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “என்னுடைய அதிகாரத்தை நான் ஹழரத் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் அவர்களுக்கு உரியதாக ஆக்கிவிட்டேன்” என்று கூறினார்.

அப்போது ஹழரத் அப்துர் ரஹ்மான் பின் அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் நோக்கி, “உங்கள் இருவரில் இந்த அதிகாரத்திலிருந்து விலகிக் கொள்ள முன் வருகிறவரிடம் இந்த பொறுப்பை ஒப்படைப்போம்” என்று கூறினார். ஆயினும் அவ்விருவரும் மௌனமாக இருந்தார்கள்.

உடனே ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “கலீஃபாவை தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தை நீங்கள் இருவரும் என்னிடம் ஒப்படைக்கிறீர்களா?” என்று கேட்டார்.

அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் சம்மதித்தனர்.

அப்போது ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் கரத்தைப் பற்றி, "உங்களுக்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் நெருங்கிய உறவுமுறை இருக்கிறது. மேலும் இஸ்லாத்தில் உங்களுக்கு மிகுந்த சிறப்பும் உண்டு. உங்களை நான் கலீஃபாவாக நியமனம் செய்தால், மக்களிடம் நீங்கள் நீதியுடன் நடந்து கொள்வீர்கள். நான் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹுஅன்ஹு அவர்களை கலீஃபாவாக தேர்வு செய்தால், நீங்கள் அவருக்கும் கட்டுப்பட்டு நடப்பீர்கள்" என்று கூறினார்.

பிறகு ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தனியே அழைத்து, அவரிடமும் இவ்விதமே கேட்டார். பிறகு, ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கையைப் பிடித்து அவர்களுக்கு பைஅத் (விசுவாசப் பிரமாணம்) செய்து கொடுத்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பைஅத் செய்தார்கள். அவர்களைத் தொடர்ந்து மதீனா வாசிகளும் பைஅத் செய்தார்கள். இப்படியாக மூன்றாம் கலீஃபா தேர்வு செய்யப் பட்டார்! (ஸஹீஹ் புகாரீ 3700)

மூன்றாவது கலீஃபா தேர்ந்தெடுக்கப் பட்டது பற்றி முஸ்னத் அஹ்மதில் ஹழரத் அபூவாயில் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "நான் ஹழரத் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம், நீங்கள் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஏன் பைஅத் செய்தீர்கள்? ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு ஏன் பைஅத் செய்யவில்லை?" என்று கேட்டேன். அதற்கு அவர், "நான் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம், உங்களுக்கு நாங்கள் பைஅத் செய்யவில்லையானால், நீங்கள் யாருக்கு பைஅத் செய்வீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு அவர், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு பைஅத் செய்திருப்பேன்" என்று கூறினார்.

பிறகு நான், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் சென்று, "நாங்கள் உங்களுக்கு பைஅத் செய்யவில்லை என்றால், நீங்கள் யாருக்கு பைஅத் செய்வீர்கள் என்று கேட்டேன். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு" என்று கூறினார்கள். பிறகு நான் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து ஆலோசனை செய்தேன். ஹழரத் ஸஅத்

ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் அழைத்து ஆலோசனை செய்தேன். மற்றுமுள்ள முக்கிய பிரமுகர்களையும் அழைத்து ஆலோசனை செய்தேன். அவர்களில் பலரும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையே ஆதரித்தார்கள்." என்று கூறினார்கள். (தாரீக் குலஃபா, பக்கம் 158) இந்த முறையில்தான் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன் ஹு அவர்கள் மூன்றாவது கலீஃபாவாக தேர்வு செய்யப் பட்டார்கள்.

தொடக்கத்தில் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஸஹாபாக்களின் ஆதரவோடு சிறப்பாக ஆட்சி செய்தார்கள். ஆனால், ஹிஜ்ரி 25ல், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், கூபாவின் கவர்னராக இருந்த ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை நீக்கிவிட்டு, வலீத் பின் உக்பா பின் லயீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கவர்னராக நியமனம் செய்தார்கள். அவர் நபித் தோழராக இருந்ததுடன், தாய்வழியில் சகோதரராகவும் இருந்தார். எனவே மக்கள் இந்த நியமனம் பற்றி ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது முதன் முதலாக குற்றம் சாட்டினார்கள். அதற்கு ஏற்ப, வலீத் அவர்கள், ஒருநாள் மதுவின் போதையிலே ஃபஜர் தொழுகையை நான்கு ரக்அத்துகளாக தொழுதார்கள். தொழுது முடித்த பிறகு "நீங்கள் விரும்பினால் இன்னும் கூட தொழவைக்கிறேன்" என்று கூறினார். (தாரீக் குலஃபா, பக்கம் 159)

ஹிஜ்ரி 27ல், கப்ரஸை (சைப்ரஸ்) வெற்றி கொள்ளப்பட்டது. ஆசியாவின் அர்ஜான் வெற்றி கொள்ளப் பட்டது. தொடர்ந்து ஆப்ரிக்காவில் கடுமையானபோர் நடந்தது. அதன் முக்கிய பகுதிகள் யாவும் வெற்றிக் கொள்ளப் பட்டன.

ஹிஜ்ரி 29ல், அஸ்தகர், கஸா போன்ற பகுதிகள் வெற்றிக் கொள்ளப் பட்டன. அதே ஆண்டில் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், மஸ்ஜிதுந் நபவியை விஸ்தரிக்கும் பணியை மேற்கொண்டார்கள்.

ஹிஜ்ரி 30ல், குராஸான்,நேஷாபூர், தூஸ் போன்றவையும் வெற்றிக் கொள்ளப்பட்டன.

கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய ஆட்சிக் காலத்தில் பல்வேறு விஷயங்கள் தொடங்கி வைக்கப்பட்டன. உதாரணமாக, 1.ஜாகீர் மானியங்கள் ஏற்படுத்தப்பட்டன. 2.விலங்கினங் களுக்காக மேய்ச்சல் நிலங்கள் ஏற்படுத்தப்பட்டன. 3.மஸ்ஜிதுகளில் நறுமணப் பொருட்களை எரிக்கும் வழக்கம் ஏற்படுத்தப்பட்டது.. இதற்காக குங்குமப்பூ பயன்படுத்தப் பட்டது. 4.ஜும்ஆ தொழுகைக்கு முதல் பாங்கு கூறும் முறை

ஏற்படுத்தப் பட்டது. 5.மோதினார்களுக்கு சம்பளம் நிர்ணயிக்கப் பட்டது.

ஹழரத் இமாம் ஜுஹ்ரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் கலீஃபாவாக ஆட்சி புரிந்தார்கள். அதில் முதல் ஆறு ஆண்டுகள் வரை எவ்வித குற்றம் குறைகளுக்கும் இடம் கொடுக்காமல் சிறப்பாக ஆட்சி புரிந்தார்கள்.

ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு அவர்களுடைய ஆட்சிப் போக்கில் மாற்றம் ஏற்பட்டது. தமது உறவினர்களுக்கு கவர்னர் பதவிகளைக் கொடுக்கத் தொடங்கினார். தமது நெருங்கிய நண்பர்களுக்கு உபகாரங்கள் புரிந்தார். ஆப்ரிக்க கவர்னராக இருந்த மர்வான் என்பாருக்கு குமுஸ் தொகையை மன்னித்தார். பைத்துல் மாலிலிருந்து தமது உறவினர்களுக்கு பொருட்களை வாரி வாரி வழங்கினார். கேட்பவர்களுக்கு, “அல்லாஹ் உறவினர்களுக்கு கொடுக்கும்படி உத்தரவிட்டுள்ளான்” என்று சமாதானம் கூறினார். இந்த கூற்றை மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஹழரத் இப்னு ஸஅத் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களும் இவற்றை பதிவு செய்துள்ளார்.

ஹழரத் இப்னு அஸாகிர் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் இமாம் ஜுஹ்ரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் வாயிலாக கூறுகிறார்கள், “நான் ஹழரத் ஸயீத் இப்னு முஸய்யப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம், “ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கொலை செய்யப்படுவதற்கான காரணம் என்ன?” என்று கேட்டேன். அதற்கு ஹழரத் முஸய்யப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அநியாயமாகக் கொலை செய்யப் பட்டார்கள்.

ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப்பட்டதை ஸஹாபாக்களில் சிலர் விரும்பவில்லை. ஏனெனில், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது முதல் ஆறு ஆண்டு ஆட்சிக் காலத்தில் ஸஹாபா பெருமக்களை கலந்தாலோசித்து எந்த முடிவையும் எடுத்தார்கள். ஸஹாபா பெருமக்களையே கவர்னர்களாகவும், ஹாகிம்களாகவும் நியமித்தார்கள்.

ஆனால், கிலாஃபத்தின் கடைசி ஆறு ஆண்டுகளில், ஸஹாபா பெருமக்கள் கவர்னர்களாக இருந்த இடங்களில் தமது சிறிய தகப்பனாரின் புதல்வர்களை கவர்னர்களாக நியமித்தார். ஹழரத் அப்துல்லாஹ் பின் ஸர்ஆ அவர்களை மிஸரின் கவர்னராக நியமனம் செய்தார். அவர் பதவியேற்ற இரண்டே ஆண்டுகளில் அவர்மீது பல்வேறு புகார்கள் வரத் தொடங்கின. அவரை பதவியிலிருந்து நீக்க கோரிக்கைகள் அனுப்பப்பட்டன. ஆயினும் எவ்வித நடவடிக்கையும்

அவர்மீது எடுக்கப்படவில்லை. அதனால் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அபூதர் அல் கிஃபாரி ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அம்மார் பின் யாஸிர் ரலியல்லாஹு அன்ஹு போன்றவர்கள் மிகுந்த மனவருத்தமடைந்தார்கள். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அளித்து வந்த ஆதரவையும் நிறுத்திக் கொண்டனர்.

தமது கோரிக்கைகள் ஏற்கப்படாததையும், அப்துல்லாஹ் பின் ஸர்ஆவின் கொடுமைகள் நாளுக்கு நாள் அதிகரிப்பதையும் கண்ட மிஸர் நாட்டு மக்கள், கலீஃபாவிடம் நேரில் வந்தும் முறையிட்டார்கள். அப்போது கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அப்துல்லாஹ் இப்னு ஸர்ஆ அவர்களுக்கு கடிதம் ஒன்றை எழுதி, மிஸர்வாசிகளிடம் கொடுத்து அனுப்பினார்கள்.

கலீஃபாவின் கடிதத்தைப் பெற்றுக் கொண்ட அப்துல்லாஹ் பின் ஸர்ஆ அதனை அமுல்படுத்தாது, கலீஃபாவிடம் சென்று, தம்மீது புகார் அளித்தவர்களை எல்லாம் கொன்று குவித்தார். அதனைத் தொடர்ந்து, சுமார் எழுநூறு மிஸர்வாசிகள் புனித மதீனா நகருக்கு வந்து, ஸஹாபா பெருமக்களை சந்தித்தார்கள். முறையீடும் செய்தார்கள். உடனே, ஹழரத் தல்ஹா பின் உபைதுல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சென்று கடிந்துக் கொண்டார்கள். உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஃஹு அன்ஹா அவர்கள், "மிஸருடைய கொடுங்கோலன் கவர்னரை நீக்கக் கோறி ஸஹாபா பெருமக்கள் கூறியும் நீங்கள் நடவடிக்கை எடுக்காதது வருத்தம் அளிக்கிறது. அந்த கவர்னர் மிஸர்வாசிகளையும் கொன்று குவித்திருக்கிறான். இனியாவது கவர்னர் மீது நடவடிக்கை எடுக்கவும்" என்று கூறியனுப்பினார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், நேரிடையாகவே கலீஃபாவிடம் சென்று, "மிஸர்வாசிகள் உங்களிடம் ஒரு கொடுங்கோலன் பற்றி முறையீடு செய்திருக்கிறார்கள். அவனோ கொலைகாரனாக இருக்கிறான். அவனை பதவியிலிருந்து நீக்கியும், அவன் மீது விசாரணை நடத்தியும் மிஸர்வாசிகளுக்கு நீதீ வழங்குங்கள்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

அப்போது கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அங்கு குழுமியிருந்த மிஸர்வாசிகளிடம், "நீங்களே ஒரு கவர்னரை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். நான் அவரையே மிஸருடைய கவர்னராக நியமித்து உத்தரவு பிறப்பித்துவிடுகிறேன்" என்று கூறினார். அதன்படி மிஸர்வாசிகள் ஒன்று கூடி, ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை மிஸருடைய கவர்னராக தேர்வு செய்தார்கள். கலீஃபா அவர்கள், அப்துல்லாஹ் பின் ஸர்அவை கவர்னர் பதவியிலிருந்து நீக்கியும், ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு

அவர்களை புதிய கவர்னராக நியமித்தும் ஃபர்மான் உத்தரவு பிறப்பித்தார்கள்.

உத்தரவைப் பெற்றுக் கொண்ட மிஸர்வாசிகள், தங்களது புதிய கவர்னர் ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் மிஸர் நோக்கிப் புறப்பட்டார்கள். மிஸரின் நிலைமையை ஆய்வு செய்வதற்காக முஹாஜிர்களின் ஒரு குழுவும், அன்ஸார்களின் ஒரு குழுவும் அவர்களுடன் சேர்ந்துக் கொண்டது. அவர்கள் அனைவரும் புனித மதீனாவிலிருந்து சுமார் மூன்று நாள் பயணதூரத்தில் சென்றுக் கொண்டிருந்தார்கள். அப்போது-

ஒரு ஒட்டக வீரன் மிக வேகமாக அவர்களின் பக்கம் வருவதைக் கண்டார்கள். அவன் அருகில் வந்ததும் ஸஹாபா பெருமக்கள் அவனை தடுத்து நிறுத்தினார்கள். அவன் கருப்பினத்தானாகவும், கண்களில் அலட்சியமும், யாருக்கும் அஞ்சாத முகத்தையும் பெற்றிருந்தான். அவனைப் பற்றி ஸஹாபா பெருமக்கள் விசாரித்த போது, அவன், “நான் கலீஃபாவுடைய அடிமை. மிக அவசரமாக மிஸர் நாட்டு கவர்னரை சந்திக்க சென்றுக் கொண்டிருக்கிறேன்” என்று கூறினான்.

ஸஹாபா பெருமக்கள் ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைக் காட்டி, “இவர்தான் மிஸருடைய புதிய கவர்னர். அவ்வாறிருக்க நீ யாரிடம் செல்கிறாய்?” என்று கேட்டனர்.

“இவரைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. நான் தேடிச் செல்வது வேறு கவர்னரை” என்றான்.

“என்ன நோக்கத்தோடு செல்கிறாய்?” என்று ஸஹாபா பெருமக்கள் கேட்டனர். அதற்கு அவன், “கலீஃபா அவர்கள் ஒரு கடிதத்தை கொடுத்து அதை கவர்னரிடம் சேர்ப்பிக்கும்படி உத்தரவிட்டுள்ளார்” என்றான். “அந்த கடிதத்தை எங்களிடம் கொடு” என்று ஸஹாபா பெருமக்கள் கேட்டனர். அதற்கு அவன் மறுத்துவிட்டான். ஆயினும் ஸஹாபா பெருமக்கள் அவனையும் அவனது உடமைகளையும் சோதனையிட்டனர். அவன் தண்ணீர்க் குடுவையில் அந்த கடிதத்தை மறைத்து வைத்திருந்தான். அந்த கடிதம் கலீஃபா அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் பின் ஸர்ஆவுக்கு எழுதப்பட்டிருந்தது. கடிதம் மூடப்பட்டு கலீஃபாவின் முத்திரையும் இடப்பட்டிருந்தது.

ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், முஹாஜிர்கள், அன்ஸார்கள் மற்றும் ஸஹாபா பெருமக்கள் முன்னிலையில் கலீஃபாவின் முத்திரையை உடைத்தார். பிறகு, அந்த கடிதத்தை எடுத்துப் அனைவர் முன்பாகவும் படித்தார். அந்த கடிதத்தில் –

“ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் மற்றும் பலான பலான நபர்கள் உம்மிடம் வந்து சேரும் போது, ஏதேனும் காரணம் காட்டியோ, சாக்கு போக்கு சொல்லியோ அவர்கள் அனைவறையும் கொன்றுவிட்டு, புதிய உத்தரவையும் காலாவதியாக்கிவிடுங்கள். வழக்கம் போல நீரும் உமது பணிகளை மேற் கொள்ளுங்கள். மேலும், உங்களை எதிர்ப்பவர்களையும் தண்டித்து, ராஜதந்திரத்துடன் நடந்துக் கொள்ளுங்கள்” என்று எழுதப் பட்டிருந்தது.

அந்த கடிதத்தைப் படித்த அனைவரும் திகைத்து நின்றார்கள்! பிறகு, அனைவரும் உடனடியாக புனித மதீனா நகருக்கு திரும்பிச் செல்வது என முடிவு செய்தனர். அதற்கு முன்பாக, ஹழரத் முஹம்மத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அனைவருக்கும் முன்பாக கடிதத்தை உரையிலிட்டு,முத்திரையையும் சரி செய்து, அதை ஒருவரிடம் கொடுத்து பாதுகாக்கச் செய்தார்கள். பிறகு, புனித மதீனா நோக்கிப் புறப்பட்டார்கள்.

புனித மதீனாவை வந்தடைந்ததும், முதலில் ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம், ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் முன்னணி ஸஹாபா பெருமக்களை ஒன்று கூட்டினார்கள். பிறகு, அவர்கள் அனைவருக்கும் முன்பாக கடிதம் மீண்டும் பிரிக்கப்பட்டு, படித்துக் காட்டப்பட்டது. கருப்பின அடிமைப் பற்றிய அனைத்து விஷயங்களும் கூறப்பட்டது.

அந்த விஷயங்கள் அனைத்தையும் கேள்விப்பட்ட புனித மதீனா வாசிகள் அனைவரும் கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது கடும் கோபமும், ஆவேசமும் கொண்டார்கள். ஒரு குழுவினர் விரைந்து சென்று, கலீஃபாவின் வீட்டை சுற்றி வளைத்துக் கொண்டனர். ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் பொருட்டு பனூ தமீம் கோத்திரத்தினர் மற்றும் சிலர் கலீஃபாவின் இல்லம் நோக்கி விரைந்தனர். புனித மதீனா நகர் முழுவதும் பதற்றமான சூழ்நிலை நிலவியது.

இந்த சூழ்நிலையைக் கண்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், விரைந்து சென்று பத்ரு வீரர்களான ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அம்மார் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் சிலரை கலீஃபாவின் இல்லம் நோக்கி அனுப்பி வைத்தார்கள். பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கலீஃபா எழுதிய கடித,ம், கருப்பின அடிமை, ஒட்டகம் ஆகியவற்றுடன் தாமே கலீஃபாவின் இல்லத்திற்கு நேரில் வந்தார்கள். கலீஃபா அவர்களிடம், “இந்த

கருப்பினத்தான் உங்கள் அடிமையா?” என்று கேட்டார்கள். அதற்கு கலீஃபா, “ஆம்” என்றார்.

“இந்த ஒட்டகமும் உங்களுடையதா?” என்று கேட்டார்கள். அதற்கும் கலீஃபா “ஆம்” என்றார். “அப்படியானால் இந்த கடிதமும் நீங்கள் எழுதியது தானா?” என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கேட்டார்கள். கடிதத்தைப் படித்துப் பார்த்த கலீஃபா அவர்கள், “இல்லை! இறைவன் மீது ஆணையாக, இந்த கடிதத்தை நான் எழுதவில்லை. இந்த கடிதத்தை எழுதும்படி நான் யாரிடமும் கூறவுமில்லை. உண்மையில், இந்த கடிதம் பற்றிய எந்த ஒரு விவரத்தையுமே நான் அறிந்ததில்லை” என்று உறுதியாகக் கூறினார்கள்.

“சரி, கலீஃபாவின் இந்த முத்திரை உங்களுடையதுதானா?” என்று கேட்டார்கள். அதற்கு கலீஃபா, “ஆம்” என்றார்கள். உடனே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், “உங்களுடைய இந்த அடிமை உங்களுடைய ஒட்டகத்தில், உங்களுடைய முத்திரையிட்ட கடிதத்தைக் கொண்டு செல்கிறான். ஆனால் அதுபற்றி எதுவும் தெரியாது எனக் கூறக் காரணமென்ன?” என்று கேட்டார்கள். கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அந்த கடிதம் பற்றிய எந்த விவரமும் தமக்குத் தெரியாது என்று மீண்டும் சத்தியம் செய்தார்கள்.

பிறகு விசாரித்ததில், அந்த கடிதத்தை எழுதியதும், அனுப்பியதும் மர்வான் என்பவனே என்பது தெரியவந்தது. ஆயினும் கலீஃபா மீது கொண்ட கோபம் மக்கள் மனதில் குறையவில்லை. மேலும், அந்த சமயத்தில் மர்வான் கலீஃபா அவர்களின் வீட்டினுள்ளே மறைந்து உட்கார்ந்திருந்தான். அதை அறிந்துக் கொண்ட ஜனங்கள், மர்வானை தங்களிடம் ஒப்படைக்கும்படி கோரினர். ஆனால், கலீஃபா அந்த கோரிக்கையை ஏற்க மறுத்துவிட்டார்கள். அதனால் ஜனங்கள் மட்டும் இன்றி ஸஹாபா பெருமக்களும் கலீஃபா மீது கோபம் கொண்டனர்.

ஆயினும், மர்வானை ஜனங்களிடம் ஒப்படைத்தால், அவர்கள் மர்வானை நிச்சயமாக கொன்றுவிடுவார்கள் என்று கலீஃபா நம்பினார்கள். எனவே, மர்வானை ஜனங்களிடம் ஒப்படைக்க அவர் விரும்பவில்லை. ஆனால், மறுபக்கம், மர்வானை தங்களிடம் ஒப்படைத்தால், அவனிடமிருந்து உண்மையை அறிந்துக் கொள்ளலாமே. ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு போன்ற ஸஹாபியை கொலை செய்ய முயன்றது ஏன் என்பதையும் தெரிந்துக் கொள்ளலாம். அவ்வாறிருக்க அவனை ஏன் தங்களிடம் ஒப்படைக்க கலீஃபா மறுக்கிறார்? ஜனங்கள் இதைக் கூறியே ஆவேசம் கொண்டனர். அவர்களின் கோபம் எல்லை மீறியபோது, அவர்கள் அனைவரும் கலீஃபாவின் இல்லத்தை

முற்றுகையிடத் தொடங்கினர். கலீஃபா மீது தண்ணீரையும் தடை செய்தனர்.

அதனால் துயரமடைந்த கலீஃபா அவர்கள், தமது இல்லத்தின் கூரை மீது ஏறி, "ஜனங்களே! உங்களில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் இருக்கின்றாரா?" என்று கேட்டார்கள். அதற்கு வெளியில் நின்றிருந்த சிலர், "இல்லை" என்று கூறினர். கலீஃபா மீண்டும், "உங்களில் ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு இருக்கிறாரா?" என்று கேட்டார்கள். அதற்கும் "இல்லை" என்று பதில் கூறினார்கள். கலீஃபா அவர்கள் சிறிது நேரம் அமைதியாக இருந்தார்கள். பிறகு, "உங்களில் எவரேனும் ஹஸ்ழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் சென்று, எமக்கு தண்ணீர் புகட்டும்படி கூறுங்கள்" என்று கூறினார்கள்.

புனித மதீனா நகரில் முஸ்லிம்களுக்காக 'பீரே ரூமா' என்னும் கிணரை ஒரு யூதனிடமிருந்து வாங்கி வக்ஃபு செய்த ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தாகத்தால் தவிப்பதை அறிந்த ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஒரு குடுவையில் நீரை நிரப்பி, அதை கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் சேர்ப்பிக்கச் செய்தார்கள். ஆயினும் முற்றுகை யிட்டிருந்தவர்கள் அவர்களை தடுத்து தாக்கினார்கள். இதில் பனூ ஹாஷிம், பனூ உமய்யாவைச் சேர்ந்த பலர் காயமுற்றனர். ஆயினும் தண்ணீரை கலீஃபா அவர்களிடம் சேர்ப்பித்தார்கள்!

ஜனங்கள், கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கொலை செய்வதிலேயே ஆர்வமாக இருப்பதை ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அறிந்து கொண்டனர். எனவே ஜனங்களிடம் சென்று, "ஜனங்களே! நமது கோரிக்கை கலீஃபா அவர்கள் மர்வானை நம்மிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதுதான். அதற்காக நீங்கள் கலீஃபாவையே கொலை செய்ய நாடுவது எவ்விதத்திலும் நியாயமில்லை.. எனவே கலைந்து செல்லுங்கள்" என்று கூறினார்கள். ஆயினும் ஜனங்களின் ஆவேசம் சற்றும் குறையவில்லை!

அந்த நிலையைக் கண்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மிகவும் கவலையுற்றார்கள். தமது இல்லத்திற்கு திரும்பி, தமது திருப் புதல்வர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரையும் அழைத்து, "கண்மணிகளே! நீங்கள் இருவரும் உங்கள் வாட்களை எடுத்துக் கொண்டு கலீஃபாவின் இல்லத்திற்கு விரைந்து செல்லுங்கள். அங்கு நீங்கள் பாதுகாப்பு பணியில் இருக்க வேண்டும். உங்களை மீறி எவரும் கலீஃபாவின் இல்லத்தில் புக அனுமதிக்கக் கூடாது" என்று உத்திரவிட்டு,

அவ்விருவரையும் அனுப்பி வைத்தார்கள். அன்னாரைப் போலவே ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஸஹாபாக்கள் தமது பிள்ளைகளை, "நீங்கள் சென்று, கலீஃபாவை கொலை செய்வதை விட்டும் ஜனங்களை தடுத்து, நேர்வழிப்படுத்துங்கள். கலீஃபாவின் புகழுக்கு இழுக்கு ஏற்படுத்தவும் அனுமதிக்காதீர்" என்று கூறி அனுப்பி வைத்தனர்.

அதைப்போலவே ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் பிற ஸஹாபாப் பெருமக்களின் பிள்ளைகள் அனைவரும் கலீஃபாவின் இல்லத்திற்கு விரைந்து வந்தார்கள். கலீஃபாவின் இல்லத்திற்கு முன் நின்றிருந்தவர்களை அப்புறப்படுத்தி, கலீஃபாவின் வாசலுக்கு முன்பாக பாதுகாப்பாக நின்றுக் கொண்டார்கள்.

## ஷஹாதத்:

தன்னை கொலை செய்ய நடந்த சதியால் கொதித்துப் போயிருந்த ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், கலீஃபா அவர்களை கொலை செய்வதிலேயே தீவிரமாக இருந்தார்கள். முன் வாசலில் பாதுகாவல் தீவிரமாக இருந்ததால், மற்ற மூன்று பக்கங்களில் தாக்குதல் நடத்த அவர் திட்டமிட்டார். அதன்படி, தமது ஆதரவாளர்களுடன் மூன்று பக்கத்திலிருந்தும் கலீஃபாவின் இல்லம் நோக்கி அம்புகளை எய்யச் செய்தார். அவற்றில் ஒரு அம்பு, கதவையும் துளைத்துக் கொண்டு வெளியே பாதுகாவலுக்கு நின்றிருந்த ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைத் தாக்கியது. அதனால் அவர் இரத்தத்தில் நனைந்து போனார். அதே சமயம் கலீஃபாவின் இல்லம் மீது தாக்குதல் நடத்தப்படுவதும் மற்றவர்களுக்கும்தெரியவந்தது.

. அந்த தாக்குதலில் கலீஃபாவின் வீட்டினுள்ளே பதுங்கியிருந்த மர்வானும் காயமுற்றான். வெளியில் நின்றிருந்த ஹழரத் முஹம்மத் இப்னு தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் காயமுற்றார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் அடிமை ஒருவரின் தலையையும் ஒரு அம்பு துளைத்தது.

அந்த களேபரத்தைக் கண்ட ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் காயமுற்றதன் பொருட்டு பனூ ஹாஷிம் கூட்டத்தினர் இங்கு வந்துவிட்டால், நிலைமை இன்னும் விபரீதமாகிவிடும் என்று அச்சம் கொண்டார். எனவே தமக்கு நெருக்கமான ஒருவரின் கரங்களைப் பிடித்து, "ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் காயமுற்ற விவரம் பரவி விட்டால் நிலைமை மோசமாகி விடும். எவவே வாருங்கள். நாம் கலீஃபாவின் வீட்டிற்கு நெருக்கமாக உள்ள வீட்டின் மீது ஏறி, அங்கிருந்து

கலீஃபாவின் வீட்டினுள்ளே குதித்துவிடலாம். உள்ளே கலீஃபா தமது துணைவியாருடன் தனியாக இருக்கிறார். நாம் அவரை மிக எளிதாக கொலை செய்துவிடலாம். விஷயம் வெளியே எவருக்குமே தெரியாது” என்று கூறினார்.

தமது திட்டப்படியே மூவரும் கலீஃபாவின் வீட்டினுள்ளே குதித்தார்கள். ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், வேகமாக வந்து, கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தாடியைப் பிடித்து இழுத்தார்கள். அப்போது வலி தாங்க முடியாமல் கலீஃபா அவர்கள், “பிள்ளையே! இந்த நிலைமையை உமது தந்தையார் பார்த்திருந்தால், மிகவும் வருத்தமடைந்திருப்பார்” என்று கூறினார்கள். உடனே, இப்னு அபூபக்கர் அவர்கள் தமது பிடியை தளர்த்தி விட்டார்கள். ஆயினும், உடனிருந்த மற்ற இருவரும் கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை சரமாரியாக தாக்கினார்கள். அந்த தாக்குதலில் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அதே இடத்தில் ஷஹீத் ஆனார்கள். மூவரும் வந்த வழியே எவருக்கும் தெரியாமல் வெளியேறினார்கள்.

ஹழரத் அபூ ஸயீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், உள்ளே வந்த இருவரில் ஒருவன் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் வந்தான். ஹழரத் அவர்களின் முன் திருக்குர்ஆன் இருந்தது. ஹழரத் அவர்கள், “எனக்கும் உனக்கும் இடையில் அல்லாஹ்வின் வேத நூல் இருக்கிறது” என்று கூறினார்கள். ஆனால் அவன் அதை பொருட்படுத்தாமல் அன்னாரை வாளால் தாக்கினான். அதனால் அன்னாரின் கழுத்து வெட்டப்பட்டது.

فَإِنْ آمَنُوا بِمِثْلِ مَا آمَنتُم بِهِ فَقَدِ اهْتَدَوا ۖ وَّإِن تَوَلَّوْا فَإِنَّمَا هُمْ فِي شِقَاقٍ ۖ فَسَيَكْفِيكَهُمُ اللَّهُ ۚ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ

சில அறிவிப்புகளில், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இரத்தம், திறந்திருந்த திருக் குர்ஆனில், ‘ஃபஸயக்ஃபீகஹுமுல்லாஹு வஹுவஸ் ஸமீஉல் அலீம்’ (எனவே அவர்களி)ன் கெடுதல்களி)லிருந்து உம்மைக் காப்பாற்ற அல்லாஹ்வே போதுமானவன்; அவன்(யாவற்றையும்) செவியுறு வோனாகவும், (எல்லாம்) அறிந்தோனுமாகவும் இருக்கிறான். அத்தியாயம் 2, ஸூரத்துல் பகரா, வசனம் 137, என்னும் வசனத்தின் மீது விழுந்தது என்று கூறியுள்ளார்கள். (தாரீக் தப்ரீ, பாகம் 3, பக்கம் 439)

ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது தாக்குதல் நடந்த போது, அன்னாரின் துணைவியார் கதறினார்கள். கூக்குரலிட்டார்கள். ஆயினும் வெளியே குழப்பமான சூழ்நிலையில்,

அது எவருக்கும் கேட்கவில்லை. கடைசியாக, அவர்கள் கூரை மீதேறி, “ஜனங்களே! உங்கள் கலீஃபா ஷஹீத் ஆக்கப்பட்டுவிட்டார்” என்று கூறினார்கள். உடனே பாதுகாப்புக்கு நின்றிருந்தவர்கள் உள்ளே நுழைந்து பார்த்தார்கள். உள்ளே, ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கொலையுண்டு கிடந்தார்கள்.

அந்த கொடுமையான செய்தியை அறிந்து, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு போன்ற ஸஹாபாப் பெருமக்கள் அங்கு விரைந்து வந்தார்கள். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கொலையுண்டு கிடப்பதைக் கண்டு கண்ணீர் சிந்தினார்கள். “இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்” என்றும் கூறினார்கள்.

வெளியே வந்த ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், தமது புதல்வர்களிடம், “நீங்கள் காவலுக்கு இருந்தும் இந்த கொடுமை எவ்விதம் நடந்தது?” எனக் கேட்டு, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கன்னத்தில் அறைந்தார்கள். ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் மார்பில் குத்தினார்கள். பிறகு, ஹழரத் முஹம்மத் இப்னு தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் ஆகியோரையும் கடிந்துக் கொண்டார்கள். அதே துயரமான நிலையில் தமது இல்லம் நோக்கித் திரும்பினார்கள்.

ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஷஹாதத், ஹிஜ்ரி 35, ஈதுல் அல்ஹா, அய்யாம் அல் தஷ்ரீக் நாட்களில் நடந்தது. வேறு சிலர், ஜும்ஆ நாளில், 18 துல் ஹஜ்ஜில் ஷஹாதத் நடைபெற்றது எனக் கூறியுள்ளனர். சனிக்கிழமையன்று மக்ரிப் மற்றும் இஷாவுக்கு இடையில் அவர்கள் ஜன்னத்துல் பகீயில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள் என்றும் கூறியுள்ளனர். வயது: ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது 82 ஆம் வயதில் ஷஹீத் ஆனார்கள். சிலரது கருத்துப்படி, 81 ஆம் வயதில் ஷஹீத் ஆனார்கள். சிலரோ, 84வது வயதில் ஷஹீத் ஆனார்கள் எனக் கூறியுள்ளனர்.

ஜனாஸா தொழுகை: ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஜனாஸாத் தொழுகையை, அவரது வஸீயத்துப்படி ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நடத்திவைத்தார்கள் என்று ஹழரத் கதாத ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியுள்ளார்கள். இந்த விவரங்கள் யாவும் ஹழரத் இமாம் ஸுயூத்தி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது “தாரீக் குலஃபா” என்னும் நூலில், 161 முதல் 167 பக்கங்களில் எழுதியுள்ளார்கள்.

# ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்

## நான்காம் கலீஃபா

இஸ்லாத்தின் மூன்றாம் கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் கலவரக்காரர்களால் படுகொலை செய்யப்பட்டார்கள். அதன் பிறகும் வெறி அடங்காத கலவரக்காரர்கள் மதீனா நகர் முழுவதும் இனப் படுகொலைகளை புரிந்துக் கொண்டிருந்தார்கள். மஸ்ஜிதுந் நபவியில் புகுந்து கொண்டு அதன் புனிதத் தன்மையைக் கெடுத்துக் கொண்டிருந்தார்கள். கலவரக்காரர்களின் அட்டூழியங்களைக் கண்டு பிரபலமான நபித் தோழர்கள் பலரும் மதீனாவை விட்டும் வெளியேறிச் சென்றுக் கொண்டிருந்தார்கள். மதீனாவில் தங்கியிருந்த நபித் தோழர்கள் சிலர் தத்தமது வீடுகளிலே அடைந்துகிடந்தார்கள். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களின் ஆதரவாளர்கள், அன்னாரின் படுகொலைக்கு பழிவாங்க துடித்துக் கொண்டிருந்தார்கள்.

நிலைமையின் கடுமையை புரிந்துக் கொண்ட சிலர் புதிய கலீஃபாவை தேர்ந்தெடுக்க முயன்றுக் கொண்டிருந்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் தம் பங்குக்கு ஹழரத் தல்ஹா ரலியல்லாஹுதஆலா அன்ஹு, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹுதஆலா அன்ஹு ஆகிய பிரபல நபித் தோழர்களை அழைத்து கிலாஃபத்தை ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்திக் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களோ மறுப்பு தெரிவித்துக் கொண்டிருந்தார்கள்.

ஹழரத் இமாம் ஹாகிம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள், ஹழரத் கைஸ் பின் இபாத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வாயிலாக கூறுகிறார்கள், “நான் ஜமல் போரின் போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் இவ்விதம் கூறியதைக் கேட்டேன், “யா அல்லாஹ்! நான் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலையை விட்டும் விலகியே இருந்தேன். கலீஃபா அவர்கள் படுகொலை செய்யப்பட்ட நாளில் நான் எனது சுய உணர்வையே இழந்து போனேன். அந்த நிலையில் மக்கள் பைஅத் செய்ய எனது இல்லம் நோக்கி வந்தார்கள். நான் அதை ஒருபோதும் விரும்பவில்லை. மேலும், இறைவன் மீது ஆணையாக! ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை படுகொலை செய்தவர்களிடம் பைஅத் வாங்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. கலீஃபா அவர்களின் உடல் நல்லடக்கமும் செய்யப்படாத நிலையில் பைஅத் வாங்கவும் எனக்கு வெட்கமாக இருக்கிறது”, என்று மக்களிடம் கூறினேன்.. அதைக் கேட்டதும் மக்கள் எனது இல்லத்திலிருந்தும் சென்று விட்டார்கள். (தாரீக் குலஃபா, பக்கம் 168)

மற்றொரு அறிவிப்பில், கலீஃபா ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இல்லத்திலிருந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தமது இல்லத்திற்கு திரும்பி வந்ததும் மக்கள் ஓடோடி வந்தார்கள். "உங்கள் திருக்கரங்களை நீட்டுங்கள். நாங்கள் பைஅத் செய்கிறோம்" என்றும் கூறினார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "புதிய கலீஃபாவை தேர்ந்தெடுப்பது பத்ரு போராளிகளின் பணியாகும். அவர்கள் யாரை தேர்ந்தெடுக்கிறார்களோ அவரே புதிய கலீஃபாவாக இருப்பார்" என்று கூறிவிட்டார்கள்.

அதன் பிறகு, பத்ரு போராளிகள் அனைவரும் சேர்ந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் இல்லத்திற்கு வந்தார்கள். "ஹழரத் அலீ அவர்களே! உங்கள் கரங்களை நீட்டுங்கள். நாங்கள் அனைவரும் பைஅத் செய்கிறோம். ஏனெனில், உங்களைவிட கிலாஃபத்துக்கு தகுதியானவர் வேறு எவரும் இப்போது இல்லை" என்று கூறினார்கள். அதைத் தொடர்ந்து அனைத்து பத்ரு போராளிகளும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் கரங்களின் மேல் பைஅத் செய்தார்கள். அவர்களைத் தொடர்ந்து மற்ற மக்களும் பைஅத் செய்தனர். இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலையில்தான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூ அவர்கள் ஹிஜ்ரி 35 ஆம் ஆண்டில் துல்ஹஜ் மாதம் 25 ஆம் நாளில் இஸ்லாத்தின் நான்காவது கலீஃபாவாக பொறுப்பேற்றார்கள். ஹழரத் அபூபக்கர் இப்னு அபீ ஷைபா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஐந்து ஆண்டுகள், ஆறு மாதங்கள் வரை ஆட்சி செய்தார்கள்". (அல் முஅஜம் அல் கபீர் – இமாம் தப்ரானீ, பாகம் 1, பக்கம் 170)

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், தமக்குப் பிறகு தமது உம்மத்தினர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு நம்பிக்கைக் கேடு செய்வார்கள் என்றும் கஷ்டங்களைக் கொடுப்பார்கள் என்றும் முன்னறிவிப்பு செய்திருக்கிறார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் என்னிடம் வாக்குறுதி வாங்கியவற்றில் ஒன்று, "தனக்குப் பிறகு தனது உம்மத்துகள் எனக்கு நம்பிக்கைக் கேடு புரிவார்கள்" என்பதாகும். (ஆபூ யஃலா, ஹாகிம், அபூ நுஅய்ம்)

ஹழரத் அபூதர் அல் கிஃபாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "எனக்குப் பிறகு கலகங்களும் கிளர்ச்சிகளும் ஏற்படும். அப்போது நீர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்

அவர்களுடனே இருக்க வேண்டும். ஏனெனில், அவர்தான் சத்தியத்தையும் அசத்தியத்தையும் வேறுபடுத்தி தெளிவை ஏற்படுத்தக் கூடியவராக இருக்கிறார்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ, பக்கம் 66)

ஹழரத் தைலமி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "அப்துல்லாஹ் இப்னு ஸலாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் வந்தார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் குதிரையில் ஏறும் படித் தட்டில் தமது பாதத்தை வைத்திருந்தார்கள். ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "மவ்லாவே! தாங்கள் ஈராக்குக்கு செல்லாதீர்கள். ஏனெனில், அங்கு வாட்களின் முனைகளால் உங்களுக்கு தீங்கு ஏற்படலாம்" என்று கூறினார்கள். அதைக் கேட்ட ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "இறைவன் மீது ஆணையாக! அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் உமக்கு முன்பாக எனக்கு இந்த தகவலை வழங்கிவிட்டார்கள்" என்று கூறினார்கள். (இப்னு உமர், அபூ யஃலா, இப்னு ஹிப்பான், ஹமீதீ, பஜ்ஜார், ஹாகிம், அபூ நுஅய்ம், கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக்கம் 279)

ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "கேளுங்கள்! எனக்குப் பிறகு நீங்கள் பெரும் சிரமங்களை சந்திப்பீர்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் கூறினார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "என்னுடைய தீனை பாதுகாப்பதில் இந்த சிரமங்களை சந்திப்பேனா?" என்று கேட்டார்கள். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "ஆம்" என்றார்கள். (ஆபூ யஃலா, ஹாகிம், கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக்கம் 279)

அதற்கு ஏற்ப ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கலீஃபா பொறுப்பை ஏற்றதிலிருந்து பல்வேறு பிரச்சினைகளையும், சிரமங்களையும் எதிர் கொண்டார்கள். அன்னார் ஷஹீத் ஆகும்வரை அவருக்கு ஒரு நாளும் நிம்மதியே கிடைக்கவில்லை.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப் பட்ட பிறகு, ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் துணைவியாரைச் சென்று சந்தித்தார்கள். அவர்களிடம், "ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை படுகொலை செய்தவர்கள் யாரென்று நீங்கள்

அறிவீர்களா?” என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், “அவர்களில் ஒருவர் முஹம்மத் இப்னு அபூபக்கர் இருந்தார். அவருடன் இருவர் இருந்தனர். அவர்கள் யாரென்று எனக்குத் தெறியாது” என்று கூறினார்கள். பிறகு நடந்த விஷயங்கள் அனைத்தையும் கூறினார்கள்.

அதைத் தொடர்ந்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து விசாரித்தார்கள். அப்போது அவர்கள், “ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் துணைவியார் கூறுவது உண்மைதான். நான் தான் முதலில் அறையில் குதித்தேன். கொலை செய்யவும் நாட்டம் கொண்டேன். ஆனால், கலீஃபா அவர்கள் எனது தந்தையாரை நினைவு படுத்தியதும் நான் ஒதுங்கிவிட்டேன். இறைவன் மீது ஆணையாக! நான் அவரை கொல்லவில்லை” என்று கூறினார்.

இவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் துணைவியார், “இவர் சொல்வது உண்மைதான். ஆனால் படுகொலை செய்த இருவரை இவர்தான் அழைத்து வந்தார்” என்று கூறினார்கள். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை படுகொலை செய்தவர்கள் மீது கூடிய விரைவில் நடவடிக்கை எடுப்பதாக உறுதி கூறிவிட்டு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் அங்கிருந்தும் புறப்பட்டார்கள். (தாரீக் குலஃபா, இமாம் ஸுயூத்தி, பக்கம் 166)

ஹழரத் இப்னு கல்தூன் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது ‘தாரீக் இப்னு கல்தூன்’ என்னும் நூலில் இவ்விதம் எழுதியுள்ளார்கள்.

ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலைக்குப் பிறகு ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் முஹாஜிர், அன்ஸார் குழுக்களை சேர்ந்தவர்கள் மஸ்ஜிதில் கூடி, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் திருக் கரங்களைத் தொட்டு பைஅத் செய்ய முயன்றனர். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், “நான் அமீராக இருப்பதை விட தளபதியாக இருக்கவே விரும்புகிறேன். எனவே நீங்கள் யாரைத் தேர்ந்தெடுத்தாலும் அவரை நானும் ஆதரிக்க தயாராக இருக்கிறேன்” என்று கூறினார்கள். ஆனால், ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரும் முதலில் முன்வந்து, ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹ ஹூல் கரீம் அவர்களின் திருக் கரங்கள் தொட்டு பைஅத் செய்தனர். அவர்களைத் தொடர்ந்து மற்ற மக்களும் பைஅத் செய்தனர்.

அவர்களைத் தொடர்ந்து ஹழரத் ஸஅத் பின் அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அழைக்கப்பட்டார்கள். ஆனால் அவர்களோ, மற்றவர்கள் பைஅத் செய்த பிறகு தாமும் பைஅத் செய்வதாக கூறிவிட்டார். பிறகு இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அழைக்கப்பட்டார்கள். அவர்களும் முதலில் மற்றவர்கள் பைஅத் செய்யட்டும் என்று கூறிவிட்டார். அதன் பிறகு அன்ஸார்கள் பைஅத் செய்தனர். ஆனால் அவர்களிலும் ஹழரத் ஹஸ்ஸான் இப்னு ஸாபித், ஹழரத் கஅப் இப்னு மாலிக், ஹழரத் முஸ்லிமா இப்னு முகல்லித், ஹழரத் அபூ ஸயீத் அல்குத்ரீ, ஹழரத் நுமான் இப்னு பஷீர், ஹழரத் ஜைத் இப்னு ஸாபித் போன்றவர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு பைஅத் செய்யவில்லை. அதைப் போலவே முஹாஜிர்களில் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு சலாம், ஹழரத் ஸுஹைப் இப்னு ஸினான், ஹழரத் உஸாம பின் ஜைத், ஹழரத் முகீரா பின் ஷுஅபா போன்றவர்கள் பைஅத் செய்யவில்லை.

அதேசமயம், ஹழரத் நுமான் இப்னு பஷீர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஹழரத் நாயிலா அவர்களும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் துணைவியாரின் வெட்டப்பட்ட விரல்களையும், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இரத்தம் தோய்ந்த சட்டையையும் எடுத்துக் கொண்டு ஷாம் (சிரியா) சென்று விட்டார்கள்.

அதற்கிடையில் புனித மதீனாவில் கிளர்ச்சிகளும், கொலைகளும் தொடர்ந்துக் கொண்டே இருந்தன. மக்கள் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலைக்கு 'பழிக்குப் பழி' என்னும் கோஷத்தையே எழுப்பிக் கொண்டிருந்தார்கள். அந்த சூழ்நிலையில் மிஸர் (எகிப்து) நாட்டு கிளர்ச்சியாளர்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹூல் கரீம் அவர்களை வந்து சந்தித்தார்கள்.

கூஃபாவைச் சேர்ந்தவர்கள் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும், பஸராவைச் சேர்ந்தவர்கள் ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் சென்று சந்தித்தனர். பிறகு அனைவரும் ஒன்று சேர்ந்து ஹழரத் ஸஅத் மற்றும் ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரில் ஒருவரை கலீஃபாவாக்க முயற்சி செய்தனர். ஆயினும் அவ்விருவரும் அப்பொறுப்பை ஏற்க முன்வர வில்லை!

அந்த நிலையில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் ஜும்ஆ நாளன்று குதுபா பேருரை நிகழ்த்தினார்கள். பிறகு வீடு திரும்பிய போது ஹழரத் தல்ஹா மற்றும் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹும் வந்து சேர்ந்தார்கள். அவ்விருவரும், "தாங்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தை நிர்ணயம் செய்து ஹழரத்

உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலைக்கு காரணமானவர்களை தண்டிப்பீர்கள் என்ற நம்பிக்கையில்தான் நாங்கள் பைஅத் செய்தோம். ஆனால் தாங்கள் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் இருக்கிறீர்கள்" என்று குறை பட்டுக் கொண்டார்கள்.

அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், "கொஞ்சம் பொறுமையாக இருங்கள். இப்போது நிலைமை சரியில்லை. புனித மதீனாவில் முதலில் கிளர்ச்சிகளை அடக்க வேண்டும். அமைதியை ஏற்படுத்த வேண்டும். கிளர்ச்சி மற்ற இடங்களுக்கும் பரவுகிறது. அதையும் அடக்க வண்டும். இந்த பணி முடிந்ததும் நிச்சயமாக நான் கொலைக் காரர்களை தண்டிப்பேன்" என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் அவ்விருவரும் அங்கிருந்தும் புறப்பட்டுச் சென்று விட்டார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற முதல் ஆண்டில் பஸரா, கூஃபா, ஷாம், மிஸர் போன்ற பகுதிகளுக்கு பொறுப்பாளர்களை நியமித்தார்கள். பஸராவின் பொறுப்பாளராக ஹழரத் உஸ்மான் இப்னு ஹனீஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும், கூபாவின் பொறுப்பாளராக ஹழரத் அம்மார் இப்னு ஷிஹாப் ரலியல்லாஹு அன்ஹு அவ்ஃஅர்களையும், யமன் பொறுப்பாளராக ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும், மிஸ்ரின் (எகிப்து) பொறுப்பாளராக ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும், ஷாம் (சிரியா)வின் பொறுப்பாளராக ஹழரத் ஸஹல் பின் ஹனீஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களையும் நியமனம் செய்தார்கள்.

ஹழரத் உஸ்மான் இப்னு ஹனீஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பஸராவை அடைந்த போது, அன்னாரின் பொறுப்பை ஒரு பிரிவினர் ஏற்றுக் கொண்டனர். ஒரு பிரிவினர் மறுப்பும் தெரிவித்தனர். ஆயினும் அவர் பஸராவை அடைந்துவிட்டார்கள். கூபாவின் பொறுப்பாளர் ஹழரத் அம்மார் இப்னு ஷிஹாப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூபாவை நோக்கி சென்றுக் கொண்டிருந்தார்கள். வழியில் ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்களை சந்தித்தார்கள். அவர், "நீங்கள் வந்த வழியே திரும்பிச் சென்றுவிடுங்கள். ஏனெனில், கூபாவாசிகள் ஹழரத் அபூ மூஸா அல் அஷ்அரி ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தமது பொறுப்பாளராக ஏற்றுக் கொண்டுள்ளனர்" என்று கூறினார். அதைக் கேட்டதும் ஹழரத் அம்மார் இப்னு ஷிஹாப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மதீனாவிற்கே திரும்பி விட்டார்கள். யமன் பொறுப்பாளர் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் யமனை சென்றடைந்தார்கள்.

ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு மிஸர் சென்றடைந்தார்கள். அங்கு அவருக்கும் ஆதரவும், எதிர்ப்பும் ஏற்பட்டது. ஆயினும் அவர் அங்கேயே தங்கியிருந்தார்கள். ஷாம் பொறுப்பை ஏற்கச் சென்ற ஹழரத் ஸஹல் பின் ஹனீஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் வழியில் ஒரு குழுவை சந்தித்தார்கள். அவர்கள் மிரட்டியதால் அவரும் புனித மதீனாவை நோக்கி திரும்பினார்கள்.

ஆதரவும், எதிர்ப்பும் என்ற நிலையிலேயே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஆட்சி நடத்திக் கொண்டிருந்தார்கள். அதற்கிடையில் ஷாம் – சிரியா நாட்டிலிருந்து கபீஸா என்ற ஒற்றன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் வந்தான். அவன், "நான் ஷாம் நாட்டில் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இரத்தம் தோய்ந்த ஜுப்பாவைப் பார்த்து பார்த்து, சுமார் அறுபதாயிரம் பேர் கதறி அழுவதைப் பார்த்தேன். இன்னும் மக்களை தூண்டிவிட அந்த ஜுப்பா தமஷ்கில் உள்ள மஸ்ஜிதின் மிம்பர் மீது வைக்கப்பட்டுள்ளது" என்று கூறினான்.

ஷாம் நாட்டில் நிலைமை மோசமாவதை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் உணர்ந்துக் கொண்டார்கள். எனவே, வேறு வழியின்றி ஷாம் நாட்டின் மீது போர் தொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அது பற்றி ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் புனித மதீனாவாசிகளுடன் ஆலோசனையும் செய்தார்கள்.

மதீனாவாசிகளில் முக்கியமாக ஹழரத் ஜைது ரலியல்லஹு அன்ஹு அவர்களை அழைத்து போர் பற்றி பேசினார்கள். ஹழ்ரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் போருக்கு செல்வதில் உறுதியாக இருப்பதை உணர்ந்த ஹழரத் ஜைது ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், போருக்கு சம்மதித்தார்கள். போருக்கான ஏற்பாடுகள் தொடங்கப்பட்டன. பயணம் மற்றும் போருக்கான சாமன்கள் திரட்டப் பட்டன.

அதற்கிடையில் ஹழரத் தல்ஹா மற்றும் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹும் அவர்கள் உம்ரா செல்ல அனுமதி பெற்று புனித மக்காவுக்கு புறப்பட்டுச் சென்றார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்ற ஏற்பாடுகளிலும் ஈடுபட்டார்கள். புனித மதீனாவிற்கு பொறுப்பாளர் ஒருவரை நியமனம் செய்தார்கள். பஸரா, கூபா, மிஸர் போன்ற இடங்களிலிருந்து ஆதரவு வேண்டி கடிதங்கள் எழுதினார்கள். அப்படிப்பட்ட சமயத்தில் புனித மக்காவிலும் கிளர்ச்சிகளும் வன்முறையும் ஏற்பட்டிருப்பது பற்றிய செய்தி கலீஃபா ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு கிட்டியது.

அதனால் விசனம் அடைந்த கலீஃபா ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஷாம் நாட்டின் மீது போர் தொடுக்கும் எண்ணத்தைக் கைவிட்டார்கள். பிறகு மக்களைக் கூட்டி, "நிச்சயமாக தல்ஹா, ஜுபைர் மற்றும் உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா போன்றோர் வெளியில் நிலைமையை சீராக்குவதாகக் கூறுகிறார்கள். ஆனால் அவர்கள் என்னுடைய கிலாஃபத்தை சின்னா பின்னமாக்கவே விரும்புகிறார்கள். உங்கள் ஆதரவு இருக்கும் வரை நான் இவற்றை எல்லாம் பொறுத்துக் கொள்வேன்" என்று கூறினார்கள். பிறகு, புனித மக்காவுக்கு செல்லவும் நாட்டம் கொண்டார்கள். புனித மதீனாவாசிகளையும் புனித மக்காவை நோக்கிச் செல்ல ஊக்குவித்தார்கள். ஆனால் புனித மதீனாவாசிகள் அதற்கு ஆதரவு தரவில்லை. பிறகு ஹழரத் இப்னு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து அதுபற்றி பேசினார்கள். அவரோ,"நானும் மதீனாவாசியே! மதீனாவாசிகள் என்ன முடிவு எடுக்கிறார்களோ அதன்படியே நடப்பேன்" என்று கூறிவிட்டு சென்றுவிட்டார்கள்.

ஆயினும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீண்டும் மீண்டும் முயற்சி செய்தனர். இறுதியாக மதீனாவாசிகள் புனித மக்காவை நோக்கிச் செல்ல சம்மதம் கூறினர்.

அதற்கிடையில் உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் புனித ஹஜ்ஜை நிறைவேற்ற புனித மக்காவுக்கு சென்றிருந்தார்கள். அவர்கள் புனித ஹஜ்ஜை நிறைவற்றிவிட்டு புனித மதீனாவுக்கு திரும்பிக் கொண்டிருந்தார்கள். வழியில், ஹழரத் அப்துல்லாஹ் பின் அபீ ஸலமா ரலியல்லாஹு அன்ஹு அவர்களைச் சந்தித்து, புனித மதீனாவின் நிலைமை பற்றி விசாரித்தார்கள். அவர், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஷஹாதத்து பற்றியும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கிலாஃபத்தை ஏற்றதையும் இன்ன பிற விஷயங்களையும் கூறினார்கள்.

அதைக் கேட்டதும் உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், "ஹழரத் உஸ்மான் அவர்கள் சாந்தமானவர். அவரை படுகொலை செய்துவிட்டார்கள். நான் நிச்சயமாக அவருடைய கொலைக்கு பழி வாங்குவேன்" என்று கூறிவிட்டு, மீண்டும் புனித மக்காவுக்கே திரும்பிச் சென்றுவிட்டார்கள்.

உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் மீண்டும் புனித மக்காவுக்கே திரும்பிவிட்டதை அறிந்த மக்காவாசிகள், வந்து அவரைச் சுற்றிலும் கூடிவிட்டார்கள். அப்போது உம்முல் முஃமினீன் அவர்கள், "ஜனங்களே! அண்ணல் நபி ஸால்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் செய்த புனித மதீனாவில் இப்போது இரத்தம் சிந்தப்படுகிறது. நான்கு புனித

மாதங்களில் ஒன்றான துல் ஹஜ் மாதத்தில் கொலைகள் நிகழ்கின்றன். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் படுகொலை செய்யப்படுகிறார். நிச்சயமாக ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஒரு விரலுக்கு, மிஸரிகள் (எகிப்தியர்) அனைவரும் ஈடாகமாட்டார்கள். எந்த காரணத்தைக் கொண்டு அவர்கள் எதிர்த்திருந்தாலும், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பரிசுத்தமானவராகவும் இருந்தார்கள்" என்று கூறினார்கள்.

அதைக் கேட்ட புனித மக்காவின் பொறுப்பாளர், "எல்லோருக்கும் முதலாவதாக நானே ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலைக்கு பழி வாங்குவேன்" என்று கர்ஜித்தார்! அவரைத் தொடர்ந்து, (ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலைக்குப் பிறகு) மக்காவில் திரண்டிருந்த பனூ உமய்யா கூட்டத்தினரும் சபதம் செய்தனர். அந்த மக்கள் கூட்டத்தில் ஹழரத் ஸயீத் இப்னு ஆஸ் மற்றும் ஹழரத் வலீத் இப்னு உக்பா போன்றோரும் இருந்தனர்.

அதற்கிடையில் ஹழரத் தல்ஹா மற்றும் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரும் புனித் மதீனாவிலிருந்து புனித மக்காவிற்கு வந்து சேர்ந்தார்கள். உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களையும் சந்தித்து மதீனாவின் நிலைமை குறித்து கூறினர். உடனே உம்முல் முஃமினீன் அவர்கள், "நீங்களும் எங்களுடன் சேர்ந்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.

அனைவரும் முதலில் ஷாம் (சிரியா) நோக்கிச் செல்ல திட்டம் தீட்டினார்கள். பிறகு பஸராவை நோக்கிச் செல்வது என முடிவு செய்தனர். அதன்படி அறுநூறு ஒட்டகங்களும், ஆயிரம் வீரர்களும் திரண்டனர். அவர்கள் அனைவரும் பஸராவை நோக்கிப் புறப்பட்டனர். வழியிலும் பலர் படையில் சேர்ந்தனர். அவ்விதமாக சுமார் மூவாயிரம் வீரர்கள் சேர்ந்து விட்டனர். உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் 'அஸ்கர்' என்னும் ஒட்டகத்தின் மீது அமர்ந்து பயணித்தார்கள்.

பஸராவை நோக்கி அவர்கள் பயணித்துக் கொண்டிருந்தபோது 'ஹவ்அப்' என்ற இடத்தை அடைந்தனர். அப்போது அங்கிருந்த நாய்கள் அவர்களைப் பார்த்து குறைக்க ஆரம்பித்தன. இதைக் கேட்ட ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, "இந்த இடத்தின் பெயர் என்ன?" என்று வினவினார்கள். மக்கள் 'ஹவ்அப்' என்று கூறினர். இதைக் கேட்ட ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் திடுக்கிட்டார்கள். ஒரு கையை இன்னொரு கையில் அடித்து 'இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன்' என்று கூறிவிட்டு "நான் (மதீனா) திரும்பப் போகிறேன்" என்றார்கள். "ஏன்?" என்று மக்கள் கேட்டபோது.

"'ஹவ்அப்' (என்ற இடத்தின்) நாய்கள் உங்களில் யாரைப் பார்த்து குறைக்கப் போகிறது? என்பதை நான் அறிந்திருக்க வேண்டுமே' என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் தமது மனைவிமார்களிடம் கூற நான் செவியுற்றுள்ளேன்' என்றும், அப்போது அவளது நிலை தவறாக இருக்கும் எனவும் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி அவஸல்லம் அவர்கள் கூறினார்கள். அதை நினைவு கூர்ந்த உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹூ அன்ஹா அவர்கள் தனது முடிவை மாற்றிக் கொள்ள முயன்றார்கள். ஆயினும், ஹழரத் தல்ஹா போன்றோர் அன்னாரை சமாதானம் செய்து மீண்டும் பஸராவை நோக்கிச் செல்லும்படி செய்தார்கள். (ஸஹீஹ் புகாரீ)

புனித மக்காவில் இருந்த ஹழரத் உம்மு பழல் பின்தே ஹரிஸ் ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், மக்காவில் நிகழ்ந்த நிகழ்வுகளை எல்லாம் ஒரு கடிதத்தில் எழுதி அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள்.

உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா, ஹழரத் தல்ஹா, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் பஸராவை நோக்கி புறப்பட்டுச் செல்வதையும் அறிந்தார்கள். உடனே புனித மதீனா வாசிகளின் உதவியை அமீருல் முஃமினீன் அவர்கள் நாடினார்கள். ஆயினும், உம்முல் முஃமினீன் ஆயிஷா, ஹழரத் ஹல்ஹா, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோருக்கு எதிராக மதீனாவாசிகளின் ஆதரவை பெறுவது மிகவும் கடினமாக இருந்தது.

ஹழரத் ஸியாத் இப்னு ஹன்ஸ்லா, குஸைமா பின் ஸாபித், ஹழரத் அபூ கத்தாதா ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு ஆதரவு தர முன்வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து மற்ற மதீனாவாசிகளும் ஆதரவு தந்தார்கள். அதைத் தொடர்ந்து அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஹிஜ்ரி 36, ரபீஉல் ஆகிரில் பஸரா நோக்கி புறப்பட்டார்கள்.

அமீருல் முஃமுனீன் ஹஹரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கும், உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் தல்ஹா, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹும் அவர்களுக்கும் இடையி நடைப் பெற்ற போரே ஜமல் போர் அல்லது ஒட்டகப் போர் என அழைக்கப்படுகிறது.

## ஜமல் யுத்தம்:

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் ஜமல் யுத்தம் பற்றி பல்வேறு முன்னறிவிப்புகளை செய்துள்ளார்கள்.

ஹழரத் உம்மு ஸலமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்மஹாத்துல் முஃமினீன்களில் கிளர்ச்சி செய்யக் கூடிய சிலறைப்பற்றி கூறும் போது, ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் சிரித்துவிட்டார்கள். அப்போது அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "ஹுமைராவே! (உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் சிறப்புப் பெயர்) கவனம் கொள்க! கிளர்ச்சி செய்பவர்களில் நீர் இருக்க வேண்டாம்" என்று கூறினார்கள். பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களைப் பார்த்து, "நீர் அத்தகைய சூழ்நிலையை எதிர் கொள்ள நேர்ந்தால், அப்போது இவர்களுடன் (ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுடன்) மென்மையை பேணவும்" என்று கூறினார்கள். (ஹாகிம், பைஹகீ, கஸாயிஸுல் குப்ரா பாகம் 2, பக்கம் 276)

ஹழரத் கைஸ் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள், "உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் பனூ ஆமிர் குலத்தாரின் இடத்தை அடைந்த போது, அங்கிருந்த நாய்கள் அவரைப் பார்த்து குரைக்கக் தொடங்கின. அப்போது உம்முல் முஃமினீன் அவர்கள் "இந்த இடத்தின் பெயர் என்ன" என்று கேட்டார்கள். "இது ஹவாப் என்னுமிடமாகும்" என்று கூறப்பட்டது. உடனே உம்முல் முஃமினீன் ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள், "நான் இங்கிருந்து திரும்பிச் செல்வதே நல்லது என நினைக்கிறேன்" என்று கூறினார்கள். அப்போது ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "இல்லை, நாம் முன்னேறிச் செல்வதே நல்லது" என்று கூறினார். அப்போது உம்முல் முஃமினீன் அவர்கள், "எனது வாழ்க்கைத் துணைவியரில் ஒருவரைப் பார்த்து, ஹவ்அபின் நாய்கள் குரைக்கும் போது, அவருடைய நிலை எப்படி இருக்கும்?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதை நான் கேட்டிருக்கிறேன்" என்று கூறினார்கள். (அஹ்மத், அபூ யஃலா, பஜ்ஜார், ஹாகிம், பைஹகீ, அபூ நுஅய்ம்)

ஹழரத் அபூ ராஃபிஆ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், "கூடிய விரைவில் உமக்கும் ஹழரத் ஆயிஷாவுக்கும் இடையில் ஒரு சம்பவம் நிகழும். அந்த சம்பவம் வெளிப்படும் போது இவரை (ஹழரத் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை) அமைதியான, பாதுகாப்பான இடத்திற்கு திருப்பி அனுப்பி விடுங்கள்" என்று கூறினார்கள். (அஹ்மத், பஜ்ஜார், தப்ரானீ, கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக்கம் 277)

ஹழரத் அப்துஸ் ஸலாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஜமல் யுத்த நாளன்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம், “நான் உம்மை அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு கேட்கிறேன். “நீர் நிச்சயமாக இவரை (ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடன்) போர் புரிவீர். அப்போது நீர் இவருடைய விஷயத்தில் மானக் கேடானவராக இருப்பீர். அதன் பிறகு உம்மை, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வெற்றி கொள்வார்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதை நீர் செவிமடுக்கவில்லையா?” என்று கேட்டார்கள்.

அப்போது ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “நிச்சயமாக நான் இதை கேட்டிருக்கிறேன். இனி உங்களுக்கு எதிராக நிச்சயமாக நான் போர் புரிய மாட்டேன்” என்று கூறினார்கள். (ஆபூ நுஅய்ம், கஸாயிஸுல் குப்ரா பா 2, பக் 277) இவ்விதம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னறிவிப்புகள் செய்திருந்தும் பல ஸஹாபாக்கள் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு எதிராகவே செயல்பட்டார்கள்.

ஜமல் (போர் நிகழ்ந்த) நாட்கள் என்பது, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும், அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களும் ஒருவரை யொருவர் எதிர்த்து பஸராவில் நிகழ்த்திய போரைக் குறிக்கிறது. அதன் விபரத்தை ஹழரத் இமாம் புகாரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது ஸஹீஹ் புகாரீ ஷரீஃபில் கூறியுள்ளார்கள். இந்த ஹதீஸை அறிவிப்பவரான அபூபக்ரா ரலியல்லாஹு அன்ஹு என்ற நபித்தோழரும் (ஜமல் போரில்) அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் கட்சியில் சேர விரும்பினார். எனினும், “பெண்களிடம் தங்கள் காரியத்தை ஒப்படைத்த வர்க்கம் வெற்றியடையாது” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய செய்தியைச் செவியுற்று, இவர் அந்தக் கட்சியில் சேராமல் ஒதுங்கி இருந்துவிட்டார். ஹழரத் அபூ பக்ரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேலும் அறிவிக்கிறார்கள்.

ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரீ 35ம் வருடம் துல்ஹஜ் மீ18 வெள்ளிக்கிழமை ஷஹீதான (கொல்லப் பட்ட) பின்னர், அவ்விடத்திலிருந்த நபித் தோழர்களின் ஏகோபித்த வற்புறுத்தலுக்கிணங்க. 21ம் நாள் திங்கட் கிழமையன்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கிலாபத் பதவியை ஏற்றுக் கொண்டார்கள். அவர் பதவியை ஏற்றவுடன் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொலை செய்தவரைக் கைது செய்வதற்காக விசாரணையில் ஈடுபட்டார்கள். இக்கொலை நிகழ்ந்ததை நேரில் பார்த்தவர் கொல்லப்பட்டவரின் மனைவியான

நாயிலா பிந்துல் கராபிஸா ரஹ்மதுல்லாஹி அலைஹா ஒருவர் மட்டும்தான். ஹழரத் அபூபக்கர் ஸித்திக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இளைய புதல்வரான முஹம்மதும், இன்னுமிருவரும் தான் வந்தார்கள் என்றும், அவ்விருவரையும் இன்னார் என்று அடையாளாம் கூற இயலாது என்றும் அவர் வாக்கு மூலம் கொடுத்தார். ஹழரத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் புதல்வர் முஹம்மதை அழைத்து விசாரித்ததில், கொலை செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் தாம் அங்கு சென்றது உண்மை. ஆனால், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறிய சில வார்த்தைகளால், அச்செய்கையை நிறைவேற்றாமல் விலகிக் கொண்டேன். எனக்குப் பின்னர், அங்கு இருவர் நுழைந்தனர். அவர்கள் இன்னார் என்று எனக்குத் தெரியாது என்று கூறினார். ஆகவே, கொலை செய்தவர் இன்னார் என்று நிச்சயமாகத் தெரியாததால் தீர விசாரித்து, உண்மையான குற்றவாளியைக் கைது செய்ய வேண்டிய பிரச்சனை ஏற்பட்டது, எனவே, நாட்டில் அமைதியை நிலவச் செய்வதை முதலாவதாகக் கவனித்து விட்டு. அதன்பின்னார் விசாரணையை ஆரம்பிக்கலாம் என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கருதினார்கள்.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா உள்பட முக்கியமான நபித்தோழர்கள் ஹஜ் செய்வதற்காக திருமக்கா சென்றிருந்தனர். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷஹீதானதும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கலீபாவாக நியமிக்கப்பட்டதும் திருமக்காவுக்கு எட்டின. திருமக்காவை விட்டுப் புறப்பட்டு வந்து கொண்டிருந்த அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களுக்கு வழியில் இவ்விபரம் தெரிந்தவுடன் திருமக்காவுக்கே திரும்பிச்சென்று. "ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொலை செய்தவரைக் கைது செய்து தண்டிக்க வேண்டும், அதற்காக சகல முயற்சிகளையும் செய்ய வேண்டும்." எனக் கூறினார். அவரை ஆதரித்து மற்றவர்களும் ஒன்று திரண்டனர்.

தம்முடைய நோக்கத்துக்கு மாறாக இவர்கள் ஒன்று திரளுவதை அறிந்த ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் புனிதமாக மதிக்கப்படுகிற திருமக்கா, மதீனா நகர்களில் இரத்தம் சிந்துவதற்கு இடங்கொடுக்கலாகாது என்பதையும், இதர அரசியல் காரணங்களையும் உத்தேசித்து திரு மதீனாவிலிருந்து இராக்குக்குச் சென்றார்கள். அவ்வாறு செல்லும்போதுதான் பஸராவினருகில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் படையும் சந்தித்தன. ஹழரத் ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் படைக்கு சுவர்க்க வாதிகள் என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் நற்செய்தி கூறப் பெற்ற ஹழரத் ஜீபைருப்னு அவாம் ரலியல்லாஹு அன்ஹு (ஹழரத்

அலி கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் மாமியின் புதல்வர்), ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் முக்கிய தளபதிகளாக இருந்தனர்.

இருகட்சிப் படைகளும் ஒன்றையொன்று எதிர்த்து நின்றபோது, ஹழரத் ஜீபைருப்னு அவாம் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அழைத்து, "அபூ அப்தில்லாஹ்வே, நீர் அலீயை நேசிக்கிறீரா?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி அஸல்லம் அவர்கள் உம்மை வினவினார்கள். "ஆம், யா ரஸூலல்லாஹ்!{' என்று நீர் பதிலளித்தீர். அப்பொழது, "ஒரு நாள் வரும். அந்த நாளில் அவருடன் நியாயமில்லாமல் நீர் (அவருடன்) சண்டையிடுவீர்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியது உமக்கு ஞாபகமிருக்கிறதா? நன்றாக நினைத்துப் பாரும்" என்றார். அதற்கு, ஹழரத் ஜீபைருப்னு அவாம் ரலியல்லாஹு அன்ஹு "ஆம். இப்பொழுது எனக்கு நினைவு வந்து விட்டது. இனிமேல் நான் (உங்களுக்கு எதிராக) சண்டையிடமாட்டேன்" என்று கூறி, போர்க்களத்தை விட்டும் அகன்றார். இவர் செல்வதைப் பார்த்த மற்றொரு தளபதியான ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் போர்களத்தை விட்டும் அகன்றார்கள்.

போரிடாமலேயே சமரசமாகிக் கொள்ள வேண்டும் என்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம், அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா ஆகிய இருவரும் விரும்பினர். எனவே, சமரசத்துக்கான முயற்சிகள் இரண்டு கட்சியினருக்கும் இடையில் நடந்து கொண்டிருந்தன. இருவரும் சமரசமாகி விட்டால், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொலை செய்தவர்கள் கண்டுபிடிக்கப்பட்டு, நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுவர். பிரச்சினையும் தீர்ந்துவிடும். அமைதியும் ஏற்பட்டுவிடும். ஆனால் இதை சில சதிகாரர்கள் விரும்பவில்லை!

எனவே, சமரசம் ஏற்படாம்ல் தடுத்திட வேண்டும் என்று சதிகாரர்கள் விருப்பினார்கள். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உமய்யா வம்சத்தைச் சேர்ந்தவர். எனவே, இச்கொலையைச் சாக்காக வைத்து அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்றி இதில் சம்பந்தப்பட்டவர்களைத் தங்கள் விருப்பம் போல் தண்டிக்க வேண்டும் என்றும் உமய்யா வம்சத்தினரின் எண்ணினர். எனவே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் மற்றும் உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா ஆகிய இவ்விரு வர்க்கத்தாருக்கும் இடையில் சமரசம் ஏற்படுவதைத் தடுக்க அவர்கள் முயன்றனர்.

எனவே, அன்று நள்ளிரவில் சதிகாரக் கூட்டத்தார் அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் படை

வீரர்கள் இருந்த இடத்தில் புகுந்து கொள்ளையிட்டனர். அதனால் இருதரப்புகளுக்கும் இடையில் கலவரம் ஏற்பட்டது. நம்மை ஏமாற்றி வஞ்சமாகத் தாக்கினார்கள் என்று ஒவ்வொரு கட்சியினரும் எதிர்க்கட்சியினரைக் குறை கூறிக்கொண்டு போரிடத் தொடங்கினார்கள். கடும் போராட்டம் நிகழ்ந்தது. ஏறக் குறைய பத்தாயிரம் முஸ்லிம்கள் இரு கட்சியினரிலும் கொல்லப் பட்டனர்.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் தம்முடைய சகோதரர் ஹழரத் முஹம்மது ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் கைது செய்யப்பட்டு பஸராவுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். போர்க் களத்திலுள்ள அலுவல்களை முடித்துக் கொண்டு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் பஸரா சென்றார்கள். அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களைச் சந்தித்து நலம் விசாரித்தார்கள். இருவரும் மனம் விட்டுப் பேசினார்கள்.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் திருமதீனா செல்லச் சம்மதித்ததால், அவருடைய சகோதரர் ஹழரத் முஹம்மது அவர்களின் பாதுகாப்பிலேயே மிக மரியாதையுடன் அனுப்பி வைக்கப் பட்டார்கள். அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் திருமதீனாவுக்குப் புறப்படும்போது "மக்களே, நாங்கள் சண்டையிட்டுக் கொண்டது தவறான அபிப்பிராயத்தால் ஏற்பட்ட விபரீதம், உண்மையில் எனக்கு, அலீக்கும் இடையில் இதற்குமுன் எவ்விதச் சச்சரவுமில்லை" என்று பொது மக்களுக்கு அறிக்கை செய்தார்கள்.

அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் இவ்வறிக்கையை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஆமோதித்து, இவர் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கைத் துணை நல்லார். நம் யாவருக்கும் தாயார். இவருக்கு மரியாதை செய்து கௌரவிப்பது நம்முடைய பொதுக் கடமை" என்று அறிக்கை விடுத்தார்கள்.

இச்சண்டையின்போது அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் ஒட்டகத்தின் மீது அம்பாரி வைத்து, போர் வீரர்களின் மத்தியில் நடுவணிக்குள் திரைக் கப்பால் இருந்து கொண்டிருந்தார்கள். எனவே, இதற்கு "ஒட்டகச் சண்டை" என்ற பெயர் வந்தது. அன்னை ஆயிஷா ஸித்தீக்கா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கைத் துணை நல்லார் என்பதற்காக ஏராளமான முஸ்லிம்கள் அவரருடன் சேர்ந்து போருக்கு வந்தனர். எனவே, பத்தாயிரம் முஸ்லிம்கள் உயிர்ச் சேத மேற்பட்டதற்குக் காரணமாக இருந்த ஒரு சம்பவத்தில் தாம் சம்பந்தப்படாதவாறு செய்தது நபி

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இந்த உபதேசமாக இருப்பதால், இதனை இறைவனின் அருள் என இந்த ஹதீஸில் அவர் (ஆபூ பக்ரா ரலியல்லாஹு அன்ஹு) வர்ணித்திருக்கிறார். (ஸஹீஹ் புகாரீ)

ஜமல் யுத்தத்தின் முடிவில், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை எதிர்த்த ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷஹீத் ஆனார்கள். அவர்களின் ஒரு காலில் அம்பு ஒன்று தைத்திருந்தது. அதன் உபாதையை தாங்க முடியாமல் அவர் பஸராவிற்கு சென்று விட்டார்கள். அம்பு பட்ட காயத்திலிருந்து இரத்தம் வழிந்துக் கொண்டே இருந்தது. அதே நிலையில் அவர் வபாத் ஆனார்கள்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய விஷயத்தை அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஞாபகப்படுத்தியதும் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் போர்க்களத்தை விட்டும் விலகிச் சென்று விட்டார்கள். வழியில் ஒரு படையைக் கண்டார்கள். படையிலிருந்த அம்ர் பின் ஜர்மூஸ் என்பவன் அவரிடம் வந்து, அவரைப் பற்றி விசாரித்தான். பிறகு அவரிடம் சில மஸ்அலாக்களையும் கேட்டறிந்தான். அப்போது தொழுகையின் நேரம் வந்துவிடவே, ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தொழ ஆரம்பித்தார்கள். அவர்கள் தொழுதுக் கொண்டிருக்கும் போதே அம்ர் பின் ஜர்மூஸ் என்னும் கயவன் அவரை ஷஹீதாக்கினான்.

போர் முடிந்த பிறகு அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தாமே போர்க் களத்திற்கு வந்தார்கள். அங்கு ஹழரத் கஅப் பின் ஸவ்ர், ஹழரத் அப்துர் ரஹ்மான் பின் அதாப், ஹழரத் தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹும் போன்றவர்கள் ஷஹீதாகிக் கிடப்பதைக் கண்டு மிகவும் மனம் வருந்தினார்கள். அவர்களின் ஜனாஸாத் தொழுகையை அவரே நடத்தினார்கள். அடக்கமும் செய்வித்தார்கள். அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வ்ஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஜமல் யுத்தம் முடிந்த பிறகு கூபாவிற்கு பயணித்தார்கள். (தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 399)

## ஸிப்பீன் போர்:

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கலீஃபாவாக பொறுப்பேற்றதும், ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை மிஸருடைய (எகிப்து) அமீராக நியமனம் செய்தார்கள். ஒரு படையுடன் எகிப்தை நோக்கிச் செல்லும் படியும் அறிவுரை கூறினார்கள். ஆனால் ஏழு பேரை மட்டும் அழைத்துக் கொண்டு ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு

அன்ஹு அவர்கள் எகிப்தின் உள்ளே பிவேசித்தார்கள். எகிப்தியர்களுக்கு முன்னால் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் நியமன கடிதத்தையும் படித்துக் காட்டினார்கள். கலீஃபாவின் கட்டளைக்கு கீழ்படிவது வாஜிபு என்பதையும் விளக்கினார்கள். மிம்பரில் நின்று பயானும் செய்தார்கள். பயான் முடிந்ததும் மக்கள் அவர்களின் கைகளைத் தொட்டு பைஅத் செய்தார்கள். (தாரீக் இப்னு கல்தூன் பா 1, பக் 405)

மறு பக்கம் சிரியாவின் (ஷாம்) ஆளுநராக இருந்த முஆவியா ரலி மிகவும் கவலையில் ஆழ்ந்திருந்தார். அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் நிச்சயமாக தம் மீது படை எடுத்து வருவார். எகிப்திலும் அவரது ஆதரவாளரான ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களே ஆளுநராக இருக்கிறார். அவர் மக்களிடம் செல்வாக்கு பெற்றவராகவும் இருக்கிறார். ஒரு பக்கம் அமீருல் முஃமினீன் அவர்களும், மறுபக்கம் ஹழரத் கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஒரே நேரத்தில் சேர்ந்து தாக்கினால் சிரியாவின் நிலைமை என்னவாகும்? அதை நினைத்து நினைத்து கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.

சிரியாவை முழுவதுமாக தமது கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ள வேண்டும் என்று அவர் விரும்பினார். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இரத்தம் தோய்ந்த ஜுப்பாவும், அன்னாரின் துணைவியாரின் வெட்டுண்ட விரல்களும் அவரிடம் சேர்ந்து விட்டிருந்தன. அவர் தினமும் அவற்றை தமஷ்க்கில் உள்ள ஜாமிஆ பள்ளிவாசலின்  மிம்பரின் மீது, மக்களின் பார்வைக்கு வைத்தார்கள். மக்கள் அவற்றைப் பார்த்து பார்த்து கதறி அழுதனர். மேலும், ரோம் நாட்டினரின் தாக்குதலுக்கு அஞ்சி சிரியாவில் எப்போதும் படைகள் நிறைந்திருக்கும். அந்த படை வீரர்கள் அனைவரும், “ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலைக்கு பழிக்குப் பழி வாங்கும் வரை நாங்கள் தரையில் படுக்க மாட்டோம். குளிர்ந்த நீரையும் பருக மாட்டோம்” என்று சபதம் செய்திருந்தார்கள்.

மேலும் முஆவியா ரலி அவர்கள், தமக்கு தேவைப் படுபவர்களையும், வீராதி வீரர்களையும் தேடித் தேடி தம்மோடு சேர்த்துக் கொண்டார். அவர்களுக்கு ஆசை வார்த்தைகள் கூறினார். உறுதிமொழிகள் கொடுத்து ஏமாற்றினார். அதனால் அவரது படை பலமடைந்தது. (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 554)

மேலும் தம்மை பலப்படுத்திக் கொள்ள விரும்பிய அவர், எகிப்து ஆளுநர் ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் கொலையுடைய முக்கியத்துவம்

பற்றியும், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் கிலாஃபத் ஏற்றது பற்றியும் முதலில் எழுதியிருந்தார். பிறகு பேராசைக் காட்டியும் தமது விருப்பத்தை வெளிப் படுத்தியும் எழுதியிருந்தார். அதில், "நீங்கள் என்னுடன் சேர விரும்பினால், உங்ககளுக்கு இராக்குடைய ஆட்சிப் பொறுப்பு கொடுக்கப்படும். அத்துடன் உங்களுடைய சந்ததிகளில் ஒருவருக்கு ஹிஜாஸுடைய ஆட்சியும் ஒப்படைக்கப்படும். அதைத் தவிர நீங்கள் விரும்பும் வேறு அனைத்தும் உமக்குக் கொடுக்கப்படும்" என்று எழுதியிருந்தார். பேராசையை தூண்டும் வகையில் எழுதப்பட்ட அந்த கடிதத்தை ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது குடும்பத்தாருக்கு படித்துக் காட்டி ஆலோசித்தார்கள்.

முடிவாக பதில் கடிதமும் எழுதினார்கள். அதில் முதலில், அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத்தை போற்றிப் புகழ்ந்தும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறியிருந்தார். பிறகு, "நீங்கள் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலை பற்றி எழுதியிருந்தீர்கள். அதைப் பற்றி நான் அறிந்தேயுள்ளேன். மேலும், அந்த படுகொலையோடு எனக்கோ, எனது தோழர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கோ எவ்வித தொடர்பும் இல்லை. நான் உங்களுடைய கோரிக்கை பற்றி யோசிக்கிறேன். ஏனெனில் இது அவசரப்பட்டு முடிவு எடுக்கக் கூடிய விஷயமல்ல. உங்களுக்கு நான் ஒருவனே போதுமானவனாக இருக்கிறேன்.. மேலும், இன்ஷா அல்லாஹ் உமக்குப் பிடிக்காத அல்லது நீங்கள் விரும்பாத எதையும் நான் செய்யமாட்டேன்" என்று எழுதியிருந்தார்கள்.

அந்த கடிதத்தைப் படித்த முஆவியா ரலி உடனே இரண்டாவது கடிதத்தையும் எழுதினார். அதில், "உங்கள் கடிதத்தைப் படித்தேன். உங்கள் நோக்கம் என்ன என்பது எனக்கு விளங்கவில்லை. நான் உங்களை சமாதானத்தின் பக்கமும், அமைதியின் பக்கமும் அழைக்கிறேன். நீர் அதை விட்டும் ஓடி ஒளியாதீர். மேலும் நான் உங்களை சண்டையை விட்டும் தூரமாக்கவே விரும்புகிறேன். மேலும், நான் உங்கள் பொய் சமாதானத்தால் சந்தோஷமடைய விரும்பவில்லை. இப்போதே என்னிடம் பெரும் படை தயாராக இருக்கிறது. வஸ்ஸலாம்" என்று எழுதியிருந்தார்.

இரண்டாவது கடிதத்தைப் படித்த ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், இனி பொய் சமாதானம் சொல்வதில் பிரயோசனம் இல்லை என்பதை உணர்ந்து கொண்டார்கள். எனவே, தமது மனதில் இருந்ததை, மறு கடிதத்தில் எழுதியே விட்டார்கள்.

“எனக்கு நீ பேராசை காட்டுவது ஆச்சரியமாக இருக்கிறது. நான் உனது பொய்யும் புரட்டும் நிறைந்த வலையில் சிக்கிவிடுவேன் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறாய். உனது முயற்சியில் வெற்றி கண்டுவிடலாம் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறாய். மேலும், மக்களுடைய வளர்ச்சிக்காக உழைக்கும் மிகச் சிறந்த மனிதருக்கு (ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கு) கீழ்படுவதை விட்டும் நான் விலகி விடுவேன் என்றும் நம்பிக் கொண்டிருக்கிறாய். அவர் எப்போதும் உண்மை பேசுபவராக இருக்கிறார். நீதியை நிலைநாட்டும் வழிகாட்டியாக இருக்கிறார். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மிக நெருங்கிய உறவினராக இருக்கிறார். என்னை உனக்கு கீழ்படிய உத்தரவிடுகிறாய்.

யாருக்கு கீழ்ப்படிவது? இந்த விஷயங்களில் மக்களை விட்டும் தூர விலகி இருப்பவருக்கா? மிகப் பெரிய சூழ்ச்சிக்காரனுக்கா? வழி தவறியவனுக்கா? அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் உறவை விட்டும், நெருக்கத்தை விட்டும் தூரமானவருக்கா? வழி தவறிய, வழி தவறச் செய்த ஒருவரின் பிள்ளை, இப்லீஸிலிருந்து ஒரு சாத்தானாக இருக்கிறான். மேலும் நீ உன்னுடைய உதவியின் மூலம் எகிப்தில் பெரும்படையை நிரப்பலாம் என கூறியிருக்கிறாய். நான் உனக்கு அத்தகைய நெருக்கடியைக் கொடுக்கவில்ல என்றால், உன்னை மிகப் பெரிய அதிருட்டசாலியாக கருதிக் கொள், வஸ்ஸலாம்” என்று பதில் கடிதம் எழுதினார்கள். (தாரீக் இப்னு கல்தூன், பா 1, பக் 406)

முஆவியா ரலி இந்தக் கடிதத்தைப் படித்ததும், ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது சூழ்ச்சிக்கு பலியாக மாட்டார் என்பதை உணர்ந்துக் கொண்டார். ஆயினும் தமது சூழ்ச்சியை மட்டும் கைவிடவில்லை. அவர், தமக்கும் ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் இடையில் நடந்த கடித தொடர்புகளை முற்றிலுமாக மறைத்து விட்டார். பிறகு, “கைஸ் எனது நண்பராக இருக்கிறார். கடிதங்கள் மூலமும், ஒற்றர்கள் மூலமும் என்னுடன் தொடர்பு கொண்டுள்ளார். முக்கியமான விஷயங்களில் எனக்கு ஆலோசனைகளையும் எழுதி அனுப்புகிறார். அவருக்கு சம்பளம் ஒழுங்காக அவருக்கு வழங்கப்பட்டு வருகிறது. மேலும் அவர் கண்ணியத்துடனும் நடத்தப்படுகிறார்” என்று சிரியா மக்களிடையே செய்தி பரப்பினார். (தாரீக் இப்னு கல்தூன், பா 1, பக் 406)

அந்த சமயத்தில் ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் முஹம்மத் இப்னு ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் உளவு பார்க்கும் நோக்கத்தோடு சிரியாவுக்கு வந்திருந்தார்கள். அவர்கள் முஆவியா ரலி பரப்பியிருந்த வதந்தியையும் செவியுற்றனர். பிறகு அவர்கள் கூபா திரும்பியதும் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்

அவர்களிடம் சென்று, தாம் செவியுற்றதைக் கூறினர். அமீருல் முஃமினீன் அவர்கள் தமது திருப் புதல்வர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோருடன் ஆலோசனை செய்தார்கள்.

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்,"ஹழரத் கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை எகிப்தின் ஆளுநர் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, வேறு ஒருவரை ஆளுநராக நியமிக்கும்படி ஆலோசனை கூறினார்கள். ஆயினும் அமீருல் முஃமினீன் அவர்கள், "எனக்கு ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது நம்பிக்கை இருக்கிறது. அவர் எனக்கு துரோகம் செய்ய மாட்டார் என்று கூறினார்கள். ஆயினும், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மீண்டும் மீண்டும் வற்புறுத்தவே, ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை எகிப்தின் ஆளுநர் பதவியிலிருந்து நீக்கியும், அவருக்கு பதிலாக ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை புதிய ஆளுநராக நியமித்தும் உத்தரவு பிறப்பித்தார்கள்.

ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் எகிப்தை அடைந்து அமீருல் முஃமினீன் அவர்களின் உத்தரவை ஹழரத் கஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கொடுத்தார்கள். அந்த உத்தரவைக் கண்டு ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மிகவும் மன வருத்தமடைந்தார்கள். அவர்கள் எகிப்தை விட்டும் வெளியேறி புனித மதீனாவை வந்தடைந்தார்கள். அங்கு மர்வான் இப்னு ஹகம் இருந்தான். அவன் ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை மிரட்டினான், தொல்லையும் கொடுத்தான். எனவே, ஹழரத் கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் புனித மதீனாவை விட்டும் வெளியேறி கூபாவுக்கு வந்தார்கள்.

கூபா வந்த ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை சந்தித்தார்கள். எகிப்தில் நடந்த நிகழ்வுகளையும் கூறினார்கள். அதைக் கேட்டு சந்தோஷமடைந்த அமீருல் முஃமினீன் அவர்கள், அதன் பிறகு ஒவ்வொரு விஷயத்திலும் ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆலோசனைகளைப் பெறத் தொடங்கினார்கள்.

ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடன் இணைந்து விட்ட செய்தியை அறிந்த முஆவியா ரலி , மர்வான் இப்னு ஹகமுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், "நீர் ஹழரத்

கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், அமீருல் முஃமினீன் அவர்களும் இணைவதற்கு காரணமாக இருந்ததை விட, ஒரு இலட்சம் வீரர்களுடன் ஹழரத் அலீ அவர்களுக்கு உதவி செய்திருக்கலாம்" என்று எழுதியிருந்தார். (தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 407)

## அம்ரு இப்னு ஆஸ் (ரலி):

ஹழரத் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், இரண்டாம் கலீஃபா ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக் காலத்தில் எகிப்தை வெற்றி கொண்டவர். அவர், எகிப்தியர்கள் புனித மதீனாவுக்கு வந்து ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வீட்டை முற்றுகையிட்ட போது புனித மதீனாவில்தான் இருந்தார். ஆயினும், எகிப்தியர்களின் முறையற்ற கிளர்ச்சிகளையும், முற்றுகைப் போராட்டங்களையும் கண்டு, புனித மதீனாவை விட்டும் வெளியேறி, பைத்துல் முகத்தஸில் வசிக்கத் தொடங்கினார்.

அதன் பிறகு, ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலைப் பற்றியும், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப் பட்டதையும், அவர்கள் கொலைகாரர்களை தண்டிப்பதில் மெத்தன போக்கு காட்டுவதையும்  அறிந்தார்கள். பிறகு, உம்முல் முஃமினீன் ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் ஹழரத் தல்ஹா ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் ஜுபைர் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோரும் பஸராவை நோக்கிச் செல்வதையும் அறிந்தார்கள். முஆவியா ரலி ,ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு பைஅத் செய்வதை நிராகரித்ததையும் அறிந்தார். பிறகு, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் பஸரா சென்றதையும், ஜமல் போர் நடந்ததையும், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பஸராவின் ஆளுநராக நியமிக்கப் பட்டதையும் அறிந்தார்.

மேலும், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் சிரியா மீது போர்த்தொடுக்க முயற்சி செய்வதையும், முஆவியா ரலி அவர்களும் போருக்கு தயாராவதையும் அறிந்தார்.

எனவே, ஹழரத் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மிகவும் சந்தோஷமாக சிரியா நோக்கிப் புறப்பட்டார்கள். திமிஷ்க் (டமாஸ்கஸ்) சென்று முஆவியா ரலி அவர்களையும் சந்தித்தார். இருவரும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலைக்கு பழி வங்க வேண்டியதன் அவசியம் பற்றி பேசினார்கள். அத்துடன் ஹழரத் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு

அன்ஹு அவர்கள் பல்வேறு ஆலோசனை களையும் முஆவியா ரலி க்கு கூறினார்.

“ஒவ்வொரு நாளும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் இரத்தம் தோய்ந்த ஜுப்பாவையும், அவருடைய துணைவியாரின் விரல்களையும் திமஷ்கில் உள்ள ஜாமிஆ பள்ளிவாசல் மேடை மீது வைத்தால், அதன் அருமை மக்கள் மனங்களில் கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து விடும். எனவே, முக்கியமான நாட்களில் மட்டும் அவற்றை மக்கள் பார்வைக்கு வைக்கலாம்” என்று ஆலோசனை கூறினார். அந்த ஆலோசனை முஆவியா ரலி க்கு பிடித்திருந்தது.

ஜமல் போருக்குப் பிறகு அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் படை பலவீனப்பட்டு விட்டது. எப்படியெனில், ஜமல் போரில் அமீருல் முஃமினீன் அவர்களின் பஸரா படையில், சுமார் எட்டாயிரத்திற்கும் அதிகமான வீரர்கள் கொல்லப் பட்டு விட்டனர். அவர்களில் முக்கிய தலைவர்கள் பலரும் இருந்தனர், என்றும் ஹழரத் அம்ரு ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்.

மேலும், இப்போது பஸராவாசிகள் அமீருல் முஃமினீன் அவர்களுக்கு பைஅத் செய்துள்ளனர். ஆயினும் பஸராவாசிகளிடமும், கூபாவாசிகளிடமும் இணக்கமான சூழ்நிலை இல்லை. அவர்கள் ஒற்றுமையுடன் சேர்ந்து போர் புரிவார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. மொத்த படை வீரர்களும் ஒற்றுமையோடு அமீருல் முஃமினீன் அவர்களுக்காக போர் புரியும் நிலையும் தெரியவில்லை. படை வீரர்களின் மனங்களில் வேற்றுமையின் சாயல் தென்படுகிறது என்றும் கூறினார். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 559)

## புறப்பாடு:

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் பஸராவிலிருந்து ஒரு படையுடன் புறப்பட்டார்கள். இந்த செய்தி கிடைத்தவுடன் கூபாவிலிருந்து அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் புறப்பட்டார்கள். கூபாவின் பொறுப்பாளராக ஹழரத் அபூ மஸ்ஊத் அன்ஸாரி அவர்களை நியமித்தார்கள். நகீலா என்னுமிடத்தை அடைந்து, படைகளை சீர் படுத்தினார்கள். அந்த இடத்திற்கு ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்களும் தமது படையுடன் வந்து சேர்ந்தார்கள்.

அங்கிருந்து ஹழரத் ஜியாத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை எட்டாயிரம் படை வீரர்களுடன் முதலில் அனுப்பி வைத்தார்கள். அவருக்குப் பின்னால், ஹழரத் ஷுரைஹ் பின் ஹானீ அவர்கள்

தலைமையில் நான்காயிரம் படை வீரர்களுடன் அனுப்பி வைத்தார்கள். அதன் பிறகு, மீதமிருந்த படை வீரர்களுடன் அமீருல் முஃமினீன அவர்களும் மதாயின் நோக்கி புறப்பட்டார்கள்.

மதாயினிலிருந்து ஹழரத் மஅகல் இப்னு கைஸ் அவர்கள் தலைமையில் மூவாயிரம் படை வீரர்களுடன் முன்னால் அனுப்பி வைத்தார்கள். அவருக்குப் பின்னால் அமீருல் முஃமினீன் அவர்களும் புறப்பட்டு, ருஉபா நோக்கிச் சென்றார்கள். ருஉபா என்னும் இடத்தில் புராத் நதியை (யுப்ரடீஸ்) கடந்தார்கள். நதியைக் கடந்த இடத்தில், ஹழரத் ஜியாத் அவர்களின் படையும், ஹழரத் ஷுரைஹ் அவர்களின் படையும், ஹழரத் மஅகல் அவர்களின் படையும் ஒன்று சேர்ந்திருந்தன.

அங்கு, பெரும் படையுடன் அமீருல் முமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் சிரியாவை நோக்கி வந்துக் கொண்டிருக்கிறார்கள் என்னும் செய்தியை அறிந்த முஆவியா ரலி , தமது படையையும் தயார் படுத்தினார். பிறகு அபுல் அவூர் அஸ்லமீ என்பவர் தலைமையில் ஒரு படைப் பிரிவை முன்னே அனுப்பி வைத்தார்.

ஹழரத் ஜியாத் மற்றும் ஷுரைஹ் பின் ஹானீ ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரின் படைகள் சிரியாவின் எல்லையை அடைந்த போது, முஆவியா ரலி வின் படை முன்னோக்கி வந்துக் கொண்டிருப்பதை அறிந்தார்கள். உடனே இச்செய்தியை அமீருல் முஃமினீன் அவர்களுக்கு தெரிவித்தார்கள்.

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் உடனே ஹழரத் அஷ்தர் அவர்களை அழைத்து, "நீங்கள் உடனே இங்கிருந்து புறப்பட்டுச் செல்லுங்கள். முஆவியா ரலி அவர்களின் படை, ஹழரத் ஜியாத் மற்றும் ஹழரத் ஷுரைஹ் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரின் படைகளை நெருங்கும் போது, மொத்த படைகளுக்கும் நீங்களே தலைமை ஏற்றுக் கொள்ளுங்கள். ஹழரத் ஜியாத் மற்றும் ஹழரத் ஷுரைஹ் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் வலது மற்றும் இடது புற படைப் பிரிவுகளுக்கு தலைமை தாங்கட்டும். மேலும், சிரியாவின் படைகள் உங்களை தாக்காத வரை நீங்கள் அவர்களை தாக்க வேண்டாம்" என்று கூறினார்கள்.

அமீருல் முஃமினீன் அவர்களின் உத்தரவுப்படியே ஹழரத் அஷ்தர் அவர்கள் மொத்த படைகளின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். அதே சமயம் முஆவியா ரலி அவர்களின் படையும் எதிரே வந்து பாளையம் இறங்கின. மாலை வரை இரு படைகளும் ஒன்றை ஒன்று பார்த்துக் கொண்டே இருந்தன. மாலையில் இரு படைகளும் சிறிது நேரம் மோதிக் கொண்டன. பிறகு இரு படைகளும் விலகிச் சென்றுவிட்டன.

## போரின் ஆரம்ப நிலை:

மறுநாள் காலையில் முஆவியாவின் படையிலிருந்து அபுல் அவூர் என்பவன் முன் வந்து நின்றான். அவரை எதிர்க்க அமீருல் முஃமினீன் புறத்திலிருந்து ஹழரத் ஹாஷிம் இப்னு உத்பா அவர்கள் முன்னே வந்தார்கள். அஸர் வரை இருவரும் சண்டையிட்டுக் கொண்டார்கள். அதன் பிறகு சண்டையை நிறுத்துவிட்டு, இரு தரப்பும் போரிட்டுக் கொண்டன. இரவின் இருள் சூழ்ந்ததும், இரண்டு படைகளும் சண்டையை நிறுத்திவிட்டு, தத்தம் படைகளுக்கு திரும்பின.

அதற்கும் மறுநாள் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும் தமது படையுடன் போர்க்களத்திற்கு வந்து சேர்ந்து விட்டார்கள். முஆவியா ரலி அவர்களும் பெரும் படையுடன் வந்து சேர்ந்தார். அந்த சூழ்நிலையில் அமீருல் முஃமினீன் அவர்கள் போரை நிறுத்திவிட்டார்கள். ஹழரத் அஷ்தர் அவர்களை அழைத்து, “நீங்கள் உடனே ஒரு படையுடன் புராத் (யூப்ரடீஸ்) நதிக்குச் சென்று, அதை உமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வாருங்கள்.” என்று கூறினார்கள்.

ஹழரத் அஷ்தர் அவர்கள் படையுடன் வந்து சேரும் முன்பே, முஆவியா ரலி ஒரு படையுடன் வந்து புராத் நதியை தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட்டிருந்தார். அதைக் கண்ட ஹழரத் அஷ்தர் அவர்கள், அந்த விஷயத்தை அமீருல் முஃமினீன் அவர்களுக்கு தெரிவித்தார்கள். உடனே அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் செய்தி ஒன்றை தூதுவர் மூலமாக முஆவியா ரலி அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அதில்,

“நாம் உம்முடைய பொய்யான சாக்கு போக்குகளை கேட்காமலும், நேர்வழியின் பக்கம் அழைக்காமலும் சண்டையை தொடங்கியிருக்க மாட்டோம். ஆனால் உம்முடைய ஆட்கள் அவசரப்பட்டு சண்டையை தொடங்கி விட்டார்கள். இப்போதும் நாம் முதலில் இறை வழியின் பக்கம் அழைப்பதையும், அது பற்றி வாதம் புரிவதையுமே விரும்புகிறோம். ஆனால் வருத்தமான விஷயம் என்னவென்றால், நீங்கள் புராத் நதிக்கரையை ஆக்கிரமித்து, எங்கள் மீது தண்ணீரையும் தடை செய்து விட்டீர்கள். எமது வீரர்கள் தாகத்தினால் தவிக்கிறார்கள். முக்கிய போரில் வெற்றி தோல்வி காணும் வரை எமது வீரர்கள் தண்ணீரை எடுக்க அனுமதிக்கும்படி உங்கள் வீரர்களுக்கு உத்தரவிடுங்கள். மாறாக, முக்கிய போருக்கு முன்னால் தண்ணீருக்காகவும் போர் புரிய வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அதற்கும் நாம் தயாராக இருக்கிறோம்” என்று கூறியிருந்தார்கள். தாரீக் இஸ்லாம், பாகம்1, பக்கம் 560, தாரீக் இப்னு கல்தூன், பா 1, பக் 410

இந்த செய்தியை படித்ததுமே முஆவியா ரலி தமது ஆலோசனை சபையைக் கூட்டினார். அமீருல் முஃமினீன் அவர்களின் செய்தி பற்றியும் கூறினார். உடனே, முன்னாள் எகிப்தின் ஆளுநர் அப்துல்லாஹ் இப்னு ஸஅத் மற்றும் வலீத் இப்னு உக்பா ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர், "நாம் தண்ணீர் மீதுள்ள தடையை விலக்கக் கூடாது. அவர்களை தாகத்தால் தவிக்கவிட்டே சாகடிக்க வேண்டும். ஏனெனில், அவர்களும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை தாகத்தால் தவிக்கவிட்டே கொன்றார்கள்" எனக் கூறினர்.

அதற்கு மாறாக, ஹழரத் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "எக்காரணம் கொண்டும் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் படை வீரர்கள் மீது தண்ணீரை தடை செய்யக் கூடாது. வீரர்களுக்கு சிரமமும் கொடுக்கக் கூடாது" என்று கூறினார்.

அந்த ஆலோசனைக் கூட்டத்தில் நடந்த விஷயங்கள் அனைத்தும் அமீருல் முஃமினீன் அவர்களுக்கு தெரிய வந்தன. உடனே அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஹழரத் அஷ்அஸ் இப்னு கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தலைமையில் ஒரு படையைக் கொடுத்து, "நீங்கள் புராத் நதிக்கரை மீதுள்ள ஆக்கிரமிப்பை அகற்றி, உங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வாருங்கள்" என உத்தரவிட்டார்கள்.

முஆவிய ரலி தரப்பிலிருந்து அபுல் அவூர் ஒரு படையுடன் முன் வந்தான். சிறிது நேரத்தில் போரும் தொடங்கியது. இரண்டு பக்கத்திலிருந்தும் அம்புகள் எய்யப்பட்டன. வாட்கள் மோதிக் கொண்டன. தலைகள் வெட்டப்பட்டன. இரத்தமும் சிந்தப்பட்டது. ஆயினும் எந்த ஒரு முடிவும் ஏற்படவில்லை.

அதே சமயம், ஹழரத் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், முஆவியா ரலி அவர்களிடம் வந்து, "நீங்கள் தண்ணீர் மீதுள்ள தடையை நீக்காமல், அமீருல் முஃமினீன் அவர்களுக்கும், அவர்களது வீரர்களுக்கும் கஷ்டம் கொடுத்து, அவர்கள் தாகத்தால் தவிப்பதையும், துடிப்பதையும் உங்கள் வீரர்கள் பார்த்தால், நிச்சயமாக அவர்களது உள்ளங்களில் இரக்கம் ஏற்படும். உங்கள் மீது வெறுப்பும் ஏற்படும். பிறகு அவர்கள் உங்கள் படையிலிருந்தும் விலகி, அமீருல் முஃமினீன் அவர்களின் படையில் சேர்ந்து விடுவார்கள். உங்களுக்கு எதிராகவும் போர் புரிவார்கள்" என்று விளக்கினார்கள்.

அதைக் கேட்டதுமே, முஆவியா ரலி அவர்கள், எதிரிப் படைகள் மீதுள்ள தடையை விலக்கிக் கொள்ளும்படி தமது வீரர்களுக்கு அறிவிப்பு செய்தார்கள். அதன் மூலம் தண்ணீர் பிரச்சினையும் முடிவுக்கு வந்தது.

அதன் பிறகு இரண்டு நாட்கள் அமைதியாக கழிந்தன. அந்த சமயத்தில் அமீருல் முஃமினீன் அவர்களது படையில் புனித மக்கா, யமன், ஹமதான் மற்றும் அரபு உலகின் பல பகுதிகளிலிருந்தும் படைகள் வந்து சேர்ந்துக் கொண்டன. அதைப் போலவே ஈரானின் பல மாநிலங்களிலிருந்தும் வீரர்கள் வந்து சேர்ந்தனர். அதனால், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் படையின் மொத்த எண்ணிக்கை 90,000 ஆக உயர்ந்தது. முஆவியா ரலி அவர்களின் படை வீரர்களின் எண்ணிக்கை 80,000 ஆக இருந்தது.

இரண்டு படைகளின் முதன்மைத் தளபதிகளாக அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களும், முஆவியா ரலி அவர்களும் இருந்தனர். இரண்டு படைகளிலும் தளபதிகள் நியமிக்கப் பட்டனர். அமீருல் முஃமினீன் அவர்களின் படையில் கூபாவின் குதிரைப் படைக்கு ஹழரத் அஷ்ரத் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், பஸராவின் குதிரைப் படைக்கு ஹழரத் ஸஹல் இப்னு ஹனீஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், கூபாவின் காலாட் படைக்கு ஹழரத் அம்மார் இப்னு யாஸிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், பஸராவின் காலாட் படைக்கு ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் அவர்களும் தளபதிகளாக நியமிக்கப்பட்டனர். ஹழரத் ஹாஷிம் இப்னு உத்பாவிடம் படையின் கொடி வழங்கப்பட்டது. மற்ற பகுதிகளிலிருந்தும், மாநிலங்களிலிருந்தும் வந்த படைகளுக்கு, அவர்களிலிருந்தே தலைவர்கள் நியமிக்கப் பட்டனர்.

முஆவியா ரலி அவர்களின் தரப்பில் தமஷ்க் (டமஸ்கஸ்) குதிரைப் படைக்கு ஹழரத் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், காலாட் படைக்கு முஸ்லிம் இப்னு உக்பா அவர்களும் தளபதிகளாக நியமிக்கப்பட்டனர். முக்கிய தளபதியாக அபுல் அவூர் ஸலமீ நியமிக்கப்பட்டார். மற்ற படைகளுக்கு அப்துர் ரஹ்மான் இப்னு காலித், உபைதுல்லாஹ் இப்னு அம்ர், பஷீர் இப்னு மாலிக் போன்றவர்கள் நியமிக்கப்பட்டனர்.

இரண்டு நாட்கள் அமைதியாக கழிந்த பிறகு, மூன்றாவது நாளில் ஹிஜ்ரி 36, துல் ஹஜ் மாதம் முதல் நாள், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் சமாதானப் பேச்சுவார்த்தை நடத்த ஒரு அமைதிக் குழுவை ஏற்படுத்தி முஆவியா ரலி அவர்களிடம் அனுப்பினார்கள். அந்த குழுவில், ஹழரத் பஷீர் இப்னு அம்ரு அன்ஸாரி, ஹழரத் ஸயீத் இப்னு கைஸ், ஹழரத் ஷீத் இப்னு ரப்ஈ போன்றவர்கள் இருந்தனர்.

அமைதிக் குழுவினர் முஆவியா ரலி அவர்களிடம் வந்ததும், ஹழரத் பஷீர் இப்னு அம்ரு அவர்கள் “முஆவியாவே! நீர் முஸ்லிம்களிடையே பிளவையும், குழப்பத்தையும் ஏற்படுத்தாதீர்.

முஸ்லிம்கள் இரத்தம் சிந்தவும் காரணமாக இருக்காதீர்” என்று கூறினார். உடனே முஆவியா ரலி அவர்கள், “இந்த அறிவுரையை உமது நண்பர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கும் கூறினீர்களா?” என்று கேட்டார்.

“அவர்கள் இஸ்லாத்தை முந்தி ஏற்றவர்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் நெருங்கிய உறவினர். அதனால் அவர்கள் கலீஃபா பதவிக்கு தகுதியானவரே! அதனால் முஆவியாவே! நீர் உடனே அவருக்கு பைஅத் செய்யும்” என்று ஹழரத் பஷீர் அவர்கள் மீண்டும் கூறினார்.

“அது மட்டும் எந்த காரணத்தைக் கொண்டும், எந்த காலத்திலும் நடக்காது” என்று முஆவியா ரலி அவர்கள் கூறினார்.

அப்போது ஹழரத் ஷீத் இப்னு ரப்ஈ அவர்கள், “நீர் நினைத்திருந்தால் மதீனாவில் கிளர்ச்சி யாளர்களிடமிருந்து ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை காப்பாற்றி இருக்கலாம். ஆனால் காலதாமதம் செய்தாய். காரணம், அவர் படுகொலை செய்யப்பட்டால், அதையே காரணம் காட்டி கலீஃபா ஆகிவிடலாம் என கணக்குப் போட்டாய். உங்கள் கெட்ட எண்ணத்தை நாங்கள் அறிவோம்” என்று கடுமையாகக் கூறினார். அதற்கு முஆவியா ரலி அவர்களும் கடுமையாக பதில் கூறினார். கடைசியாக எந்த ஒரு முடிவும் எடுக்கப் படாமலேயே தூதுக் குழுவினர் திரும்பினர்.

## போரின் முதல் நிலை:

அமைதிப் பேச்சு வார்த்தை தோல்வியடைந்ததை அடுத்து, வேறு வழியின்றி போரும் தொடங்கியது. ஆயினும் காஃபிர்களை எதிர்த்து போர் புரிந்தது போன்ற வேகம் அதில் இருக்கவில்லை. காரணம், இரண்டு தரப்பிலும் இருந்த வீரர்கள் ஒருவருக்கொருவர் உறவினர்களாகவும், நண்பர்களாகவும், சிறப்பானவர்களாகவும் இருந்தார்கள். எனவே, போரைத் தவிர்த்து அமைதி ஏற்படுவதையே அனைவரும் விரும்பினர். எனவே, முதலில் இரண்டு படைகளிலிருந்தும் ஒருவர் ஒருவராக முன் வந்து சண்டை போட்டனர். அதை இரு தரப்பு வீரர்களும் வேடிக்கைப் பார்த்தார்கள். இப்படியே சில நாட்கள் கழிந்தன.

அடுத்த கட்டமாக, இரு தரப்பிலிருந்தும் ஒவ்வொரு தலைவர் தமது படையுடன் முன் வந்து சண்டை போட்டார்கள். அதை மற்ற இரு தரப்பு வீரர்களும் வேடிக்கைப் பார்த்தார்கள். இவ்விதம் ஒரு மாதம் கழிந்தது. இதற்கிடையே முஹர்ரம் மாதமும் ஆரம்பமானது. அந்த மாதமும் போர் ஏதுமின்றி கழிந்தது. இந்த அமைதிக் காலத்தில் இரு தரப்பு வீரர்களின் மனநிலையிலும் மாற்றங்களும், சோர்வும் ஏற்பட்டன. இரு தரப்பு வீரர்களும் போரை வெறுத்துவிட்டு,

அமைதியையும், சமாதானத்தையுமே விரும்பத் தொடங்கினார்கள். இதே நிலை தொடர்ந்திருந்தால் இரு தரப்பு வீரர்களும் போர் புரியவே விரும்பி இருக்க மாட்டார்கள்.

ஆனால், படைகளில் புகுந்திருந்த ஸபா கூட்டத்தினர் இரு தரப்பு வீரர்களின் மனங்களிலும் பகையை தூண்டிவிட்டார்கள். போர் புரிவதில் ஆர்வமூட்டினார்கள். அவர்களின் சூழ்ச்சிக்கு முன்னால் உறவு, நட்பு, சிறப்பு ஆகிய அனைத்துமே சிதைந்து போயின. எனவே இரு தரப்பினரும் அடுத்த போருக்கு தயாராகி நின்றனர். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 562, தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 410.)

இரண்டு மாத அமைதிக்குப் பிறகு ஹிஜ்ரி 37ல், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் மீண்டும் ஒரு குழுவை ஏற்படுத்தி அமைதிப் பேச்சுவார்த்தை நடத்த முஆவியா ரலி அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். அக்குழுவில் ஹழரத் அதீ இப்னு ஹாத்திம், ஹழரத் ஜைத் இப்னு கைஸ், ஹழரத் ஸியாத் இப்னு ஹஸ்ஃபா, ஹழரத் ஷீத் இப்னு ரப்ஈ ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர்.

முஆவியா ரலி அவர்களின் அவைக்கு வந்ததும், ஹழரத் அதீ இப்னு ஹாத்திம் அவர்கள் முதலில் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் பேரில் தரூத் மற்றும் ஸலாம் கூறினார்கள். பிறகு, "முஆவியாவே! நீர் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் கிலாஃபத்தை ஏற்றுக்கொள். நீர் அவ்விதம் செய்தால் முஸ்லிம்களிடையே உள்ள பகை ஒழிந்து, ஒற்றுமை ஏற்படும். உம்மையும் உமது தோழர்களையும் தவிர வேறு எவரும் அமீருல் முஃமினீன் அவர்களின் கிலாஃபத்தை புறக்கணிக்கவில்லை. நீர் அமீருல் முஃமினீன் அவர்களை எதிர்க்கவே விரும்பினால், ஜமல் போரில் ஸஹாபாக்களுக்கு ஏற்பட்ட நிலைதான் உனக்கும் ஏற்படும்" என்று கூறினார்.

அதைக் கேட்டதும் முஆவியா ரலி அவர்கள், "அதீயே! நீர் அமைதிப் பேச்சுவார்த்தை நடத்த வந்தீரா? அல்லது சண்டை போட வந்தீரா? நீர் ஜமல் போரைப் பற்றி கூறி என்னை மிரட்டுகிறீரா? நானும் ஹரபுடைய பேரன்தான். எனக்கு போரைப்பற்றி எவ்வித கலக்கமும் இல்லை. மேலும், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கொலை செய்தவர்களில் நீரும் ஒருவர் என்பதையும் நான் அறிவேன். அல்லாஹ் உம்மையும் கொலை செய்ய வைப்பான்" என்று கடுமையாகக் கூறினார்.

அப்போது ஹழரத் ஜைத் இப்னு கைஸ் அவர்கள், "நாங்கள் தூதுக் குழுவினர். நாங்கள் உமக்கு அறிவுரை கூற இங்கு வரவில்லை.

ஆயினும் முஸ்லிம்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்தவே விரும்புகிறோம். முயற்சியும் செய்கிறோம்" என்று கூறிவிட்டு, அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுடைய சிறப்புகளைக் கூறத் தொடங்கினார்கள்.

அவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த முஆவியா ரலி அவர்கள், "நீர் என்ன என்னை உம் பக்கம் அழைப்பது? என்னிடமும் பெரிய ஜமாஅத் இருக்கிறது. மேலும் நான் உமது நண்பரை கிலாஃபத்துக்கு தகுதியானவராக நினைக்கவில்லை. அவரும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கொலை செய்தவர்களில் ஒருவர்தான். கொலை செய்தவர்களை பாதுகாத்தவர்தான். ஆயினும் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை கொலை செய்தவர்களை என்னிடம் ஒப்படைத்தால் அமைதிப் பேச்சுவார்த்தை நடத்தலாம்" என்று கூறினார்.

அப்போது ஹழரத் ஷீத் இப்னு ரப்ஈ அவர்கள், "முஆவியாவே! அப்படியானால் நீர் ஹழரத் அம்மார் இப்னு யாஸிர் அவர்களையும் கொலை செய்வாயோ?" என்று கேட்டார்கள்.

அதற்கு முஆவியா ரலி அவர்கள், "நிச்சயமாக கொல்வேன். நான் அவரை கொலை செய்ய நாடினால், யாரால் என்னை தடுக்க முடியும்? நான் அவரை ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் அடிமைக்கு ஈடாக கொலை செய்வேன்" என்று கூறினார்.

உடனே ஹழரத் ஷீத் இப்னு ரப்ஈ அவர்கள், "பூமி உன்னை நெருக்கும் வரை நீ அதற்கு சக்தி பெறமாட்டாய்" என்று கூறினார்கள்.

அப்படிப்பட்ட கடுமையான பேச்சுக்களால் அமைதிக்கான தூதுக் குழுவினர் மீண்டும் தோல்வியுடன் திரும்பினர்.

அதன் பிறகு முஆவியா ரலி அவர்களும் ஹபீப் இப்னு முஸ்லிமா, ஷர்ஜீல் இப்னு அஸ்மத், முஅஸ்ஸின் பின் ஜைது ஆகியோர் அடங்கிய ஒரு தூதுக் குழுவை அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம் அனுப்பினார்.

ஹபீப் இப்னு முஸ்லிமா வந்ததுமே அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களிடம், "ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நேர்வழியிலேயே இருந்தார்கள். உண்மையான கலீஃபாவாகவும் இருந்தார்கள். அவர்கள் திருமறைபடியும், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் நடைமுறை படியும் ஆட்சி செய்தார்கள். அதைப் பொறுத்துக் கொள்ள உங்களால் முடியவில்லை. அவர் உயிருடன் இருந்ததும் உமக்குப் பிடிக்கவில்லை. எனவே அவரை கொலை

செய்துவிட்டீர்கள். நீங்கள் கொலை செய்யவில்லை என்றால், கொலையாளர்களை எங்களிடம் ஒப்படைத்து விடுங்கள். பிறகு கிலாஃபத்தை விட்டும் விலகிவிடுங்கள். முஸ்லிம்கள் யாரை விரும்புகிறார்களோ அவரை கலீஃபாவாக தேர்வு செய்துக் கொள்ளட்டும்" என்று கூறினார்.

அந்த பேச்சைக் கேட்டதும் பொறுமைக் கடலாம் அமீருல் முஃமினீன் அவர்களுக்கே கோபம் வந்துவிட்டது! உடனே அவர்கள், "நீ பேசுவதை நிறுத்து! கிலாஃபத்தைப் பற்றி இவ்விதம் பேச உனக்கு எவ்வித உரிமையும் இல்லை" என்று கூறினார்கள். அதற்கு ஹபீப், "அப்படியானால் நீர் விரும்பாத ஒரு நிலையில் (போர்களத்தில்) என்னை நீர் பார்ப்பீர்கள்" என்றான்.

"போ! உன் மனம் விரும்பியபடியே செய்துக் கொள்" என்று கூறிய அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், எழுந்து நின்றார்கள். முதலில் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பிறகு, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் நபியாக அனுப்பப்பட்டது பற்றி விளக்கினார்கள். கலீஃபாக்கள் ஹழரத் அபூபக்கர் மற்றும் ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரின் சிறப்புகளை விளக்கிக் கூறினார்கள். பிறகு, "நான் அந்த இரு கலீஃபாக்களும் தமது கடமையை சிறப்பாக நிறைவேற்றியதைப் பார்த்தேன். அதனாலேயே, நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் நெருங்கிய உறவினராக இருந்தும் அவர்களுடைய கிலாஃபத்தில் எவ்வித குறுக்கீடும் செய்யாமல், உதவியும் செய்து வந்தேன்.

அதன் பிறகு ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கலீஃபாவாக தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர் தமது பிந்தய ஆட்சியில் மக்களின் பகைக்கும், வெறுப்புக்கும் ஆளானார்கள். அதனால் அவர்கள் கொலை செய்யப்பட்டார்கள். அடுத்து என்னை கலீஃபாவாக தேர்வு செய்தார்கள். எனக்கு பைஅத் செய்த பிறகு தல்ஹாவும், ஜுபைரும் பைஅத்தை முறித்துக் கொண்டார்கள். முஆவியாவும் எனக்கு எதிராக நின்றார். ஆயினும் அவர் இஸ்லாத்தை ஏற்றவர்களில் முந்தியவர் இல்லை. ஆயினும் நீங்கள் அவருக்கு பணிந்து போவதும், பேசுவதும் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நான் திரு மறையையும், திரு நபியின் மொழிகளையும், விளக்கிக் கூறுகிறேன். சத்தியம், மற்றும் நன்மையின் பக்கம் அழைக்கவும் முயற்சி செய்கிறேன்" என்று கூறினார்கள்.

அந்த விளக்கத்தைக் கேட்ட பின், தூதுக் குழுவின் மூன்று உறுப்பினர்களும் அங்கிருந்து கிளம்பிச் சென்றார்கள். அமைதிக்கான அந்த முயற்சியும் வீணாய்ப் போனது. (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 566.)

அதன் பிறகு அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஸபர் மாதம் தொடங்கி போர் ஆரம்பம் செய்யலாம் என முடிவு செய்தார்கள். அதற்கான அறிவிப்பையும் வெளியிட்டார்கள். மேலும், தமது வீரர்களிடம், “நீங்கள் போர்க்களத்தில் ஓடிப் போவோரை விரட்டிச் செல்லக் கூடாது, அவர்களை கொல்லவும் கூடாது. காயம் பட்டவர்களின் பொருளை பறிக்கக்கூடாது. பெண்கள் உங்களை திட்டினாலும் அவர்களுக்கு எவ்வித கஷ்டத்தையும் கொடுக்கக்கூடாது” என்று அறிவுரைகளையும் கூறினார்கள்.

ஸபர் மாதம் முதல் தேதி முக்கிய போர் தொடங்கியது. அன்றைய தினம் அமீருல் முஃமினீன் அவர்களின் படையிலிருந்து கூபாவை சேர்ந்தவர்கள் ஹழரத் அஷ்தர் அவர்கள் தலைமையிலும், முஆவியா ரலி அவர்களின் புறத்திலிருந்து ஹபீப் இப்னு முஸல்லிமா தலைமையிலும் போர் போர் புரிந்தார்கள். மாலை வரை அப்போர் நடந்தது. ஆயினும் எந்த ஒரு முடிவும் ஏற்படவில்லை.

இரண்டாம் நாள் அமீருல் முஃமினீன் தரப்பிலிருந்து ஹழரத் ஹாஷிம் பின் உத்பா அவர்கள் தலைமையில் காலாட்படையும், குதிரைப் படையும் கிளம்பிச் சென்றனர். சிரியா படையிலிருந்து அபுல் அவூர் ஸலமீ தலைமையில் படை முன் வந்தது. அன்றும் மாலைவரை போர் நடந்தது. ஆயினும் வெற்றி தோல்வி இன்றி போர் முடிவுக்கு வந்தது.

மூன்றாம் நாள் அமீருல் முஃமினீன் அவர்கள் தரப்பிலிருந்து ஹழரத் அம்மார் பின் யாஸிர் அவர்கள் தலைமையிலும், முஆவியா ரலி அவர்கள் தரப்பிலிருந்து அம்ரு இப்னு ஆஸ் தலைமையிலும் படைகள் முன்வந்து போரிட்டன. அன்று போர் கடுமையாக இருந்தது. மாலையில் ஹழரத் அம்மார் அவர்கள் பயங்கர தாக்குதல் ஒன்றை நடத்தினார்கள். அந்த தாக்குதலால் அம்ரு இப்னு ஆஸ் அவர்கள் கதி கலங்கிப் போனார். அன்றும் எந்த முடிவும் எட்டப்படவில்லை.

நான்காவது நாள் முஆவியா ரலி அவர்கள் தரப்பிலிருந்து உபைதுல்லாஹ் இப்னு உமரும், அமீருல் முஃமினீன் அவர்கள் தரப்பிலிருந்து அன்னாரின் திருப் புதல்வர்களில் ஒருவரான ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா ரலியல்லாஹு அன்ஹு (தாயார் பெயர் ஹழரத் கவ்லா பின்த் ஜவ்ஃபர்) அவர்களும் போருக்கு முன்வந்தனர். அன்றும் கடுமையான போர் நடந்தது. ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆக்ரோஷமாக போரிட்டார்கள். மாலையில் உபைதுல்லாஹ் இப்னு உமர், ஹழரத் ஹனபியா அவர்களை படையிலிருந்து விலகி ஒண்டிக்கு ஒண்டி சண்டை போட அழைத்தார். அதை ஏற்று வீர தீரத்துடன் ஹழரத் ஹனபியா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தனித்து கிளம்பினார்கள். அதைப் பார்த்த அமீருல் முஃமினீன் அவர்கள் தமது குதிரையை தட்டிவிட்டு ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா

ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அருகில் வந்து, அவரை தடுத்துவிட்டார்கள். அமீருல் முஃமினீன் அவர்களைக் கண்ட உபைதுல்லாஹ்வும் தமது படைக்கு திரும்பி வந்தார்.

ஐந்தாம் நாள், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் தரப்பிலிருந்து ஹழரத் வலீத் இப்னு உத்பா அவர்கள் முன்வந்தார்கள். அன்றும் கடுமையாக போர் நடந்தது.

ஆறாவது நாள், இந்த பகுதியிலிருந்து ஹழரத் அஷ்தர் அவர்களும், அந்த பகுதியிலிருந்து ஹபீப் இப்னு மஸ்லமாவும் போருக்கு முன்வந்தார்கள். அன்றும் மாலைவரை சண்டை நடந்தது ஆயினும் முடிவு எதுவும் ஏற்பட வில்லை.

ஏழாவது நாள், அமீருல் முஃமினீன் அவர்களும், முஆவியா ரலி அவர்களும் தலைமை ஏற்று போர் புரிந்தார்கள். மற்ற நாட்களைவிட அன்று கடுமையான சண்டை நடந்தது. மாலை வரை சண்டை நடந்தது. முடிவு மட்டும் ஏற்படவில்லை.

அப்படியாக ஏழு நாட்கள் சண்டை தொடர்ந்து நடந்தது. முஸ்லிம்கள், முஸ்லிம்களையே வெட்டிக் கொண்டார்கள். இரத்த ஆற்றை ஓடவிட்டார்கள். ஆனால் வெற்றி தோல்வி மட்டும் ஏற்படவிலை!

## கடைசி இரண்டு நாட்கள்:

வெற்றி, தோல்வியை நிர்ணயிக்கும் பிரதான போர் ஹிஜ்ரி 37, ஸபர் மாதம், எட்டாம் நாள் ஆரம்பமானது. அன்று ஃபஜர் தொழுகைக்குப் பிறகு அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் தமது முழுப் படையுடன், முஆவியா ரலி அவர்களின் படையை தாக்கினார்கள். அந்த தாக்குதலில் அமீருல் முஃமினீன் அவர்களுடன் கூபா, பஸராவைச் சேர்ந்த வீரர்களும், புனித மதீனாவைச் சேர்ந்த அன்ஸாரிகளும், பனூ கினானா குலத்தைச் சேர்ந்தவர்களும் இருந்தனர்.

வலது பக்க படைப் பிரிவுகளுக்கு அப்துல்லாஹ் பின் புதைல் இப்னு வர்கா அவர்களும், இடது பக்க படைப் பிரிவுகளுக்கு ஹழரத் அப்துல்லாஹ் அவர்களும் தலைமை ஏற்றனர். ஒவ்வொரு குலத்தாருக்கும் தனித்தனி கொடிகளும், தனித் தலைவர்களும் நியமிக்கப்பட்டனர். ஹழரத் அம்மார் இப்னு யாஸிர் அவர்களுக்கு போர்க்களத்தில் கவிதை பாடும் பணி ஒப்படைக்கப் பட்டது. ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் அவர்களும் ஹழரத் அம்மார் அவர்களுக்கு துணையாக இருந்தார்கள்.

முஆவியா ரலி அவர்கள் தமது கூடாரத்தில் அமர்ந்துக் கொண்டு வீரர்களிடம் மரணத்தின் மீது உறுதிமொழி வாங்கிக் கொண்டிருந்தார். “போர் புரிவேன், வெற்றி பெறுவேன், அல்லது வீரமரணம் அடைவேன்” என்று வீரர்கள் உறுதிமொழி ஏற்றனர். அவரது படையில், வலதுபுற படைப் பிரிவுகளுக்கு ஹபீப் இப்னு மஸ்லமாவும், இடதுபுற படைப் பிரிவுகளுக்கு உபைதுல்லாஹ் இப்னு உமரும் தலைமை ஏற்றிருந்தனர்.

முதலில் அமீருல் முஃமினீன் அவர்களின் தரப்பிலிருந்து ஹழரத் அப்துல்லாஹ் பின் புதைல் அவர்கள், முஆவியா ரலி அவர்களின்(சிரியா) தரப்பு ஹபீப் இப்னு மஸ்லிமாவின் படையை கடுமையாகத் தாக்கினார்கள். அதை சமாளிக்க முடியாமல் ஹபீபும் அவரது படையும் பின்வாங்கியது. ஹழரத் புதைல் அவர்களின் படை ஹபீபுடைய படையை பின்னால் விரட்டியபடி முஆவியா ரலி அவர்களின் கூடாரம் வரை சென்றது. அதைக் கண்ட முஆவியா ரலி அவர்கள், தம்மைச் சுற்றி நின்றிருந்த படைகளை ஹழரத் புதைல் அவர்களின் படைகள் மீது ஏவி விட்டார்கள். அந்த படைகளுக்கு நடுவில் ஹழரத் புதைல் அவர்கள் சிக்கிக் கொண்டார்கள்.

அதைக் கண்ட அமீருல் முஃமினீன் அவர்கள் ஸுஹைல் இப்னு ஹனீஃப் அவர்களை ஹழரத் புதைல் அவர்களுக்கு உதவவும், பாதுகாக்கவும் அனுப்பி வைத்தார்கள். ஆயினும் சிரியா படையினர் ஹழரத் ஸுஹைல் அவர்களை, ஹழரத் புதைல் அவர்களை நெருங்கவிடாமல் தடுத்து விட்டனர். பகைவர்களுக்கு நடுவில் சிக்கிக் கொண்ட ஹழரத் அப்துல்லாஹ் பின் புதைல் அவர்கள், சிரியா படையினரால் ஷஹீதாக்கப் பட்டார்கள். மற்ற வீரர்கள் போர்க்களத்தை விட்டும் தப்பியோடினர்.

அதே சமயம், இடதுபுற படைப் பிரிவும் தோல்வி கண்டது. அந்த பிரிவில் ரபீஆ கோத்திரத்தினர் மட்டும் உறுதியுடன் நின்று போர் புரிந்தனர். உடனே அமீருல் முஃமினீன் அவர்கள் தமது திருப்புதல்வர்கள் ஹழரத் இமாம் ஹஸன், ஹழரத் இமாம் ஹுஸைன், ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரை ரபீஆ கோத்திரத்தாருக்கு உதவ அனுப்பி வைத்தார்கள். ஹழரத் அஷ்தர் அவர்களை அழைத்து, தப்பியோடியவர்களுக்கு வீரமூட்டி, ஒன்று சேர்க்கும்படி கூறினார்கள். பிறகு, ரபீஆ கோத்திரத்தாருக்கு உதவ தாமே புறப்பட்டுச் சென்றார்கள்.

தமக்கு நடுவே நின்று அமீருல் முமினீன் அவர்கள் வாளை சுழற்றி போர் புரிவதை கண்ட ரபீஆ கோத்திரத்தினர், புதிய வேகத்தோடும், வீரத்தோடும் போர் புரிய ஆரம்பித்தனர்.

அதே சமயம், அமீருல் முஃமினீன் அவர்கள் நேரடியாக வந்து போர் புரிவதைக் கண்ட அபூ சுஃப்யானின் அடிமை அஹ்மர் என்பவன் அமீருல் முஃமினீன் அவர்களை தாக்கும் எண்ணத்துடன் அவரின்

பக்கம் சென்றான். அதைக் கண்ட அமீருல் முஃமினீன் அவர்களின் அடிமை கைஸான் என்பவர், அவனைத் தடுத்து, அவனுடன் சண்டையிட்டார். கடைசியில் அஹ்மரின் வாளால் தாக்கப்பட்டு கைஸான் உயிரிழந்தார்.

தமது அடிமை கொல்லப்பட்டதைக் கண்ட அமீருல் முஃமினீன் அவர்கள் அஹ்மரை பயங்கரமாகத் தாக்கினார்கள். அவனை குதிரையிலிருந்து இழுத்து தரையில் தூர வீசினார்கள். கீழே விழுந்த அவனுடைய இரண்டு கைகளும் உடைந்து போயின.

அமீருல் முஃமினீன் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருப்பதைக் கண்ட சிரியா படையினர், அவர் மீது தாக்குதல் நடத்தினர். ஆயினும் ரபீஆ கோத்திரத்தினர் அவர்களை இடை மறித்து ஆக்ரோஷத்துடன் தாக்கினர். அதனால் நிலைமையில் சற்று மாற்றம் ஏற்பட்டது. காலையில் வலது மற்றும் இடதுபுற படைகள் இழப்பை சந்தித்திருந்தாலும், மாலையில் நிலைமையில் முன்னேற்றம் ஏற்பட்டது.

மாலையில் ஹழரத் அம்மார் பின் யாஸிர் அவர்கள், உரத்த குரலில் மக்களை நோக்கி, "எவர் அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை பெற விரும்புகிறாரோ, எவர் உலக சுகபோகங்களையும், பொன்னையும் பிள்ளைகளையும் விட்டு விலகுகிறாரோ, அவர்கள் என்னுடன் சேர்ந்து வாருங்கள்" என அழைப்பு விடுத்தார். அதைக் கேட்டு பலரும் அவருடன் இணைந்துக் கொண்டனர். அதேநிலையில் ஹழரத் அம்மார் அவர்கள் ஹாஷிம் பின் உத்பா (கொடி எடுத்துச் செல்பவர்) அவர்களை அடைந்தார்கள். அவரும் ஹழரத் அம்மாருடன் சேர்ந்துக் கொண்டார்கள். இப்படியாக ஒரு படையே உருவாகிவிட்டது. அந்த படை சிரியாவின் முக்கிய படையை தாக்கியது. அந்த தாக்குதலை சமாளிக்க சிரியாவின் தளபதி அம்ரு இப்னு ஆஸ் அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். அந்த தாக்குதலில் ஹழரத் அம்மார் பின் யாஸிர் அவர்கள் ஷஹீத் ஆனார்கள்.

ஹழரத் அம்மார் பின் யாஸிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வபாத் செய்தியை அறிந்து அமீருல் முஃமினீன் அவர்கள் மிகவும் துக்கமுற்றார்கள்.

அன்று இரவு முழுவதும் போர் தொடர்ந்தது. இரு தரப்பினரும், இரவு முழுவதும் கடுமையாக போர் புரிந்தார்கள். இரவு முழுவதும் வாட்களின் உரசல் ஒலி கேட்டுக் கொண்டே இருந்தது. அதற்கு இசை கோர்ப்பது போல மரண ஓலங்கள்! உயிர் பிரியும் முன் ஏற்படும் பரிதவிப்பு. காயமடைந்தவர்களின் வேதனை மிகுந்த முனுமுனுப்பு. வெட்டுண்ட உடல் உறுப்புகளின் துடிதுடிப்பு. மூக்கைத் துளைக்கும் இரத்த வாடை. இவற்றை எல்லாம் அலட்சியம் செய்து விட்டு, சர்வாதிகாரி போல உலாவந்த காற்று. இவை அனைத்தையும் மீறி

ஒலித்த தக்பீர் முழக்கம்! இப்படி இரவு முழுவதும் போர் தொடர்ந்துக் கொண்டே இருந்தது.

இவற்றை எல்லாம் கனத்த இதயத்துடன் பார்த்துக் கொண்டிருந்த அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், அந்த இரவு நேரத்திலும் தம்முடன் பன்னிரண்டாயிரம் வீரர்களை அழைத்துக் கொண்டு, முஆவியா ரலி அவர்களின் கூடாரம் நோக்கிப் புறப்பட்டார்கள். எதிரே வந்த சிரியா வீரர்களுடன் போர் செய்துக் கொண்டே முஆவியா ரலி அவர்களின் கூடாரத்தை அடைந்தார்கள். உரத்த குரலில் முஆவியாவை அழைத்து, “முஆவியாவே! வீணாய் முஸ்லிம்களை கொல்வதில் எவ்வித பயனும் இல்லை. வெளியே வா. நீயும் நானும் தனித்து சண்டையிடலாம். சண்டையில் யார் வெற்றி பெறுகிறாரோ அவரே கலீஃபாவாக இருக்கட்டும்” என்று கூறினார்கள். ஆனால் முஆவியா ரலி அவர்கள் எவ்வித பதிலையும் கூறவில்லை. அப்போது முஆவியாவுடன் அம்ரு பின் ஆஸ் அவர்களும் இருந்தார்கள். அவர், “முஆவியாவே! அவர் சொல்வதும் சரியாகத்தான் இருக்கிறது. நீங்கள் அவரின் பேச்சைக் கேளுங்கள்” என்று கூறினார்.

உடனே முஆவியா ரலி அவர்கள், “அம்ரே! எனக்கு பதிலாக நீர் ஏன் சண்டையிடக் கூடாது? ஹழரத் அலீ (கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம்) அவர்களை எதிர்த்து மைதானத்தில் நின்ற எவருமே உயிருடன் திரும்பியதில்லை!” என்று கூறிவிட்டு, சிறிது நேரம் சிரித்துக் கொண்டிருந்தார். பிறகு, “அம்ரே! என்னை அவருடன் மோதவிட்டு கொல்லப் பார்க்கிறீரோ? நான் கொல்லப்பட்டால், பிறகு சிரியாவை நீரே ஆளலாம் என கனவு காணுகிறீரோ?” என்று கூறினார். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 570)

அமீருல் முஃமினீன் அவர்கள் முஆவியா ரலி அவர்களை அழைத்துவிட்டு சிறிது நேரம் காத்திருந்தார்கள். ஆனால் எந்த ஒரு பதிலும் வராததால், தமது படைகளுடன் திரும்பிச் சென்றார்கள்.

இரவு முழுவதும் நடந்த போர், மறு நாள் பொழுது விடிந்த பிறகும் தொடர்ந்தது. அன்று வெள்ளிக்கிழமை. இருந்தும் போர் மதியம் வரையிலும் நடந்துக் கொண்டே இருந்தது. அந்த முப்பது மணி நேரத்தில் சுமார் 70,000 முஸ்லிம்கள் கொல்லப்பட்டிருந்தனர். ஆயினும் போரின் பசி மட்டும் தீரவில்லை. ஆகையினால் பிற்பகலுக்கு பிறகும் போர் தொடர்ந்தது.

மாலையில் ஹழரத் அஷ்தர் அவர்கள் தமது பொறுப்பில் இருந்த காலாட்படையை ஹழரத் அய்யான் அவர்களின் பொறுப்பில் விட்டு விட்டு, தாம் குதிரைப் படையின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். “வெற்றியடையாமல் அல்லது உயிரை இழக்காமல் திரும்பி வரமாட்டோம்” என்னும் உறுதிமொழியை குதிரைப்படை வீரர்களிடம்

பெற்றுக் கொண்டார்கள். பிறகு, சிரியாவின் காலாட்படை மீது பயங்கரமாகத் தாக்கினார்கள்.

வியாழக்கிழமை முதல் தொடர்ந்து போர் புரிந்த காரணத்தால் சிரியாவின் காலாட்படை மிகவும் பலஹீனப்பட்டிருந்தது. மேலும், 80,000 வீரர்களுடன் போரைத் தொடங்கிய சிரியாவின் (முஆவியா ரலி அவர்களின்) படை தற்போது 35,000 வீரர்களாக குறைந்து விட்டிருந்தது. அதன் பாதிக்கும் மேற்பட்ட வீரர்கள் அதுவரை தம்முடைய இன்னுயிரை இழந்திருந்தனர். அதனால் ஹழரத் அஷ்தர் அவர்களின் குதிரைப்படை தாக்குதலை அவர்களால் சமாளிக்க முடியவில்லை. அவர்கள் பின்வாங்கி ஓடத் தொடங்கினார்கள்.

அதேசமயம் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் படையில் அதுவரை சுமார் இருபது முதல் இருபத்தைந்தாயிரம் வீரர்கள் தம்முடைய இன்னுயிரை இழந்திருந்தனர். ஆயினும் அறுபதாயிரம் வீரர்களுக்கும் அதிகமான வீரர்கள் மீதமிருந்தனர். எனவே, அமீருல் முஃமினீன் அவர்கள் நிலைமையை உன்னிப்பாக கவனித்துவந்தார்கள். ஹழரத் அஷ்தர் அவர்களின் தாக்குதலை, சிரியா படைகள் தாக்குப்பிடிக்க முடியாமல் திணறுவதை கண்டதும், அமீருல் முஃமினீன் அவர்களும் தமது படையுடன் சிரியா படையை தாக்கத் தொடங்கினார்கள்.

சிரியாவின் (முஆவியா ரலி அவர்களின்) முக்கிய படையுடன் வலது மற்றும் இடதுபுற படைகளும் ஒன்று சேர்ந்து, அமீருல் முஃமினீன் அவர்களுடைய படைகளை எதிர் கொண்டன. ஆயினும் அவர்களால் சமாளிக்க முடியவில்லை. சிரியாவின் அலம்பர்தார் (கொடி ஏந்துபவர்) கொல்லப்பட்டார். அதைக் கண்ட சிரியா படையினர் இன்னும் பலஹீனப்பட்டனர். போரில் அமீருல் முஃமினீன் அவர்களின் கை ஓங்கியது. இன்னும் சில நிமிடங்களில் அமீருல் முஃமினீன் அவர்களுக்கு வெற்றி கிட்டிவிடும் என்ற நிலை ஏற்பட்டது.

அந்த சமயத்தில் அம்ரு பின் ஆஸ் ஒரு தந்திரம் செய்தார். வீரத்தால் கிட்டக் கூடிய வெற்றியை தந்திரத்தால் முறியடித்தார்! அவர், முஆவியா ரலி அவர்களிடம் சென்று, “இன்னும் என்ன பார்த்துக் கொண்டிருக்கிறீர்? உமது படை வீரர்களிடம் சென்று, தத்தமது வாள்களில் திருக்குர்ஆன் பிரதிகளை வைத்து, தலைக்கு மேல் உயர்த்தும்படி உத்தரவிடுங்கள். (நஊதுபில்லாஹ்) மேலும், “ஹாஸா கிதாபல்லாஹி பைனனா வ பைனகும்” (எமக்கும் உமக்கும் இடையில் அல்லாஹ்வின் வேதநூல் குர்ஆன் இருக்கிறது) என்று கூறும்படியும் சொல்லுங்கள்” என்று கூறினார். உடனே அந்த உத்தரவு வீரர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

சிரியா வீரர்கள் தமது வாள்களில் திருக்குர்ஆன் பிரதியை வைத்து, “நாங்கள் திருக் குர்ஆனின் தீர்ப்பை ஏற்றுக் கொள்கிறோம்”

என்று கூறத் தொடங்கினர். அதைகண்ட அமீருல் முஃமினீன் அவர்களுடைய வீரர்கள் போரிலிருந்து தமது கைகளை விலக்கிக் கொண்டனர். அதை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்த ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "இதுவரை போர் நடந்துக் கொண்டிருந்தது. இப்போதோ மோசடி வேலை நடக்கிறது" என்று கூறினார்கள்.

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் தமது வீரர்களிடம், "வீரர்களே! இந்த நேரத்தில் தவறு செய்யாதீர்கள். நாம் போரைத் தொடர்ந்தால் கூடிய விரைவி நமக்கு வெற்றி கிடைத்துவிடும்" என்று கூறினார்கள்.

ஆயினும், வீரர்கள் தொடர்ந்து போரிட்டதாலும், சண்டையை விட சமாதானத்தையே விரும்பியதாலும் அமீருல் முஃமினீன் அவர்களது பேச்சை ஏற்கவில்லை. மாறாக, தமது வாட்களை உறைகளில் போடத் தொடங்கினார்கள். அதே சமயம் 'ஸபா' கூட்டத்தைச் சேர்ந்தவர்களும் காரிஜியாக்களும் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். அவர்கள் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், ஹழரத் அஷ்தர் அவர்களை திரும்ப அழைக்கும்படி வற்புறுத்தத் தொடங்கினார்கள்.

தமது தாக்குதலுக்கு வெற்றி நிச்சயம் என்று ஹழரத் அஷ்தர் அவர்கள் நம்பிக் கொண்டிருந்தார்கள். அந்த நேரம் பார்த்துத்தான் வீரர்கள் அவரை திரும்ப அழைக்குபடி வற்புறுத்தினர். அதனால் அவரை திரும்ப அழைக்க அமீருல் முஃமினீன் அவர்கள் தயங்கினார்கள்.

ஆனால், போர் வேண்டாம் என்னும் சிரியா வீரர்களுடனும், ஸபா கூட்டத்தினருடனும், காரிஜியாக்களுடனும் மற்ற வீரர்களும் ஒன்று சேரத் தொடங்கினர். அவர்கள் அனைவரும் ஹழரத் அஷ்தர் அவர்களை உடனே திரும்ப அழைக்கும்படி அமீருல் முஃமினீன் அவர்களை மீண்டும் மீண்டும் வற்புறுத்தத் தொடங்கினர். சிலரோ, அமீருல் முஃமினீன் அவர்களை சுற்றி வளைத்துக் கொண்டனர். சிலரோ, "அஷ்தர் அவர்களை திரும்ப அழைக்காவிட்டால், ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு நேர்ந்த கதிதான் உங்களுக்கும் ஏற்படும்" என்று மிரட்டினர்!

அந்த ஆபத்தான சூழ்நிலையைக் கண்ட அமீருல் முஃமினீன் அவர்கள் ஆட்களை அனுப்பி ஹழரத் அஷ்தர் அவர்களை தம்மிடம் அழைத்துக் கொண்டனர். ஹழரத் அஷ்தர் அவர்கள் திரும்பி வந்ததும் போர்க்களமே அமைதியானது! ஆயினும் சிலர் ஹழரத் அஷ்தர் அவர்களை தாக்கவும் முயன்றனர். அவர்களை அமீருல் முஃமினீன் அவர்கள் கண்டித்ததும் அவர்கள் அடங்கிப் போனார்கள்.

அப்போது ஹழரத் அஷ்அஸ் இப்னு கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அமீருல் முஃமினீன் அவர்களிடம் வந்து, "அமீருல் முஃமினீன் அவர்களே! முஆவியா ரலி அவர்களும், அவருடைய வீரர் களும் திருக்குர்ஆனின் தீர்ப்பை ஏற்றுக் கொள்வதாகக் கூறுகின்றனர். ஆனால் அதன் அர்த்தம் எனக்குப் புரியவில்லை. தாங்கள் அனுமதி தந்தால் , நான் முஆவியாவிடம் சென்று அதுபற்றி கேட்டு வருகிறேன்" என்று கூறினார். அமீருல் முஃமினீன் அவர்கள் அனுமதி வழங்கினார்கள்.

ஹழரத் அஷ்அஸ் இப்னு கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், முஆவியா ரலி அவர்களிடம் சென்று, "முஆவியாவே! நீர் திருக்குர்ஆனின் தீர்ப்பை ஏற்றுக் கொள்வதாகக் கூறுகிறீர். அது எப்படி?" என்று கேட்டார்கள். அதற்கு முஆவியா ரலி அவர்கள், "நானும் நீங்களும் அல்லாஹ் மற்றும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் தீர்ப்பின்படியே வாழுகிறோம். நான் எனது புறத்திலிருந்து ஒருவரை தேர்ந்தெடுப்பேன். நீங்களும் உங்கள் புறத்திலிருந்து ஒருவரை தேர்ந்தெடுங்கள்.

"நாங்கள் திருக்குர்ஆனைக் கொண்டு தீர்ப்பளிப்போம்" என்று அவர்கள் இருவரிடமும் சத்திய பிரமாணம் வாங்கிக் கொள்வோம். அதன் பிறகு அவர்கள் இருவரும் வழங்கும் தீர்ப்பை நாம் இருவரும் ஏற்றுக் கொள்வோம்" என்று கூறினார்.

அதை அமீருல் முஃமினீன் அவர்களிடம் வந்து ஹழரத் அஷ்அஸ் இப்னு கைஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள். அதைக் கேட்டதும், அமீருல் முஃமினீன் அவர்களை சுற்றி இருந்தவர்கள், "நாங்கள் இதை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்கிறோம்" என்று கூறினர். அமீருல் முஃமினீன் அவர்கள், அவர்களை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். மன வேதனையும் அடைந்தார்கள்!

அதன்பிறகு, அமீருல் முஃமினீன் அவர்களின் தரப்பிலிருந்து யாரை தேர்ந்தெடுப்பது என்ற கேள்வி எழுந்தது. அப்போது அமீருல் முஃமினீன் அவர்கள், "நான் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்களை சிபாரிசு செய்கிறேன்" என்று கூறினார்கள். உடனே அமீருல் முமினீன் அவர்களை சுற்றி இருந்தவர்கள்,"ஹழரத் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உங்களுடைய உறவினராக இருக்கிறார். எனவே அவரை நாங்கள் ஏற்க மாட்டோம். பொதுவான ஒருவரைத்தான் நாம் தேர்வு செய்ய வேண்டும்" என்று கூறினர். அதைக் கேட்டு அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் மிகவும் வருத்தம் அடைந்தார்கள்.

"அப்படியானால், நீங்கள் யாரை தேர்வு செய்ய விரும்புகிறீர்கள்?" என்று அமீருல் முஃமினீன் அவர்கள் தமது சகாக்களிடம் கேட்டார்கள்.

அதற்கு அவர்கள், "நாங்கள் அபூ மூஸா அஷ்அரீ அவர்களை தேர்வு செய்ய விரும்புகிறோம்" என்று கூறினர்.

"ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்கள் எனது உறவினர் என்பதற்காக நிராகரிக்கிறீர்கள். ஆயினும், அபூ மூஸா அஷ்அரீ அவர்களையும் நம்பிக்கைக்குரியவராக நான் நினைக்க வில்லை." என்று அமீருல் முஃமினீன் அவர்கள் கூறினார்கள். ஆயினும் அனைவரும் அபூ மூஸா அஷ்அரீ அவர்களையே தேர்வு செய்ய விரும்பினர். கடைசியில் அமீருல் முஃமினீன் அவர்கள் அபூ மூஸா அஷ்அரீ அவர்களையே தேர்வு செய்தார்கள். அந்த விஷயமும் அமீருல் முஃமினீன் அவர்களுக்கு மன வருத்தத்தை ஏற்படுத்தியது. முஆவியா ரலி அவர்கள் தரப்பில் அம்ரு இப்னு ஆஸ் அவர்களை தேர்வு செய்தனர்.

## ஒப்பந்தம்:

அம்ரு இப்னு ஆஸ் அவர்கள், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திருச் சமுகத்தில் வந்து சேர்ந்தார். வந்ததும், ஒப்பந்தம் எழுதும் பணி ஆரம்பமானது.

"இந்த ஒப்பந்தம் (ஹழரத்) அலீ இப்னு அபீதாலிப் (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) மற்றும் முஆவியா இப்னு அபூ சுஃப்யான் ஆகியோருக்கு இடையில் எழுதப்படுகிறது. ஹழரத் அலீ இப்னு அபீதாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூபாவாசிகள் மற்றும் அவருடன் இருக்கும் அனைவரின் பொருட்டும் ஒரு நடுவரை நியமித்துள்ளார். அதைப் போலவே முஆவியா இப்னு அபூ சுஃப்யான் அவர்கள் சிரியாவாசிகள் மற்றும் அவர்களுடன் இருக்கும் அனைவரின் பொருட்டும் ஒரு நடுவரை நியமனம் செய்துள்ளார்.

நாங்கள் அல்லாஹ்வின் வேத நூலையும், அதன் கட்டளைகளையும் நீதிபதியாக ஏற்றுக் கொள்கிறோம். அல்லாஹ்வின் கட்டளைகளையும், அல்லாஹ்வின் வேத நூலில் உள்ள கட்டளைகளையும் தவிர, மற்ற எவற்றையும் ஏற்கமாட்டோம் என்றும் உறுதி கூறுகிறோம். நாங்கள் (ஸூரா) அல்ஹம்து முதல் (ஸூரா) அந்நாஸ் வரை, திருக்குர்ஆனின் அனைத்து அத்தியாயங்களையும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்கிறோம். திருக்குர்ஆன் எந்த எந்த செயல்களை செய்யும்படி எங்களை ஏவியுள்ளதோ, அவற்றை சிரமேற்கொண்டு நிறைவேற்றுவோம். திருக்குர்ஆன் எவற்றையெல்லாம் விலக்கியுள்ளதோ, அவற்றை விலக்கிவிடுவோம். நியமிக்கப்பட்டுள்ள இரு நடுவர்கள் ஹழரத் அபூ மூஸா அப்துல்லாஹ் இப்னு கைஸ் அஷ்அரீ ரலியல்லாஹு அன்ஹு மற்றும் அம்ரு இப்னு ஆஸ் ரலியல்லாஹு அன்ஹு ஆகியோர் ஆவார்கள். அவர்கள் இருவரும் வேதநூலில் உள்ளதைக் கொண்டு தீர்ப்பு கூறுவார்கள். வேத நூலில் இல்லாத விஷயமாக இருந்தால், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சுன்னத்தான நடைமுறைகளை

பேணி தீர்ப்பு வழங்கப்படும். இரு தரப்பாரும் ஆறு மாதங்கள் வரை எந்த முறையீடும் செய்யக்கூடாது. குறைகள் இருந்தால், ஆறு மாதங்கள் கழிந்த பிறகு நடுவர்களிடம் முறையீடு செய்யலாம்".

இந்த ஒப்பந்தம் எழுதப்பட்ட பிறகு, ஹழரத் அபூ மூஸா அஷ்அரீ அவர்களும் அம்ரு இப்னு ஆஸ் அவர்களும் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டனர்.

இந்த வேலைகள் எல்லாம் முடிந்த பிறகு, அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹுல் கரீம் அவர்களும், முஆவியா ரலி அவர்களும் தத்தமது படை வீரர்களிடம் சமாதான ஒப்பந்தம் குறித்து அறிவிப்பு செய்தனர். அதைக் கேட்டு இரு தரப்பு வீரர்களும் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். அதன் பிறகு ஒப்பந்தத்தின் இரண்டு பிரதிகள் எடுக்கப்பட்டன.

அவற்றில், அமீருல் முஃமினீன் தரப்பிலிருந்து அஷ்அஸ் இப்னு கைஸ், ஸஅத் இப்னு கைஸ், வரகா இப்னு யஹ்யா, ஹஜர் இப்னு அதீ, அப்துல்லாஹ் இப்னு துபைல் ஆமிரீ, உக்பா இப்னு ஜியாத், மாலிக் இப்னு கஅப் போன்றவர்கள் ஜாமீன் மற்றும் சாட்சி கையெழுத்திட்டனர். முஆவியா ரலி அவர்கள் தரப்பில் அபுல் அவூர், ஹபீப் இப்னு மஸ்லமா, ஹம்ஸா இப்னு மாலிக், அப்துர் ரஹ்மான் இப்னு காலித், ஸமீவு இப்னு எஜித், உத்பா இப்னு அபூ சுஃப்யான் போன்றவர்கள் ஜாமீன் மற்றும் சாட்சி கையெழுத்திட்டனர்.

இந்த வேலைகளும் பூர்த்தியான பிறகு, ஹிஜ்ரி 37, ஸபர் மாதம், 13ஆம் நாளில் ஒப்பந்தத்தின் பிரதிகள் இரு தரப்பினரிடமும் ஒப்படைக்கப் பட்டன. அதனைத் தொடர்ந்து ஸிப்ஃபீன் போர்க்களத்தை விட்டும் புறப்பட இரு தரப்பினரும் தயாரானார்கள். முஆவியா ரலி அவர்கள் தமது படையினருடன் தமஷ்க் (டமாஸ்கஸ்) நோக்கி கிளம்பிச் சென்றார்.

ஆனால், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கோ புதிய பிரச்சினை ஒன்று காத்திருந்தது.

## காரிஜியாக்கள்:

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் காலம் தொட்டே காரிஜியாக்கள் இருந்துள்ளனர். ஆயினும் அப்போது அவர்கள் எவ்வித கிளர்ச்சியும் செய்யாமல், சாதாரண முஸ்லிம்களாக வாழ்ந்தனர் அதனால் அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்கள் மீது எவ்வித நடவடிக்கையையும் எடுக்கவில்லை. ஆயினும் காரிஜிய்யாக்கள் பற்றி பல்வேறு முன்னறிவுப்புகளை தமது தோழர்களிடம் கூறினார்கள். அவர்கள்

மனிதர்களிலும், உயிரினங்களிலும் மிகவும் மோசமானவர்கள் என்றும் கூறியுள்ளனர். அவற்றில் சில:

ஹழரத் அபூதர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "எனக்குப் பிறகு எனது சமுதாயத்தில் ஒரு கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால் அது அவர்களுடைய கழுத்துகளைத் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியை விட்டு அம்பு வெளிப்பட்டுச் சென்று விடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் சென்று விடுவார்கள். பிறகு அதன் பக்கம் திரும்ப மாட்டார்கள். அவர்கள்தாம் மனிதர்கள் மற்றும் உயிரினங்களிலேயே மோசமானவர்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1936)

ஹழரத் யுசைர் பின் அம்ர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், நான் சஹ்ல் பின் ஹுனைஃப் அவர்களிடம், காரிஜியாக்கள் குறித்து அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூற ஏதேனும் கேட்டுள்ளீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கிழக்கு (இராக்) திசையில் தமது கையினால் சைகை செய்து இவ்வாறு கூறினார்கள். "(இங்கிருந்து) ஒரு கூட்டத்தார் புறப்படுவார்கள். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால் அது அவர்களது கழுத்தெலும்பை தாண்டிச் செல்லாது. வேட்டை பிராணியை விட்டு அம்பு வெளியேறிச் செல்வதைப் போன்று, இஸ்லாத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் சென்றுவிடுவார்கள்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

ஹழரத் சஹ்ல் பின் ஹுனைஃப் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கல், "கிழக்கு (இராக்) திசையிலிருந்து வழிதவறிய ஒரு கூட்டத்தார் கிளம்புவார்கள். அவர்களுடைய தலைகள் மழிக்கப்பட்டு (மொட்டையாக) இருக்கும்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1938)

அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், காரிஜிய்யாக்களின் தன்மைகள் பற்றியும் முன்னறிவிப்புகள் செய்துள்ளனர்.

ஹழரத் அபூசயீத் அல்குத்ரீ ரலியல்லஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் யமன் நாட்டிலிருந்து மண் அகற்றப்பட்டிராத தங்கக் கட்டி ஒன்றை, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அதை அண்ணல் நபி

ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அக்ரஉ பின் ஹாபிஸ் அல்ஹன்ழலீ, உயைனா பின் பத்ர் அல் ஃபஸாரீ, பனூ கிலாப் குலத்தாரைச் சேர்ந்த அல்கமா பின் உலாஸா அல் ஆமிரீ மற்றும் பனூ நப்ஹான் குலத்தாரைச் சேர்ந்த ஸைத் அல்கைர் அத்தாயீ ரலியல்லாஹு அன்ஹும் ஆகிய நால்வருக்கு பங்கிட்டுக் கொடுத்தார்கள். இதைக் கண்ட குரைஷிகள் கோபமடைந்தனர். நஜ்த்வாசிகளின் தலைவர்களுக்கு கொடுக்கிறீர்கள். எங்களை விட்டு விடுகிறீர்களே!" என்று கேட்டனர். அதற்கு அண்ணல் நபிஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், " (புதிதாக இஸ்லாத்தை தழுவியுள்ள) அவர்களுடன் இணக்கத்தை ஏற்படுத்தவே இவ்வாறு செய்தேன்" என்று கூறினார்கள்.

அப்போது அடர்த்தியான தாடி கொண்ட, கன்னங்கள் தடித்திருந்த, கண்கள் பஞ்சடைந்த, நெற்றி புடைத்திருந்த, தலைமுடி மழிக்கப்பட்டிருந்த ஒரு மனிதர் வந்து, "முஹம்மதே! (ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம்) அல்லாஹ்வுக்கு அஞ்சுவீராக!" என்று கூறினார். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "நானே மாறு செய்தால் வேறு எவர்தாம் அவனுக்கு கீழ்படிவார்கள்? பூமியில் வசிப்பவர்கள் விஷயத்தில் ஆட்களைப் படைத்த இறைவன் என் மீது நம்பிக்கை வைத்திருக்கும் போது, நீங்கள் என் மீது நம்பிக்கை வைக்க மாட்டீர்களா?" என்று கேட்டார்கள். பின்னர் அந்த மனிதர் திரும்பிச் சென்றபோது, அங்ககிருந்த மக்களில் ஒருவர் அந்த மனிதரைக் கொல்ல அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களிடம் அனுமதி கேட்டார்.

பிறகு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமூகத்தார் தோன்றுவார்கள். அவர்கள் குர்ஆனைஓதுவார்கள். ஆனால், அது அவர்களுடைய தொண்டைக்குழிகளைத் தாண்டிச் செல்லாது. இஸ்லாமியர்களைக் கொல்வார்கள். சிலை வணக்கம் செய்பவர்களை விட்டு விடுவார்கள். (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து வெளியேறி விடுவதைப் போன்று அவர்கள் இஸ்லாத்திலிருந்து வெளியேறி விடுவார்கள். நான் அவர்களை அடைந்தால் "ஆது" கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நான் நிச்சயம் அழித்து விடுவேன்" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1921)

ஹழரத் அபூ ஸயீத் அல்குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள் அவர்கள் (ஹவாஸின்) போரில் கிடைத்த செல்வங்களை பங்கிட்டுக் கொண்டிருக்கும்போது அவர்களின் அருகே நாங்கள் இருந்தோம். அப்போது 'பனூ தமீம்' குலத்தைச் சேர்ந்த துல்குவைஸிரா என்னும் மனிதர் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! நீதியுடன் நடந்துக்

கொள்ளுங்கள்” என்று கூறினார். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “உனக்குக் கேடுதான். நான் நீதியுடன் நடந்து கொள்ளவில்லை என்றால் வேறு யார்தாம் நீதியுடன் நடந்துக் கொள்வார்?” என்று கேட்டார்கள். உடனே ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், “அல்லாஹ்வின் தூதரே! இவரது விவகாரத்தில் எனக்கு அனுமதி தாருங்கள். இவரது கழுத்தை கொய்து விடுகிறேன்” என்று கூறினார். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “இவரை விட்டுவிடுங்கள். நிச்சயமாக இவருக்கு தோழர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களது தொழுகையுடன் உங்களது தொழுகையையும், அவர்களின் நோன்புகளுடன் உங்களது நோம்புகளையும் ஒப்பிட்டுப் பார்த்து, உங்களது தொழுகையையும், உங்களது நோன்புகளையும் அற்பமாகக் கருதுவீர்கள். (அவ்வளவு அதிகமாக அவர்களது இபாதத்து அதிகமாக இருக்கும். ஆயினும்) அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களது கழுத்தெலும்பை தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியை விட்டு அம்பு வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று, மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் சென்று விடுவார்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1926)

“நான் இந்த நபிமொழியை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்தே கேட்டே என்று உறுதி அளிக்கிறேன். மேலும், அந்தக் கூட்டத்தாருடன் (காரிஜிய்யாக்களுடன்) ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் போர் புரிந்தார்கள். நானும் ஹழரத் அலீ அவர்களுடன் இருந்தேன். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் (அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அடையாளம் கூறிய) அந்த மனிதரைத் தேடி கொண்டு வரும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவர் உடல் தேடப்பட்டு, கொண்டுவரப்பட்டார். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்ட வர்ணனையின் படியே அவர் இருப்பதைப் பார்த்தேன் என்றும் உறுதி கூறுகிறேன்” என்று ஹழரத் அபூ ஸயீத் அல்குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மேலும் கூறியுள்ளார்கள்.

மற்றொரு ஹதீஸில், ஹழரத் அபூ ஸயீத் அல்குத்ரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்களே கூறுகிறார்கள், “முஸ்லிம்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் (கிளர்ச்சியாளர்கள் - காரிஜிய்யாக்கள்) கூட்டம் ஒன்று தோன்றும். அந்த இரு பிரிவினரில் சத்தியத்திற்கு மிக நெருக்கமாக இருக்கும் பிரிவினர், அவர்களைக் கொன்றொழிப்பார்கள்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1928)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், காரிஜிய்யாக்களை எங்கு கண்டாலும் கொன்றுவிடும்படி கூறியுள்ளார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அறிவிக்கிறார்கள், “(இஸ்லாமிய ஆட்சியாளர்களே!) அவர்களை (காரிஜிய்யாக்களை) நீங்கள் எங்கு சந்தித்தாலும் கொன்றுவிடுங்கள். ஏனெனில் அவர்களைக் கொன்றவர்களுக்கு, அவர்களை கொன்றதற்காக மறுமை நாளில் நற்பலன் கிடைக்கும்” என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1932)

(ஒருமுறை) ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் காரிஜிய்யாக்களைப் பற்றி கூறும்போது, “அவர்களிடையே ஊனமான கையுடைய ஒரு மனிதன் இருப்பார். நீங்கள் வரம்பு மீறிவிடுவீர்கள் என்ற அச்சம் எனக்கில்லையாயின், அவர்களைக் கொல்பவர்களுக்கு அல்லாஹ் தன் தூதரின் நாவினால் வாக்களித்துள்ள நற்பலனை உங்களுக்கு நான் அறிவித்துவிடுவேன்” என்று கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம் 1933)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இப்படி பல்வேறு விஷயங்களை முன்னறிவிப்பு செய்திருக்கிறார்கள். இனி காரிஜிய்யாக்களின் கொள்கைகள் பற்றியும், கிளர்ச்சிகள் பற்றியும் பார்ப்போம்.

கொள்கைகள்: அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை 'காபிர்' என்று கூறினார்கள்.

திருக்குர்ஆன் அருளப்படவில்லை, மறாக அது படைக்கப்பட்டது என்று கூறினார்கள்.

பெரும் பாவங்களை செய்த முஸ்லிம்களை ‘காபிர்’ என்று கூறினார்கள்.

இஸ்லாமிய ஆட்சிக்கு எதிராக கிளர்ச்சிகள் செய்தனர்.

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை இழிவாகக் கருதினார்கள். இப்படி இஸ்லாத்திற்கு புறம்பான கொள்கைகளையே அவர்கள் கொண்டிருந்தனர்.

ஹிஜ்ரி 37, ஸபர் மாதம் 13ஆம் நாள் ஸிப்ஃபீன் போர் முடிந்ததும் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் கூபாவுக்கு செல்ல ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினார்கள். அப்போது சிலர் வந்து, “தாங்கள் கூபாவுக்கு செல்லும் எண்ணத்தை

விட்டுவிட்டு, சிரியா மீது போர் தொடுக்க ஏற்பாடுகளைச் செய்யுங்கள்" என்றனர். அதற்கு அமீருல் முஃமினீன் அவர்கள், "ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்ட பிறகு, அதை எப்படி மீறுவது? சமாதானம் ஏற்பட்ட பிறகு போரைப்பற்றி மனதளவில் நினைப்பதும் பாவமாகும்" என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் அவர்கள் அங்கிருந்தும் புறப்பட்டுச் சென்றார்கள். பிறகு தங்களின் கூட்டத்தாரை (காரிஜிய்யாக்கள்) ஒன்று கூட்டி ஆலோசனை செய்தார்கள். முடிவில், அமீருல் முஃமினீன் அவர்களை விட்டும் பிரிந்து செல்வது என தீர்மானித்தனர்.

அதேசமயம் அமீருல் முஃமினீன் அவர்கள் கூபாவை நோக்கி புறப்பட்டார்கள். (காரிஜிய்யாக்களின்) அந்த கூட்டத்தாரும் அவர்களுடனயே புறப்பட்டார்கள். வழியெல்லாம் அவர்கள் அமீருல் முஃமினீன் அவர்களுடைய சகாக்களுடன் வாய்ச்சண்டை போட்டுக் கொண்டே வந்தார்கள். ஆயினும், கூபாவை நெருங்கும் முன்பாகவே 'ஹரூரா' என்னுமிடத்தை நோக்கி பிரிந்து சென்று விட்டார்கள். அப்போதே அவர்களின் எண்ணிக்கை பன்னிரண்டாயிரமாக இருந்தது. அவர்கள் அனைவரும் ஹரூராவிலேயே தங்கிவிட்டனர். மேலும், அவர்கள் தங்களுடைய (தொழுகை) இமாமாக அப்துல்லாஹ் இப்னு அல்குவாவை தேர்ந்தெடுத்துக் கொண்டனர். தமது போர்த் தளபதியாக ஷீத் இப்னு ரப்ஈ அவர்களை நியமித்தனர்.

பைஅத் அல்லாஹ்வுக்கு மட்டுமே. அல்லாஹ்வின் வேத நூலில் உள்ளபடியும், சுன்னாவின் நடைமுறைப் படியும் நன்மையான விஷயங்களின் பக்கம் மக்களை ஏவ வேண்டும். தீய விஷயங்களை விட்டும் தடுக்க வேண்டும். கலீஃபா என்றோ, அமீர் என்றோ எவரும் கிடையாது. நாங்கள் வெற்றி பெற்றால், எந்த முடிவையும் மக்களிடம் கேட்டே செயல் படுத்துவோம். அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களும், முஆவியா ரலி அவர்களும் குற்றவாளிகளே!" இப்படி பல்வேறு கருத்துக்களை அவர்கள் கூறினார்கள்.

அமீருல் முஃமினீன் அவர்கள் கூபாவை அடைந்த போது, ஹரூராவில் நடக்கும்ன் இந்த விஷயங்கள் யாவும் அவர்களுக்கு தெரியவந்தன. ஆயினும், அமீருல் முஃமினீன் அவர்கள் கூபா வந்ததும் முதலில் ஸிப்ஃபீன் போரில் இறந்தவர்களுடைய உற்றார் உறவினர்களை சந்தித்தார்கள். அவர்களுக்கு ஆறுதலும் கூறினார்கள். அதன் பிறகு ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை, காரிஜிய்யாக்களுக்கு அறிவுரை கூறி வரும்படி அனுப்பி வைத்தார்கள்.

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், காரிஜிய்யாக்களிடம் பல்வேறு விளக்கங்களைக் கூறினார்கள். அறிவுரைகள் கூறினார்கள். ஆனால், எதையுமே

அவர்கள் ஏற்கவில்லை. அவர்கள், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய பேச்சை புறக்கணிக்கவும் தொடங்கினார்கள். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 579)

அதன் பிறகு, அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களே நேரடியாக காரிஜிய்யாக்கள் இருக்கும் இடத்திற்கு சென்றார்கள். அங்கு காரிஜிய்யாக்களில் செல்வாக்கு பெற்றிருந்த யஜீத் இப்னு கைஸ் அவர்களுடைய இருப்பிடத்திற்கு முதலில் சென்றார்கள். அங்கு இரண்டு ரக்அத் தொழுதார்கள். பிறகு, யஜீத் இப்னு கைஸ் அவர்களை 'அஸ்பஹான்' (ஈரானில் உள்ள ஒரு பகுதி) கவர்னராக நியமனம் செய்தார்கள். அதன் பிறகு, ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், காரிஜிய்யாக்களுடன் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந்த இடத்திற்குச் சென்றார்கள்.

"உங்களில் தலைவர் யார்?" என்று காரிஜிய்யாக்களிடம் கேட்டார்கள். அதற்கு அவர்கள், "அப்துல்லாஹ் இப்னு அல்குவா" என்றார்கள். நீங்கள் அனைவரும் எனக்கு பைஅத் செய்திருந்தீர்கள். இப்போது அந்த பைஅத்தை முறிக்கவும், என்னை எதிர்க்கவும் காரணம் என்ன?" என்று அமீருல் முஃமினீன் அவர்கள் கேட்டார்கள்.

"தேவை இல்லாமல் தாங்கள் பிறப்பித்த போர் நிறுத்த கட்டளையால்!" என்றார்கள். அதற்கு அமீருல் முஃமினீன் அவர்கள், "இல்லை! அல்லாஹ்வின் மீது ஆணையாக. நான் போரை நிறுத்த விரும்பவில்லை. மாறாக, போரைத் தொடரவே விரும்பினேன். ஆனால், நீங்கள்தான் ஹழரத் அஷ்தரை திரும்ப அழைக்கும்படி வற்புறுத்தினீர்கள். போரை நிறுத்தவும் செய்தீர்கள். நான் கட்டாயப்படுத்தப்பட்ட நிலையில்தான் ஒப்பந்தத்தை ஏற்றேன். இரண்டு நீதிபதிகளும் திருக்குர்ஆனின் கட்டளைப்படி தீர்ப்பளிப்பதாக உறுதி கூறியுள்ளனர். அவ்விதம் நடந்தால் சரி, இல்லையென்றால் எந்த தீர்ப்பையும் நான் ஏற்கமாட்டேன்" என்று கூறினார்கள்.

அதைக் கேட்ட காரிஜிய்யாக்கள், "முஆவியா ரலி அவர்கள் முஸ்லிம் களிடையே பகையை ஏற்படுத்தவே விரும்பினார். தேவையின்றி முஸ்லிம்களை கொன்று போட்டார். அதைப் போலவே, நியாயமின்றி நடுவர்களையும் நியமித்தார்." என்று கூறினர்.

"திருக்குர்ஆனை நடுவராக கொண்டதால்தான் நான் ஒப்பந்தத்தை ஏற்றேன். நடுவர்கள் அதைக் கொண்டு தீர்ப்பு கூறுவார்கள்" என்று அமீருல் முஃமினீன் அவர்கள் கூறினார்கள். இப்படியே பேச்சுவார்த்தை தொடர்ந்துக் கொண்டிருந்தது.

அதற்கிடையே, யஜீத் இப்னு கைஸ் அவர்களை 'அஸ்பஹான்' கவர்னராக நியமித்த விஷயம் காரிஜிய்யாக்களுக்கு தெரிய வந்தது. இந்த விஷயங்கள் காரிஜிய்யாக்கள் மீது நல்ல மாற்றத்தை ஏற்படுத்தியது. அதனால் அவர்கள் அமைதியுற்றார்கள்.

அந்த சமயத்தில் அமீருல் முஃமினீன் அவர்கள் மிகவும் கனிவோடு, "அனைவரும் என்னுடன் வாருங்கள். கூபாவுக்குச் செல்வோம். அங்கு நீங்கள் உங்கள் பொருளாதாரத்தை உயர்த்திக் கொள்ளலாம். உங்கள் கால்நடைகளை கொழுத்தவைகளாக ஆக்கலாம். அதன் பிறகு நாம் அனைவரும் சேர்ந்து எதிரிகளுடன் போர் புரியலாம்" என்று கூறினார்கள். அதற்கு காரிஜிய்யாக்களும் சம்மதித்தனர். பிறகு அமீருல் முஃமினீன் அவர்களுடன் பஸராவுக்கு பயணமானார்கள்.

அதற்கிடையே நடுவர்கள் நிர்ணயித்த ஆறு மாதங்களும் கழிந்தன. எனவே, அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் பஸராவிலிருந்து ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்களை தம்மிடம் வரவழைத்தார்கள். பிறகு, ஷுரைஹ் பின் ஹானீ தலைமையில் நாநூறு வீரர்களையும், தொழுகை இமாமாக ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்களை நியமித்தும் 'தவ்மத்துல் ஜந்தல்' என்னும் இடத்தை நோக்கி அனுப்பி வைத்தார்கள். அவர்களுடன் நடுவராக நியமிக்கப் பட்டிருந்த அபூ மூஸா அஷ்அரீ அவர்களும் சென்றார்கள். அவர்களிடம், "நீங்கள் அம்ரு இப்னு ஆஸை சந்திக்கும் போது, 'உண்மையையும், நேர்மையையும் எக்காரணம் கொண்டும் கைவிடாதீர் என்றும், கியாமத்து நாளை நினைவு கொள்வீர்' என்றும் அவரிடம் கூறுங்கள்" என்று அமீருல் முஃமினீன் அவர்கள் கூறினார்கள்.

அதைப் போலவே முஆவியா ரலி அவர்களும் அம்ரு இப்னு ஆஸ் அவர்களை நாநூறு வீரர்களுடன் அனுப்பி வைத்தார். மேலும், நடுவர்கள் கூறும் தீர்ப்பை அறியவும், அந்த சபையில் கலந்துக் கொள்ளவும் புனித மக்கா மற்றும் புனித மதீனா போன்ற இடங்களிலிருந்தும் மார்க்க அறிஞர்கள் அழைக்கப்பட்டனர். அவர்களில் அப்துல்லாஹ் இப்னு உமர், அப்துர் ரஹ்மான் இப்னு அபூபக்கர், அப்துல்லாஹ் இப்னு ஜுபைர், அப்துர் ரஹ்மான் இப்னு அப்துல் கொளஸ், ஸுஹ்ரீ, முகீரா பின் ஷுஅபா, ஸஅத் இப்னு அபீ வக்காஸ் போன்றவர்கள் வருகை புரிந்திருந்தனர். சுற்றுப்புற இடங்களிலிருந்தும் முஸ்லிம்கள் வந்து குழுமி இருந்தனர்.

அதன் பிறகு நடுவர்கள் அபூ மூஸா அஷ்அரீ மற்றும் அம்ரு இப்னு ஆஸ் தமது கருத்துக்களைக் கூறத் தொடங்கினார்கள். முதலில் அம்ரு இப்னு ஆஸ் அவர்கள், "ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்கள் அநியாயமாக கொல்லப்பட்டார்கள் என்பதையும், முஆவியா

ரலி அவர்கள் அவருடைய தந்தை வழியில் வருவதால், அவருடைய கொலைக்கு நியாயம் கோருவது முறைதான் என்பதையும் நீங்கள் முதலில் ஒப்புக்கொள்ள வேண்டும்” என்றார். அதை அபூ மூஸா அஷ்அரீ அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

அதன் பிறகு கிலாஃபத்துடைய விஷயம் தொடங்கியது. அம்ரு இப்னு ஆஸ் அவர்கள், “முஆவியா ரலி அவர்கள் குரைஷியர்களில் ஒழுக்கமான குடும்பத்தைச் சேர்ந்தவர். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்கைத் துணைவியார் உம்முல் முஃமினீன் உம்மு ஹபீபா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் சகோதரரும் ஆவார். ஸஹாபாவாகவும் இருக்கிறார். நீங்கள் என்னுடைய கருத்தை ஏற்று முஆவியா ரலி அவர்களை ஆதரித்தால், நீங்கள் விரும்பும் எந்த நகரத்தையும் உமக்கு வழங்க தயாராக இருக்கிறேன்” என்று கூறினார்.

அபூமூஸா: “அம்ரே! அல்லாஹ்வுக்கு அச்சப்படு. கிலாஃபத் என்பது அரசியலை வைத்தோ, ஆட்சி அதிகாரத்தை வைத்தோ கொடுக்கப் படுவதில்லை. மாறாக, இறைப் பற்று, இறையச்சம் (தக்வா), ஈமானில் உறுதி போன்ற விஷயங்களை வைத்தே கலீஃபா தேர்ந்தெடுக்கப் படுகிறார். இவை யாவும் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் நிறைந்திருக்கின்றன. ஒழுக்கத்திலும் அவரே சிறந்தவராக இருக்கிறார். ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் படுகொலைக்கு நியாயம் கோறுகிறார் என்பதற்காக, அவருக்கு கலீஃபா ஆக்கலாம் என்கிறீர். முஹாஜிர்களை எல்லாம் விட்டுவிட்டு முஆவியா ரலி அவர்களை கலீஃபா ஆக்குவது நியாயமில்லை. மேலும், நான் முஆவியா ரலி அவர்களை ஆதரித்தால் எனக்கு ஆட்சி கொடுக்கப்படும் என்கிறாய். முஆவியா ரலி அவர்களின் மொத்த ஆட்சி எனக்கு கிடைப்பதாக இருந்தாலும் நான் இதற்கும் சம்மதிக்கமாட்டேன்.” என்றார்கள்.

அம்ரு: “சரி, எனது பிள்ளை அப்துல்லாஹ்வைப் பற்றி என்ன நினைக்கிறீர்?”

ஆபூமூஸா: அவர் நல்லவர்தான். ஒழுக்கமானர்தான். ஆனால், அவரையும் இந்த கிளர்ச்சியில் ஈடுபடுத்தி கெடுத்துவிட்டீரே!”

இப்படியே பேச்சு நீண்டுக் கொண்டே போயிற்று. கடைசியாக அபூமூஸா அஷ்அரீ அவர்கள், “நான் என்ன நினைக்கிறேன் என்றால், நாம் இருவரும் சேர்ந்து அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையும், முஆவியா ரலி அவர்களையும் கலீஃபா பொறுப்பிலிருந்து நீக்கிவிடலாம். புது கலீஃபாவை தேர்ந்தெடுக்கும் பொறுப்பை முஸ்லிம்களிடமே

ஒப்படைப்போம். அவர்கள் யாரை விரும்புகிறார்களோ அவரை தமது கலீஃபாவாக தேர்வு செய்துக் கொள்ளட்டும்" என்றார்கள்.

இதைக் கேட்டதும் அம்ரு இப்னு ஆஸ் மகிழ்ச்சியால் துள்ளி குதித்தார்! பிறகு, "உங்களுடைய கருத்தை நானும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்கிறேன். வாருங்கள். நாம் இருவரும் வெளியே சென்று முஸ்லிம் பெருமக்களிடம் நமது கருத்தை தீர்ப்பாக கூறிவிடலாம்" என்றார்.

பிறகு இருவரும் சேர்ந்து வெளியே வந்தார்கள். வெளியே வந்ததும், "அபூமூஸாவே! நீங்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோடு தொடர்பில் இருந்தவர். எனக்கு மூத்தவரும்கூட. எனவே, நீங்களே நாம் எடுத்துள்ள முடிவை முஸ்லிம் பெருமக்களிடம் முதலில் கூறுங்கள்" என்று அம்ரு இப்னு ஆஸ் கூறினார்.

அம்ரு இப்னு ஆஸ் அவர்களின் வஞ்சக எண்ணத்தை புரிந்துக் கொள்ளாத அபூமூஸா அவர்கள், "நாங்கள் இருவரும் சேர்ந்து ஒரு முடிவை எடுத்துள்ளோம். அதன் மூலம் முஸ்லிம்களிடையே ஏற்பட்டுள்ள பிரச்சினையும், பகையும் தீரும் என நம்புகிறோம்" என்று கூறிக் கொண்டிருக்கும் போது, ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் குறுக்கிட்டு, "அபூமூஸாவே! நீர் வஞ்சிக்கப் படுவீர் என நான் சந்தேகப் படுகிறேன். நீங்கள் இருவரும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்திருந்தால், அதை அம்ரு இப்னு ஆஸ் அவர்களையே முதலில் கூறும்படி சொல்லுங்கள்" என்று கூறினார்கள்.

ஆனால் அதை அலட்சியப் படுத்திய அபூமூஸா அவர்கள் தமது பேச்சை தொடர்ந்தார்கள். "நானும், அம்ரு இப்னு ஆஸ் அவர்களும் சேர்ந்து ஒரு தீர்மானத்திற்கு வந்திருக்கிறோம். ஹழரத் அலீ (கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம்) அவர்களையும், முஆவியா ரலி அவர்களையும் கலீஃபா பதவியிலிருந்தும் நீக்கிவிட்டோம். புதிய கலீஃபாவை தேர்வு செய்யும் பொறுப்பை முஸ்லிம்களாகிய உங்களிட்மே ஒப்படைக்கிறோம். மேலும், நானும் எனது பங்குக்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையும், முஆவியா ரலி அவர்களையும் நீக்கம் செய்துவிட்டேன்" என்று கூறினார்.

உடனே அம்ரு இப்னு ஆஸ் எழுந்து, "சபையோர்களே! முஸ்லிம்களே! நீங்கள் அபூமூஸா அவர்கள் கூறியதற்கு சாட்சியாக இருக்க வேண்டும். அவர் தம்முடைய தோழர் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை கலீஃபா பதவியிலிருந்து நீக்கம் செய்து விட்டார். நானும் அவரை பதவி நீக்கம் செய்துவிட்டேன். ஆனால், முஆவியா ரலி அவர்களை நான் நீக்கம் செய்யவில்லை. அவரையே கலீஃபாவாக, அமீருல் முஃமினீனாக

நியமிக்கிறேன். ஏனெனில், அவர் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய வலியாக – பொறுப்பாளராக இருக்கிறார்" என்று கூறினார். அதைக் கேட்டு அனைவரும் திகைத்து போய் நின்றனர்!

அந்த சூழ்நிலையைக் கண்ட ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ், ஹழரத் ஸஅத் இப்னு அபீவக்காஸ் ரலியல்லாஹு அன்ஹும் போன்றவர்கள், அபூ மூஸா அஷ்அரீ அவர்கள் மீது குற்றம் சாட்டத் தொடங்கினர். அவரோ, "நான் என்ன செய்வேன். அம்ரு இப்னு ஆஸ் என்னை நம்பவைத்து ஏமாற்றிவிட்டார். எனக்கு வாக்குறுதி கொடுத்து ஏமாற்றி விட்டார்" என்று கூறினார். பிறகு அம்ரு இப்னு ஆஸைப் பார்த்து, "அல்லாஹ் உமக்கு நேர்வழி காட்டுவானாக! நீர் எனக்கு வாக்குறுதி கொடுத்து, மீறிவிட்டீரே!" என்றார். பிறகு அவர்களிடையே வார்த்தைப் போர் நடந்தது. அதைத் தொடர்ந்து இரு தரப்பு வீரர்களும் வாட்களை உருவிக் கொண்டனர். நிலைமை மோசமாகவே, முஸ்லிம் பெருமக்களில் சிலர் தலையிட்டு, இரு தரப்பினரையும் சமாதானப் படுத்தினர்.

அதன் பிறகு, அபூ மூஸா அஷ்அரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் புனித மக்காவை நோக்கி பயணமானார்கள். அம்ரு இப்னு ஆஸ் அவர்கள், தமது படை வீரர்களுடன் டமாஸ்கஸ் நோக்கிப் புறப்பட்டார். ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் மற்றும் ஹழரத் ஷுரைஹ் இப்னு ஹானீ ரலியல்லாஹு அன்ஹும் தமது வீரர்களுடன் கூபாவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூபாவை அடைந்ததும், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை சந்தித்து நடந்த நிகழ்வுகளை எல்லாம் கூறினார்கள். அதைக் கேட்டு அமீருல் முஃமினீன் அவர்கள் மிகவும் மனவருத்தமடைந்தார்கள். (தாரீக் இஸ்லாம், பாகம்1, பக்கம் 578-586, தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 423-426)

## நஹர்வான் யுத்தம்:

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், ஹழரத் அபூ மூஸா அஷ்அரீ அவர்களை தீர்ப்பு வழங்கும் இடமான 'தவ்மத்துல் ஜன்தல்' பகுதிக்கு அனுப்பிய பிறகு, காரிஜிய்யாக்களிலிருந்து ஸர்ஆ மற்றும் ஹர்கூஸ் இப்னு ஸஹீர் ஆகிய இருவரும் அமீருல் முஃமினீன் அவர்களிடம் வந்தார்கள். ஹர்கூஸ் என்பவன் அமீருல் முஃமினீன் அவர்களிடம், "ஹழரத் அலீ அவர்களே! நீங்கள் செய்த பெரும்பாவங்களுக்காக முதலில் தவ்பா செய்யுங்கள். முஆவியாவுடன் செய்த ஒப்பந்தத்தையும் முறித்து

விடுங்கள். பிறகு எங்களுடன் சேர்ந்து போருக்கு புறப்படுங்கள். எங்கள் உயிர் உள்ளவரை நாங்கள் உங்களுடன் போர் புரிவோம்” என்றான்.

அதற்கு அமீருல் முஃமினீன் அவர்கள், “உங்களால்தான் நான் போரை நிறுத்தினேன். ஒப்பந்தமும் செய்துக் கொண்டேன். இப்போது அந்த ஒப்பந்தத்தை மீறி போர் புரிவது நியாயமில்லை” என்றனர். உடனே ஹர்கூஸ், “இதைத்தான் நாங்கள் பாவம் என்கிறோம். இதற்காகத்தான் தவ்பா செய்யும்படியும் கூறுகிறோம்” என்றான். அதற்கு அமீருல் முஃமினீன் அவர்கள், “இது பாவமல்ல. இது சொற் பொருளாகும்” என்றார்கள்.

அப்போது ஸர்ஆ, “ஹழரத் அலீ அவர்களே! நீங்கள் மனிதர் களுடைய தீர்ப்பை புறக்கணிக்காவிட்டாலும், தவ்பா செய்யா விட்டாலும், நாங்கள் அல்லாஹ்வுக்காக உங்களுடன் போர் புரிவோம்” என்றான். அதைக் கேட்ட அமீருல் முஃமினீன் அவர்கள், “உன் மீது ஆவி இருக்கிறது. நீ என் மீது இவ்வளவு அழுத்தம் கொடுக்க, என்னை பிணம் என்று நினைத்துக் கொண்டாயோ? போ! நான் ஒப்பந்தத்தை மீறமாட்டேன்” என்று கூறினார்கள். அதைக்கேட்டதும் அவ்விருவரும் “லா ஹுக்ம இல்லல்லாஹ், லா ஹுக்ம இல்லல்லாஹ்” என்று கூறியபடியே அங்கிருந்தும் புறப்பட்டனர்.

பிறகு ஒருநாள், அமீருல் முஃமினீன் அவர்கள் மஸ்ஜிதில் குதுபா பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அப்போது காரிஜிய்யாக்களில் சிலர், “லா ஹுக்ம இல்லல்லாஹ்” (ஆட்சி அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்குமில்லை) என்று கத்தினர். அமீருல் முஃமினீன் அவர்கள் பிரசங்கத்தை நிறுத்திவிட்டு, “அல்லாஹு அக்பர்! நீங்கள் சொல்லும் கலிமா உண்மையாகும். ஆனால் வெளிப்படுத்தும் முறைதான் தவறு” என்று கூறிவிட்டு, தமது பிரசங்கத்தை மீண்டும் தொடர்ந்தார்கள். மறுபடியும் அவர்கள் கத்தினார்கள். அப்போது அமீருல் முஃமினீன் அவர்கள், “நான் உங்களை எந்த விஷயத்திலும் தடை செய்யவில்லை. சண்டையிட்டதில்லை. இனிமேலும், நீங்கள் என்னை எதிர்க்காதவரை உங்களுடன் சண்டையிட மாட்டேன்” என்று கூறினார்கள்.

காரிஜிய்யாக்கள் மஸ்ஜிதிலிருந்து புறப்பட்டு நேரே அப்துல்லாஹ் பின் வஹப் அர்ராசிபீ என்பவரிடம் சென்றனர். மற்றவர்களும் அங்கு வந்து ஒன்று கூடினர். அப்போது ஹம்ஸா பின் ஸினான், “நமக்கு ஒரு அமீர் தேவை. நாம் எல்லோரும் சேர்ந்து நம்மில் ஒருவரை அமீராக தேர்வு செய்வோம்” என்றார். பிறகு முக்கிய நபர்களிடம் தேர்வு நடத்தப்பட்டது. ஆனால் எவரும் ஒப்புக் கொள்ளவில்லை. கடைசியாக அப்துல்லாஹ் இப்னு வஹப்பிடம் கேட்டனர். அவர் ஒப்புக் கொண்டார். எனவே காரிஜிய்யாக்கள் அனைவரும் அவருடைய கையைப் பிடித்து பைஅத் செய்தனர்.

இப்படியாக ஹிஜ்ரி 38, ஷவ்வால் மாதம், பத்தாம் நாள் அப்துல்லாஹ் பின் வஹப் அர்ராசிபீக்கு காரிஜிய்யாக்கள் பைஅத் செய்தனர்.

அப்துல்லாஹ் இப்னு வஹப், “நாம் அனைவரும் நன்மையின் பக்கம் இருக்கிறோம். வாருங்கள், நமக்காக ஒரு இடத்தை ஏற்படுத்திக் கொள்வோம். அங்கிருந்து நமது கொள்கைகளை பரப்புவோம்” என்றார். அப்போது ஷுரைஹ் என்பவர், “நாம் மதாயினை எளிதாக கைப்பற்றலாம். அங்குள்ளவர்களை நாம் அப்புறப்படுத்திவிட்டு, பஸராவில் இருக்கும் நமது தோழர்களை அழைத்துக் கொள்ளலாம். எனவே நாம் மதாயினை நோக்கி புறப்படலாம்” என்றார்.

ஜைத் என்பவர், “நாம் எல்லோரும் ஒன்றாக சேர்ந்து கிளம்பினால், மற்றவர்கள் நம்மை பின்தொடருவார்கள். எனவே, நாம் சிறு சிறு குழுக்களாக செல்வோம். முதலில் மதாயின் செல்வதற்கு பதிலாக நஹர்வானில் உள்ள பாலத்தின் அருகே ஒன்று கூடுவோம். அங்கிருந்து கடிதங்கள் மூலம் நமது தோழர்களையும் அழைத்துக் கொள்வோம்” என்றார். இந்த யோசனை அப்துல்லாஹ் இப்னு வஹபுக்கும் பிடித்திருந்தது.

காரிஜிய்யாக்கள் தமது திட்டப்படி புறப்படத் தயாரானார்கள். ஜும்ஆ இரவு முழுவதும், பகல் முழுவதும் இபாதத்திலேயே கழித்தனர். சனிக் கிழமை காலை முதல் ஒருவர் ஒருவராக, இருவர் இருவரக நஹர்வான் நோக்கிப் புறப்பட்டனர்.

காரிஜிய்யாக்கள் மதாயின் நோக்கிச் செல்வதை அறிந்த அமீருல் முஃமினீன் அவர்கள், அதுபற்றி மதாயினுடைய கவர்னர் ஸஅத் இப்னு மஸ்ஊத் அவர்களுக்கு கடிதம் எழுதினார். கடிதத்தைக் கண்ட ஸஅத் இப்னு மஸ்ஊத் அவர்கள் ஐநூறு வீரர்களுடன் புறப்பட்டுச் சென்று காரிஜிய்யாக்களை வழிமறித்தனர். உடனே அவர்கள் நஹர்வான் நோக்கிச் செல்வதற்கு பதிலாக, பகுதாது நோக்கிச் செல்லத் தொடங்கினர். அதை அறிந்த ஸஅத் இப்னு மஸ்ஊத் அவர்கள் வேகமாகச் சென்று ‘கரக்’ என்னும் இடத்தில் அவர்களை மீண்டும் வழி மறித்தார். அதே நேரம் அப்துல்லாஹ் இப்னு வஹப் இருபது குதிரை வீரர்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். உடனே சண்டை ஆரம்பமானது. இரவுவரை சண்டை நடந்தது. இருள் சூழ்ந்ததும் சண்டை நிறுத்தப்பட்டது. அதே இரவில் அப்துல்லாஹ் இப்னு வஹப் டைக்ரீஸ் நதியைக் கடந்து சென்று தம் சகாக்களுடன் சேர்ந்து கொண்டார். பிறகு அவர்கள் அனைவரும் நஹர்வானை நோக்கி பயணமாயினர்.

பஸராவிலிருந்து ஐநூறு காரிஜிய்யாக்கள் புறப்பட்டனர். அதை அறிந்த அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுு அன்ஹுு அவர்கள், அவர்களை பின்தொடரும்படி அபுல் அஸ்வத்தை படையுடன் அனுப்பி வைத்தார்கள். டைக்ரீஸின் பாலம் அருகே இரு படைகளும் சந்தித்தன. அஸர் முதல் இஷா வரை சண்டை நடந்தது. அன்று இரவு

காரிஜிய்யாக்கள் டைக்ரீஸ் நதியைக் கடந்து சென்று அப்துல்லாஹ் இப்னு வஹபுடன் சேர்ந்துக் கொண்டனர்.

அதே சமயம் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் சிரியா மீது போர் தொடுக்க நாட்டம் கொண்டார்கள். எனவே மக்களைக்கூட்டி, ஒரு பிரசங்கம் செய்தார்கள். அதில், “மக்களே! நடுவர்கள் இருவரும் திருக்குர்ஆனின் வழிகாட்டுதலை விட்டுவிட்டு, தமது சொந்த விருப்பு, வெறுப்பை வைத்து தீர்ப்பு கூறியுள்ளனர். இரு நடுவர்களுக்கும் இடையில் கருத்து வேறுபாடும் இருந்துள்ளது. எனவே, இந்த தீர்ப்பை விட்டு அல்லாஹ்வும், அவனுடைய தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களும், நன்நெறியாளர்களும் சுதந்திரமானவர் களாக இருக்கிறார்கள். ஆகையினால் நாம் சிரியா மீது போர் தொடுக்க ஆயத்தமாவோம்” என்று கூறினார்கள்.

பிறகு நஹர்வானில் உள்ள காரிஜிய்யாக்களுக்கும் ஒரு கடிதம் எழுதினார்கள். அதில், “நீங்கள் சிரியா மீது போர் தொடுக்க விருப்பப் பட்டீர்கள். இப்போது நானும் சிரியா மீது போர் தொடுக்க நாட்டம் கொண்டுள்ளேன். எனவே வாருங்கள், நாம் அனைவரும் சேர்ந்து சிரியா மீது போர் தொடுப்போம்” என்று எழுதியிருந்தார்கள். அதற்கு காரிஜிய்யாக்கள், “நீங்கள் அல்லாஹ்வின் தீர்ப்பை வைத்து இந்த முடிவை எடுக்கவில்லை. மாறாக உங்கள் மன இச்சைப்படியே எடுத்துள்ளீர்கள். மேலும், நீங்கள் உங்களை ‘காபிர்’ என்று ஒப்புக் கொண்டு தவ்பா செய்தால், நாங்கள் உங்களுடன் சேர்ந்து போர் புரிய தயாராக இருக்கிறோம். இல்லையென்றால் நாங்கள் உங்களை எதிர்த்தும் போர் செய்வோம்”என்று பதில் எழுதினார்கள்.

அந்த கடிதத்தைப் படித்த பிறகு, காரிஜிய்யாக்கள் போரில் கலந்துக் கொள்ளமாட்டார்கள் என்னும் முடிவுக்கு வந்த அமீருல் முஃமினீன் அவர்கள், பஸராவில் இருக்கும் ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு படைகளை அனுப்பும்படி கடிதம் எழுதினார்கள். அதன்படி அவர்கள் அஹனஃப் இப்னு கைஸ் அவர்களின் தலைமையில் 1500 வீரர்களை முதலில் அனுப்பி வைத்தார்கள். பிறகு, 1600 வீரர்களை ஹாரிஸா இப்னு குதாமா அவர்கள் தலைமையில் அனுப்பி வைத்தார்கள். இவர்களைத் தவிர 40,000 அனுபவமிக்க வீரர்களும், 17,000 புதிய வீரர்களும், 8,000 அடிமைகளும் அமீருல் முஃமினீன் அவர்களுடன் இருந்தார்கள்.

சிரியா மீது போர் தொடுக்க ஏற்பாடுகள் நடந்துக் கொண்டிருக்கும் போது, நஹர்வான் பக்கமாக சென்றுக் கொண்டிருந்த ஹழரத் அப்துல்லாஹ் இப்னு குபாப் ஸஹாபி அவர்களை, பஸராவைச் சேர்ந்த காரிஜிய்யாக்கள் கொலை செய்துவிட்டதாகவும், அவர்களுடன் இருந்த அவரின் துணைவியார் மற்றும் இரண்டு பெண்களின் வயிற்றைக் கிழித்து அவர்களையும்

கொலை செய்துவிட்டதாகவும் அமீருல் முஃமினீன் அவர்களுக்கு செய்தி வந்தது. அதை அறிந்து அமீருல் முஃமினீன் அவர்கள் மிகவும் மனவருத்தம் அடைந்தார்கள். ஆயினும் உண்மை நிலையை அறிந்துவர ஹர்ஸ் என்பவரை நஹர்வானுக்கு அனுப்பி வைத்தார்கள். காரிஜிய்யாக்கள் அவரையும் கொலை செய்தனர்.

அப்போது, அமீருல் முஃமினீன் அவர்களுடன் இருந்த வீரர்கள், "அமீருல் முஃமினீன் அவர்களே! காரிஜிய்யாக்களின் அட்டகாசம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. சிரியாவின் மீது படையெடுக்கும் முன்பாக காரிஜிய்யாக்களை அடக்க வேண்டியது அவசியம் என நாங்கள் எண்ணுகிறோம். அப்போதுதான் நமது குடும்பத்தாரை தைரியமாக விட்டுச் செல்லலாம்" என்றார்கள். அமீருல் முஃமினீன் அவர்களுக்கும் அது நியாயமாகப் பட்டது. எனவே, சிரியா மீது படையெடுப்பதை தள்ளிவைத்து விட்டு, காரிஜிய்யாக்களை நோக்கிச் சென்றார்கள்.

காரிஜியாக்களிடம் வந்து, "எமது முஸ்லிம் சகோதரர்களை கொலை செய்தவர்கள் யார்?" அவர்களை எம்மிடம் ஒப்படைத்து விடுங்கள்" என்று காரிஜிய்யாக்களிடம் கூறினார்கள். அதற்கு காரிஜிய்யாக்கள், "நாங்கள் அனைவரும் சேர்ந்துதான் அவர்களைக் கொன்றோம். அவர்களுடைய இரத்தமும், உங்களுடைய இரத்தமும் சிந்தப்படுவதை எங்கள் சமய நெறிப்படி நியாயமானதாகக் கருதுகிறோம். என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் ஹழரத் கைஸ் இப்னு ஸஅத் மற்றும் அபூ அய்யூப் அன்ஸாரி ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோர் காரிஜிய்யாக்களிடம் பேசினார்கள். அறிவுரைகள் கூறினார்கள். ஆனால் எதையுமே அவர்கள் ஏற்கவில்லை. அவர்களைத் தொடர்ந்து அமீருல் முஃமினீன் அவர்கள் மீண்டும் அவர்களுடன் பேசினார்கள்.

அப்போது அவர்கள், "சந்தேகமின்றி நடுவர்கள் விஷயத்தில் நாங்கள் தவறு செய்து விட்டோம். அதனால் நாங்கள் அனைவரும் காபிர்கள் ஆகிவிட்டோம். பிறகு தவ்பா செய்து மீண்டும் முஸ்லிம்களாக ஆகிவிட்டோம். நீங்களும் எங்களைப் போலவே தவ்பா செய்து முஸ்லிமாக ஆகிவிட்டால், நாங்கள் உங்களுடன் இருப்போம். எங்களை புறக்கணித்தால் உங்களுடனும் நாங்கள் போர் புரிவோம்" என்றார்கள்.

அமீருல் முஃமினீன் அவர்கள், "நான் எப்படி என்னை காபிர் என்று கூறுவது? நானோ முஃமினாக இருக்கிறேன். இறைவழியில் ஹிஜ்ரத் செய்திருக்கிறேன். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஜிஹாதில் கலந்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறினார்கள். அதற்கு காரிஜிய்யாக்கள் எந்த பதிலும் கூறவில்லை. எனவே, அமீருல் முஃமினீன் அவர்கள் தமது இருப்பிடத்திற்கு திரும்பி வந்தார்கள். போருக்கான ஏற்பாடுகளையும்

செய்யத் தொடங்கினார்கள். ஹழரத் ஹஜர் இப்னு அதீ அவர்களை வலதுபுற படைப்பிரிவுக்கு தளபதியாக நியமித்தார்கள். ஹழரத் ஷீத் இப்னு ரப்ஈ அவர்களை இடதுபுற படைப்பிரிவுக்கு தளபதியாக்கினார்கள். காலாட்படைக்கு ஹழரத் அபூ அய்யூப் அன்ஸாரி அவர்களையும், புனித மதீனாவின் படைகளுக்கு ஹழரத் அபூ கத்தாத அவர்களையும் நியமித்தார்கள்.

காரிஜிய்யாக்களில் ஷுரைஹ் பின் அவ்ஃபா, ஹம்ஸா பின் ஸினான், ஹர்கூஸ் பின் ஸஹீர் போன்ற தளபதிகள் இருந்தனர். அமீருல் முஃமினீன் அவர்கள், சமாதானக் கொடியை ஹழரத் அபூ அய்யூப் அவர்களிடம் ஒப்படைத்தார்கள். அவர்கள், அமீருல் முஃமினீன் அவர்களுடைய உத்தரவுப்படி, “எவர் போர் புரியாது வந்து விடுகிறாரோ அவருக்கு பாதுகாப்பு வழங்கப்படும். எவர் எதிர்ப்பு காட்டாமல் ஒதுங்கி விடுகிறாரோ அவருக்கும் பாதுகாப்பு வழங்கப்படும். எவர் கூபா மற்றும் மதாயினை நோக்கிச் சென்று விடுகிறாரோ அவருக்கும் பாதுகாப்பு வழங்கப்படும்” என்று உரக்கக் கூறினார்கள். அதைக் கேட்ட ஐநூறுக்கும் அதிகமான குதிரைப்படை வீரர்கள் காரிஜிய்யாக்களை விட்டும் பிரிந்து சென்று விட்டார்கள். சிலர் கூபாவுக்கு சென்று விட்டார்கள். சில வீரர்கள் அமீருல் முஃமினீன் அவர்களுடைய படையில் சேர்ந்து விட்டார்கள்.

இவ்வாறு பிரிந்து சென்றவர்களின் எண்ணிக்கை 4,000 ஆகும். இப்போது காரிஜிய்யாக்களின் படையில் மிச்சம் இருந்தது 1,800 வீரர்கள்தான். அமீருல் முஃமினீன் அவர்கள் காரிஜிய்யாக்களைத் சுற்றி வளைத்து தாக்கினார்கள். வாட்கள் சுழற்றப்பட்டன. அம்புகள் எய்யப்பட்டன. சிறிது நேரத்திலேயே காரிஜிய்யாக்கள் அனைவரும் கொல்லப்பட்டனர். அவர்களின் பிரசித்திபெற்ற தளபதிகளும் கொல்லப்பட்டனர். அமீருல் முஃமினீன் அவர்களுடைய தரப்பில் இருவர் மட்டுமே கொல்லப்பட்டனர்.

போர் முடிந்ததும் அமீருல் முஃமினீன் அவர்கள், “வீரர்களே! கொல்லப்பட்ட காரிஜிய்யாக்களில் ஊனமான கையுடையவனை தேடுங்கள். ஏனெனில், அண்ணல் நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்கள், “கைபுஜம் மட்டுமே உள்ள ஒரு மனிதன் அவர்களுக்கு (காரிஜிய்யாக்களுக்கு) அடையாளம் ஆவான். (அவனுக்கு) முழங்கைக்கு கீழே கையிருக்காது. அவனது கைபுஜத்தின் மீது மார்புக் காம்பைப் போன்று ஒரு கட்டி இருக்கும். அதன் மீது வெள்ளை முடிகள் முளைத்திருக்கும்” என்று அடையாளம் கூறியுள்ளார்கள். (ஸஹீஹ் முஸ்லிம், 1934) எனவே அவனைத் தேடுங்கள்” என்று கூறினார்கள்.

எனவே மக்கள் தேடிப்பார்த்த போது அவன் தட்டுப்படவில்லை. பிறகு அமீருல் முஃமினீன் அவர்களே எழுந்து சென்று, ‘உடல்களை நகர்த்துங்கள்’ என்று சகாக்களிடம் கூறினார்கள். அப்போது அவனது

உடல் ஒரு பள்ளத்தில் கிடப்பதைக் கண்டார்கள். உடனே அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் 'அல்லாஹூ அக்பர்' என்று தக்பீர் முழங்கினார்கள். பிறகு, "அல்லாஹ் உண்மையே கூறினான். அவனுடைய தூதர் ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களும் அவனுடைய செய்தியை நமக்கு எட்டச் செய்தார்கள்" என்று கூறினார்கள்.

காரிஜிய்யாக்களின் கனீமத்துப் பொருட்கள் சேகரிக்கப்பட்டு, வீரர்களுக்கு பங்கீடு செய்யப்பட்டது. பெண்களையும், அடிமைகளையும் விடுவித்து விட்டனர். இப்படியாக நஹர்வான் போர் முடிவுக்கு வந்தது. (தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 431, தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 591)

## எகிப்தின் நிலை:

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், நஹர்வான் போர் முடிந்ததும் சிரியா மீது போர் தொடுக்க நாட்டம் கொண்டார்கள். ஆயினும் ஹழரத் அஷ்அஸ் இப்னு கைஸ் அவர்கள், "இப்போது வீரர்களின் நிலைமை சரியில்லை. அவர்கள் உடலாலும், மனதாலும் பலஹீனப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஓய்வு தேவை" என்று கூறினார்கள். அமீருல் முஃமினீன் அவர்களுக்கு அது சரியாகப் படவில்லை. என்றாலும் தமது வீரர்களுடன் புறப்பட்டு 'நகீலா' என்னும் இடத்தில் தங்கினார்கள். சிரியா போர் முடியும் வரை வீரர்கள் எவரும் கூபாவில் உள்ள தமது வீடுகளுக்கு செல்லக் கூடாது" என்று தமது வீரர்களுக்கு கட்டளை பிறப்பித்தார்கள். ஆனால் பெரும்பாலான வீரர்கள் தத்தமது வீடுகளுக்கு சென்று விட்டார்கள்.

அமீருல் முஃமினீன் அவர்கள் கூபாவுக்குச் சென்று தலைவர்களை எல்லாம் சந்தித்தார்கள். அவர்களிலும் பலர் போரை விரும்பவில்லை. அதன் பிறகு அமீருல் முஃமினீன் அவர்கள் மக்களைக் கூட்டி, பிரசங்கம் புரிந்தார்கள். போருக்கு உற்சாகமூட்டினார்கள். ஆயினும் பெரும்பாலானவர்கள் மவுனமாகவே இருந்தார்கள். வீரர்களும், தலைவர்களும் தமது உத்தரவுகளை புறக்கணிக்கும் நிலையை எண்ணி அமீருல் முஃமினீன் அவர்கள் மிகவும் மனவருத்தமுற்றார்கள். மேலும், சிரிய்யா மீது போர்த்தொடுக்கும் எண்ணத்தையும் கைவிட்டார்கள்.

எகிப்தின் கவர்னராக ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் இருந்தார்கள். எகிப்தில் இருந்த ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹூ அன்ஹூ அவர்களின் கொலைக்கு நியாயம் கேட்டு போராடியவர்கள், முஆவியா இப்னு கதீஜ் என்பவரை தமது தலைவராக தேர்ந்தெடுத்தார்கள். அவர்கள் அமீருல் முஃமினீன் அவர்களின் ஆட்சிக்கு எதிராக அங்கங்கே போராட்டங்களை நடத்தினார்கள்.

எனவே அவர்களை அடக்க விரும்பிய ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்கள், இப்னு மளாஹிம் அவர்கள் தலைமையில் படை ஒன்றை அனுப்பி வைத்தார்கள். முஆவியா இப்னு கதீஜ் அவர்கள், அவரை தோற்கடித்து கொன்றும் போட்டார்கள். அதனால் மக்களிடையே கலகம் ஏற்பட்டது. மக்கள் ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்களை சுற்றிவளைத்து தாக்கினார்கள். இந்த விஷயத்தை அறிந்த அமீருல் முஃமினீன் அவர்கள், எகிப்தின் நிலைமையை சீர்படுத்தும்படி மாலிக் அஷ்தர் அவர்களுக்கு கடிதம் எழுதினார்கள். மாலிக் அஷ்தர் அவர்கள் எகிப்து நோக்கி புறப்பட்டார்கள். ஆனால், எகிப்தை அடையும் முன்பே அவர்கள் வஃபாத் ஆனார்கள்.

எகிப்தில் கிளர்ச்சியாளைகளின் தலைவனாக இருந்த முஆவியா இப்னு கதீஜ், தமது உதவிக்கு படைகளை அனுப்பிவைக்கும்படி முஆவியா ரலி அவர்களுக்கு கடிதம் எழுதினார். உடனே முஆவியா ரலி அவர்கள், அம்ரு இப்னு ஆஸ் தலைமையில் 6,000 வீரர்கள் கொண்ட படையை அனுப்பி வைத்தார். ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்களுக்கு ஒரு கடிதத்தையும் கொடுத்து அனுப்பினார்கள். அம்ரு இப்னு ஆஸ் எகிப்தை நெருங்கி, மைதானம் ஒன்றில் முகாமிட்டார். அங்கிருந்தபடியே கடிதத்தை ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்களுக்கு அனுப்பி வைத்தார்.

ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்கள் கடிதத்தை படித்த பிறகு, அதை அமீருல் முஃமினீன் அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அமீருல் முஃமினீன் அவர்கள் கூபாவாசிகளை ஒன்றுகூட்டி, எகிப்தின் நிலைமையை விளக்கிக் கூறினார்கள். ஆயினும் 2,000 வீரர்கள் மட்டுமே போருக்கு தயாரானார்கள். அமீருல் முஃமினீன் அவர்கள் மிகுந்த மனவேதனையுடன் அந்த 2,000 வீரர்களை மாலிக் இப்னு கஅப் அவர்கள் தலைமையில் எகிப்துக்கு அனுப்பி வைத்தார்கள். அதே சமயம் எகிப்தில் ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்கள், அம்ரு இப்னு ஆஸ் அவர்களை எதிர்க்க கினானா பஷர் தலைமையில் 2,000 வீரர்களை அனுப்பி வைத்தார்கள். கினானா பஷர் அவர்கள் சிரியா படைகளால் கொல்லப்பட்டார்கள். உயிர் பிழைத்தவர்கள் இங்கும் அங்குமாக சிதறி ஓடிப் போனார்கள்.

அதன்பிறகு, ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்கள் 2,000 வீரர்களுடன் அம்ரு இப்னு ஆஸை எதிர்க்கக் கிளம்பினார்கள். ஆனால், சிரியா படைகள் மீது கொண்ட அச்சத்தால் வீரர்கள் அனைவரும் அவரை தனியாக விட்டுவிட்டு, போரிலிருந்தும் விலகிக் கொண்டார்கள். தனியாக சிக்கிக் கொண்ட ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்கள், ஜபலா பின் மஸ்ரூக் அவர்களுடைய வீட்டில் தஞ்சம் புகுந்தார்கள்.

முஆவியா இப்னு கதீஜும் அவனது படைகளும் ஜபலா பின் மஸ்ரூக் அவர்களுடைய வீட்டை சுற்றி வளைத்துக் கொண்டனர். வேறு வழியில்லாமல் ஹழரத் முஹம்மத் இப்னு அபூபக்கர் அவர்கள் வெளியே வந்து, இயன்ற அளவு போர் புரிந்தார்கள். பிறகு சிரியா வீரர்களால் கைது செய்யப்பட்டார்கள் கைதான அவரை முஆவியா இப்னு கதீஜ் கொலை செய்தான். பிறகு அவருடைய உடலை செத்த குதிரையின் தோலில் கட்டி எரித்து விட்டார். முதலாம் கலீஃபாவின் பிள்ளைக்கு இந்த உம்மத்து கொடுத்த பரிசு இதுதான்!

அமீருல் முஃமினீன் அவர்கள் எகிப்தில் நடந்த இந்த விஷயங்களை அறிந்து மிகவும் வேதனையடைந்தார்கள். மாலிக் இப்னு கஅப் அவர்களையாவது காப்பாற்ற நினைத்து, அவரை திரும்ப அழைத்து வரும்படி ஆட்களை அனுப்பினார்கள். அவர் பத்திரமாக கூபா வந்து சேர்ந்தார். அமீருல் முஃமினீன் அவர்கள் கூபாவாசிகளை ஒன்று கூட்டி, “உங்கள் அலட்சியத்தால்தான் நாம் சிரியாவையும் எகிப்தையும் இழந்தோம்” என்று கூறினார்கள். அதற்கும் கூபாவாசிகள் எந்த ஒரு பதிலையும் கூறாமல் மவுனமாகவே இருந்தார்கள். எனவே அமீருல் முஃமினீன் அவர்கள் சிரியா மற்றும் எகிப்தின் மீதிருந்த எண்ணத்தை கைவிட்டார்கள்.

எகிப்தை வெற்றி கொண்டதால் முஆவியா ரலி அவர்களின் பலம் இன்னும் கூடியது. சிரியா மக்கள் அவருக்கு பைஅத் செய்தனர். அவரை அமீருல் முஃமினீன் என்றும் அழைத்தனர். எனவே, எகிப்தைத் தொடர்ந்து பஸராவையும் வெற்றி கொள்ள நாட்டம் கொண்டார். அதன்படி அப்துல்லாஹ் இப்னு ஹழ்ரமீ என்பவரை பஸராவுக்கு அனுப்பி வைத்தார். பஸராவில் உள்ள ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் அனுதாபிகளை ஒன்று சேர்க்கும்படியும், அவர்களின் உள்ளங்களில் பழிவாங்கும் வெறியை தூண்டிவிடும்படியும் அவர் உத்தரவிட்டார்.

அப்துல்லாஹ் இப்னு ஹஷ்ரமீ பஸரா வந்தபோது, அதன் கவர்னரான அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்கள், அமீருல் முஃமினீன் அவர்களை சந்திக்க கூபா சென்றுவிட்டிருந்தார்கள். எனவே ஹஷ்ரமீக்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பமாக அமைந்தது. அவர் தமது திட்டப்படி ஒரு பெரிய கூட்டத்தை தம்முடன் சேர்த்துக் கொண்டார்.

பஸராவில் நடக்கும் விஷயங்கள் அமீருல் முஃமினீன் அவர்களுக்கு தெரியவந்ததும், அவர்கள் அயீன் என்பவரை பஸராவுக்கு அனுப்பி வைத்தார்கள். அவர், ஹஷ்ரமீ கூட்டி வைத்திருந்த அனுதாபிகள் கூட்டத்தில் பிளவை ஏற்படுத்தினார். ஹிஜ்ரி 38ன் கடைசி பகுதியில் ஹஷ்ரமீ மரணமடைந்தார்.

பஸராவில் ஒரு பகுதியினர் அமீருல் முஃமினீன் அவர்களுக்கும், ஒரு பகுதியினர் முஆவியா ரலி அவர்களுக்கும் ஆதரவு தந்து பிரிந்துக் கிடப்படைக் கண்ட பாரசீகர்கள், பஸராவில் புரட்சியை ஏற்படுத்த முயன்றார்கள். உடனே அமீருல் முஃமினீன் அவர்கள் ஹழரத் ஜியாத் அவர்களை பாரசீகர்கள் மீது படை எடுத்துச் செல்லும்படி, பஸராவின் கவர்னருக்கு கடிதம் எழுதினார்கள். ஜியாத் அவர்கள் பாரசீகம் சென்று பலமாக தாக்கினார்கள்.

அதே சமயம் அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு எதிராக ஆங்காங்கே புரட்சிகள் வெடித்தன. முஆவியா ரலி அவர்களோ இந்த சூழ்நிலையை நன்றாக பயன்படுத்திக் கொண்டார். தனது வள்ளல் தன்மை, மன்னிக்கும் தன்மை, தெரிந்தும் தெரியாதவாறு நடிக்கும் தன்மை, விசுவாச தன்மை போன்றவற்றைக் கொண்டு மதீனா, தாயிஃப், யமன் போன்ற பல்வேறு பகுதிகளிலிருந்தும் மக்களை தம் பக்கம் இழுத்துக் கொண்டார். அவர்களை டமாஸ்கஸில் அவர் ஒன்று சேர்த்தார். பிறகு நுஃமான் இப்னு பஷீர் அவர்களை 'அய்ன்தம்ர்' என்னும் பகுதிக்கு அனுப்பி வைத்தார். அந்த பகுதியின் பொறுப்பாளர் மாலிக் இப்னு கஅப் அவர்கள் தோற்கடிக்கப்பட்டார். 'அய்ன்தம்ர்' முஆவியா ரலி அவர்களின் கட்டுப்பாட்டில் வந்தது.

சுஃப்யான் இப்னு அவ்ஃப் அவர்களை பெரும்படையுடன் மதாயின் நோக்கி அனுப்பினார். அவர் அன்பார் மற்றும் மதாயினை தாக்கி, அங்கிருந்த பெருஞ்செல்வத்தை கொள்ளையடித்து டமாஸ்கஸ் நோக்கி ஓடிப்போனார். மதாயினும் முஆவியா ரலி அவர்களின் கட்டுப்பாட்டில் வந்தது.

முஆவியா ரலி அவர்கள் பஸர் பின் அர்தாத் என்பவரை ஹிஜாஸ் மற்றும் யமன் நோக்கி அனுப்பிவைத்தார். மதீனாவாசிகள் முஆவியா ரலி அவர்களுக்கு பைஅத் செய்தனர். பிறகு மக்காவாசிகளும், யமன்வாசிகளும் முஆவியாவுக்கு பைஅத் செய்தனர். ஹிஜ்ரி 40ன் தொடக்கத்தில் யமன், ஹிஜாஸ், சிரியா, பாலஸ்தீனம், எகிப்து போன்ற நாடுகள் முஆவியா ரலி அவர்களின் ஆட்சியின் கீழ் வந்தன. இப்போது அமீருல் முஃமினீன் அவர்களுடைய ஆட்சி இராக் மற்றும் ஈரானில் மட்டுமே இருந்தது. ஆயினும் முஆவியாவின் பகையும், பொறாமையும், பேராசையும் கொஞ்சமும் குறையவில்லை!

ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், "முஆவியாவே! எங்கள் மீது பகை கொள்வதையும், பொறாமைக் கொள்வதையும் விட்டுவிடு. ஏனெனில், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "எவர் எங்களுடன் பகையும், பொறாமையும் கொள்கிறாரோ, அவருக்கு ஜஹன்னம் என்னும் நரக கசையடி கொடுக்கப்படும்" என்று கூறியுள்ளார்கள், என்று கூறினார்கள். (அல் முஅஜம் அல் கபீர்- இமாம் தப்ரானீ, பாகம் 2,

ஹதீஸ் எண்: 2660, பக்கம் 368) ஆயினும் முஆவியா ரலி கடைசி வரை பகையும், பொறாமையும் கொண்டவராகவே இருந்தார். அதே நிலையில் மரணித்தார்!

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், தமது வீர தீரத்தால் இந்த உலகம் முழுவதையும் இஸ்லாமிய ஆட்சியின்ன் கீழ் கொண்டுவர நாட்டம் கொண்டிருந்தார்கள். ஆனால்,ஸஹாபாக்களில் பலரும், உற்றோர் உறவினர்களும், நண்பர்களும், கூபாவாசிகளும், படை வீரர்களும் அவருக்கு எதிராகவே செயல்பட்டனர். அவர்களின் அந்த ஆசை நிராசையானது.

## ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்:

அதேகாலகட்டத்தில் அமீரு முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களுக்கும், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியலொலாஹு அன்ஹு அவர்களுக்கும் இடையே மனஸ்தாபம் ஏற்பட்டது. அதாவது, பஸராவில் இருந்த அபுல் அஸ்வத் என்பவர் ஒரு பொய்க் குற்றச்சாட்டை ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்கள் மீது சுமத்தி, அமீருல் முஃமினீன் அவர்களுக்கு புகார் கடிதம் எழுதி அனுப்பினார். அதில், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்கள் பைத்துல்மாலிலிருந்து தமது சொந்த செலவினங்களை செய்கிறார்" என்று எழுதியிருந்தார்.

அதைப்படித்த அமீருல் முஃமினீன் அவர்கள், "இவ்விதமே பஸராவில் நடக்கும் தகவல்களை எனக்கு தெரிவித்து வாருங்க்ள்" என்று அபுல் அஸ்வத்துக்கு பதில் எழுதினார்கள். பிறகு, "நீங்கள் உங்கள் சொந்தச் செலவினங்களுக்காக பைத்துல் மாலிலிருந்து செலவு செய்வதாக அறிகிறேன். உண்மையா?" எனறு கேட்டு ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்களுக்கும் ஒரு கடிதம் எழுதினார். அதைப் படித்த அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்கள், "இது பொய்க் குற்றச்சாட்டு. நான் செலவு செய்தது என்னுடைய சொந்த பொருளிலிருந்துதான்." என்று பதில் எழுதினார்கள்.

அமீருல் முஃமினீன் அவர்கள், "நீங்கள் செலவு செய்தது உங்கள் சொந்த பொருளிலிருந்து என்று எழுதியுள்ளீர்கள். அந்த பொருள் உங்களுக்கு எங்கிருந்து கிடைத்தது? எப்படி கிடைத்தது? அதை எங்கே வைத்திருந்தீர்கள்?" என்று கேட்டு மீண்டும் கடிதம் எழுதினார்கள். அதைப் படித்த ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் அவர்கள், "எனக்கு இப்படிப்பட்ட கவர்னர் பதவி தேவையில்லை. நீங்கள் யாரை விரும்புகிறீர்களோ அவரை கவர்னராக நியமித்துக் கொள்ளுங்கள். நான் செலவு செய்தது என்னுடைய சொந்த பொருளிலிருந்துதான். என்னுடைய சொந்த பொருளை எனது விருப்பப்படி செலவு செய்ய

எனக்கு முழு அதிகாரம் இருக்கிறது" என்று கடிதம் எழுதி அனுப்பி விட்டு, தமது உடைமைகளை சேகரித்தார்கள். பிறகு புனித மக்காவை நோக்கி புறப்பட்டுச் சென்றார்கள். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 596, தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 436) இவ்விதமாக அமீருல் முஃமினீன் அவர்கள், ஹழரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடைய ஆதரவையும் இழந்தார்கள்.

## ஷஹாதத்

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் ஷஹாதத் பற்றியும் முன்னறிவிப்பு செய்தார்கள். ஹழரத் அம்மார் பின் யாஸிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், எனக்கு முன்பாக ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், "உமது நெற்றியில் இந்த இந்த இடத்தில் தாக்க இருக்கும் அந்த நபர் இழிந்தவன் ஆவான். அந்த தாக்குதலால் இரத்தம் வழிந்து உமது தாடி சிவந்துவிடும்" என்று கூறினார்கள். (ஹாகிம், அபூ நுஅய்ம், கஸாயிஸுல் குப்ரா, பாகம் 2, பக் 252)

ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "ஸமூது கூட்டத்தாரில் அவப்பெயர் எடுத்தவன் யார்" என்று ஹழரத் அலீ இப்னு அபீ தாலிப் கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "ஒட்டகத்தின் கால் நரம்பை அறுத்து கொன்றவன்" என்று கூறினார்கள். "இந்த உம்மத்தில் அவப்பெயர் எடுப்பவன் யார் என்று தெரியுமா?" என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்டார்கள். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், "அல்லாஹ்வே நன்கு அறிந்தவன்" என்று கூறினார்கள். "உம்மைக் கொலை செய்பவந்தான்" (இந்த உம்மத்தில் மிகப்பெரிய அவப்பெயர் எடுப்பவன்) என்று கூறினார்கள். (அல்முஅஜம் அல்கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2005, பக் 105.

ஹழரத் ஜாபிர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள், "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம், "நீர் கலீஃபா ஆக்கப் படுவீர். அதன் பிறகே கொல்லப்படுவீர். உமது தாடி இரத்தத்தில் நறைந்து சிவப்பாகும்" என்று கூறினார்கள். (அல்முஅஜம் அல்கபீர்-இமாம் தப்ரானீ, பாகம் 2, ஹதீஸ் எண்: 2006, பக் 106.)

ஹழரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் நோய்வாய்ப் பட்டிருந்தார்கள். ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் இயாதத்திற்காக ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும், ஹழரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களும் வந்து அங்கு அமர்ந்திருந்தார்கள். அப்போது அவர்களில் ஒருவர், “இந்த நோயால் அவர் இறந்துவிடுவார்” என்றே நான் சந்தேகப்படுகிறேன்” என்று கூறினார். உடனே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், “நிச்சயமாக அவர் இப்போது இறக்க மாட்டார். அவர் இறக்கமாட்டார், (தாக்குதலால்) அவர் ஆவேசம் அடையும் வரை. அவர் இறக்கமாட்டார், அவர் கொல்லப்படும் வரை!” என்று கூறினார்கள். (ஹாகிம்)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், கொலைகாரன் அப்துர் ரஹ்மான் பின் முல்ஜமை நன்கு அறிந்திருந்தார்கள். இது பற்றி ஹழரத் அபூ துபைல் அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ அவர்கள் தமக்கு பைஅத் செய்ய ஜனங்களை அழைத்தார்கள். ஜனக் கூட்டத்தில் அப்துர் ரஹ்மான் பின் முல்ஜமும் இருந்தான். அவனை இதற்கு முன்பும் இரண்டு முறை பார்த்திருந்தார்கள். இம்முறை அவனைப் பார்த்ததும், “தீயவனே! இன்னும் எத்தனை நாள் மறைந்திருப்பாய்? எவனது கைகளில் எனது உயிர் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக! இவன் மூலமாகவே நான் கொல்லப்படுவேன்” என்று கூறினார்கள். பிறகு இந்த கவிதை வரிகளைப் படித்தார்கள். “நீ மரணத்திற்காக காத்திரு. ஏனெனில் மரணம் நிச்சயமாக வரும். அது வரும் போது தப்பிக்க எந்த வழியும் இல்லை!” (அல் முஅஜம் அல் கபீர், இமாம் தப்ரானீ, பாகம் 1, பக்கம் 169)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஹிஜ்ரி 40, ரமலான் மாதம், 17ஆம் நாள் ஷஹீதாக்கப்பட்டார்கள். அதற்கு காரணம், நஹர்வான் போரில் ஒன்பது பேர் தப்பியோடிப் பிழைத்தார்கள். அவர்கள் முதலில் பாரசீகம் சென்று ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுக்கு எதிராக புரட்சியை தூண்டிவிட முயற்சி செய்தனர். ஆனால் அது பலன் தரவில்லை. அதன் பிறகு அவர்கள் இராக் மற்றும் ஹிஜாஸ் பகுதிகளில் சுற்றித் திரிந்தார்கள்.

கடைசியில் புனித மக்காவில் அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் முராதீ, பர்க் பின் அப்துல்லாஹ் தமீமீ, அம்ரு பின் பக்ர் தமீமீ ஆகிய மூவரும் ஒன்று கூடினர்கள். நஹர்வான் போரில் கொல்லப் பட்டவர்கள் பற்றி அனுதாபத்துடன் பேசிக் கொண்டார்கள். பிறகு, இஸ்லாமிய மக்களுக்கு தொல்லைக் கொடுத்துக் கொண்டிருக்கும் மூன்று

தலைவர்களை கொல்வோம் என்று உறுதி எடுத்துக் கொண்டனர். அதனைத் தொடர்ந்து யார் யாரை கொலை செய்வது என்று திட்டம் தீட்டினர். அதன்படி அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் என்பவன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களையும், பர்க் பின் அப்துல்லாஹ், முஆவியா ரலி அவர்களையும், அம்ரு பின் பக்ர், அம்ரு பின் ஆஸ் அவர்களையும்  கொல்வது என முடிவு செய்தனர். இந்த மூன்று பேர்களையும் ரமலான் மாதம் 17ம் நாள் ஃபஜர் தொழுகை நேரத்தில் கொல்வது என்றும் நாள் குறித்தனர்.

திட்டப்படி பர்க் பின் அப்துல்லாஹ் முஆவியாவை கொல்ல டமாஸ்கஸ் சென்றான். அம்ரு பின் பக்ர் அம்ரு பின் ஆஸை கொல்ல எகிப்துக்குச் சென்றார். அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை கொல்ல கூபாவுக்கு வந்தான்.

ரமலான் மாதம் பதினேழாம் நாளும் வந்தது. பர்க் பின் அப்துல்லாஹ் என்பவன் டமாஸ்கஸில் உள்ள மஸ்ஜிதுக்குச் சென்றான். அங்கு முஆவியா ரலி அவர்கள் இமாமாக இருந்து தொழுதுக் கொண்டிருந்தார்கள். பர்க் தனது வாளால் முஆவியா ரலி அவர்களை தாக்கினான். வாள் சரியான இடத்தில் பட்டுவிட்டது என நினைத்து, தப்பி ஓட முயன்றான். ஜனங்கள் அவனை பிடித்துக் கொண்டனர். அவனுடைய தாக்குதலால் முஆவியா காயமுற்றார். ஆனால் சில நாட்களிலேயே குணமடைந்து விட்டார்.

அதே நாளில், அதே நேரத்தில் எகிப்தில் உள்ள மஸ்ஜிதுக்கு அம்ரு பின் பக்ர் வந்தான். அங்கு காரிஜா பின் அபீ ஹபீபா அவர்கள் இமாமாக இருந்தார். அவரை, அம்ரு இப்னு ஆஸ் என நினைத்து வாளால் வெட்டிக் கொன்றான்.  அன்று இமாமுடைய இடத்தில் நிற்காததால் அம்ரு இப்னு ஆஸ் உயிர் பிழைத்துக் கொண்டார்.

அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம், அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களை கொல்லும் நோக்கத்தோடு கூபா வந்தான். கூபாவில் தன்னுடைய முக்கிய நண்பர்களை சந்தித்தான். ஆனால் தனது திட்டம் பற்றி அவர்கள் யாரிடமும் கூறவில்லை. கடைசியாக  தனது நம்பிக்கைக்குரிய தோழன் ஷபீப் பின் ஷஜ்ரா என்பவனிடம் தனது எண்ணத்தைக் கூறினான். முதலில் அவன் மறுத்தாலும், பிறகு ஒப்புக் கொண்டான்.

தமீம் கூட்டத்தாரில் பத்து பேர்கள் நஹர்வான் போரில் கொல்லப்பட்டார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம் அந்த பத்து பேருடைய உறவினர்களுடன் தொடர்பு கொண்டான். மேலும் அவர்களுடைய வீடுகளுக்கும் அடிக்கடி சென்று வந்துக் கொண்டிருந்தான். அப்போது கதவ்ம் என்னும் அழகியை சந்தித்தான். அவளை நிகாஹ் செய்துக் கொள்ளவும் ஆசைப்பட்டான். தனது

நாட்டத்தை அவளிடம் தெரிவித்தபோது அவள், மூவாயிரம் திர்ஹம், ஒரு அடிமைப் பெண், ஒரு ஊழியர் மற்றும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்களின் வெட்டப்பட்ட தலை ஆகியவற்றை மஹராக கொடுத்தால், நிகாஹ் செய்துக் கொள்வதாகக் கூறினாள். அதற்கு முல்ஜிம், "இப்போதுள்ள சூழ்நிலையில் உன்னுடைய கடைசி நிபந்தனையை மட்டுமே என்னால் நிறைவேற்ற முடியும் என்றான். அதற்கு அவள் ஒப்புக் கொண்டாள். மேலும், முல்ஜிமுக்கு துணையாக வெர்தன் என்பவனையும் அனுப்பி வைத்தாள்.

குறிப்பிட்ட நாளும் வந்தது. அப்துர் ரஹ்மான் இப்னு முல்ஜிம், வெர்தன், ஷபீப் பின் ஷஜரா ஆகிய மூவரும் முன்னிரவிலேயே கூபா மஸ்ஜிதுக்கு வந்தார்கள். கதவுக்கு அருகில் மறைந்து உட்கார்ந்துக் கொண்டார்கள். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 599, தாரீக் இப்னு கல்தூன், பா 1, பக் 437)

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள், ஹிஜ்ரி 40, ரமலான் மாதம், பதினேழாம் நாள் அதிகாலையில் கனவொன்று கண்டு திடுக்கிட்டு எழுந்தார்கள். தமது மூத்த புதல்வர் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம், "நான் இன்று கனவொன்று கண்டேன். கனவிலே அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களைக் கண்டு, "அண்ணலே! உங்களுடைய உம்மத்துகள் எனது கடைசி மூச்சுவரை என்னை கண்கலங்கச் செய்துவிட்டார்கள்" என்று முறையிட்டேன். அதற்கு அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்கள், "நீங்கள் வல்ல அல்லாஹ்விடம் துஆ செய்யுங்கள்" என்று கூறினார்கள். உடனே நான், "யா அல்லாஹ்! என்னை இந்த மக்களை விட்டும் தூரமாக்கி நல்லோர்களுடன் சேர்த்து விடுவாயாக! இந்த மக்கள் மீது, இவர்களை விட தீயவனை சாட்டிவிடுவாயாக!" என்று துஆ செய்தேன், என்று கூறினார்கள். அதே சமயம் முஅத்தின் இப்னு நப்பாஹ் "தொழுகை, தொழுகை" என்று அழைப்பு விடுத்துக் கொண்டிருந்தார். எனவே, அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் ஃபஜ்ர் தொழுகைக்கு புறப்பட்டுச் சென்றார்கள். (தாரீகுல் குலஃபா, பக்கம் 178)

ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் பள்ளிவாசலுக்குள் வந்ததும் "அஸ்ஸலாத், அஸ்ஸலாத்" என்று தொழுகைக்கு அழைத்தபடியே சென்றார்கள். அப்போது அவர்களை முதலில் வெர்தன் என்பவன் தனது வாளால் தாக்கினான். ஆனால் வாள் சுவற்றிலோ, கதவிலோ பட்டது. அதைத் தொடர்ந்து இப்னு முல்ஜிம் விஷம் தோய்த்த தனது வாளால் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வ்ஜ்ஹஹூல் கரீம் அவர்களின் புனித நெற்றியில் பலமாக தாக்கினான்! நெற்றியிலிருந்து வழிந்த இரத்தம் அன்னாரின் தாடியை சிவப்பு நிறமாக்கியது. நெற்றியில் பட்ட காயம் மூளை வரை பரவியிருந்தது. அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல்

கரீம் அவர்கள், “அவர்களைப் பிடியுங்கள், அவர்களைப் பிடியுங்கள்” என்று கூறினார்கள்.

உடனே தொழுகைக்கு வந்திருந்த மக்கள் அவர்களைப் பிடிக்க ஓடினார்கள். ஆனால், வெர்தனும், ஷபீபும் தப்பி வெளியே ஓடிவிட்டார்கள். வெர்தன் தனது வீட்டை அடைந்த போது, மக்கள் அவனைப் பிடித்து அதே இடத்தில் கொன்று விட்டார்கள். முல்ஜிம் மட்டும் மஸ்ஜிதிலேயே மாட்டிக் கொண்டான். அவனைப் பிடித்து ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களிடம் கொண்டு வந்தார்கள். அப்போது ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், “நான் இந்த காயத்தின் காரணமாக மரணமடைந்து விட்டால், இவனையும் கொன்று விடுங்கள். நான் உயிர் பிழைத்து விட்டால் அவனைப் பற்றி நானே ஒரு முடிவு எடுப்பேன்” என்று கூறினார்கள்.

## வஸியத்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வ்ஜ்ஹஹுல் கரீம் அவர்கள் அப்துல் முத்தலிப் அவர்களுடைய வமிசத்தை சேர்ந்தவர்களை தம்மிடம் அழைத்தார்கள். அவர்களிடம், “என்னுடைய கொலையை காரணமாக்கி முஸ்லிம்கள் எவரையும் கொல்லக் கூடாது. என்னை கொன்றவனை மட்டுமே கொல்ல வேண்டும்” என்று கூறினார்கள். பிறகு, தமது மூத்த புதல்வர் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து, “நான் இந்த காயத்தால் மரணமடைந்து விட்டால், முல்ஜிமுடைய வாளால், அவன் தாக்கியது போலவே தாக்கி கொல்ல வேண்டும். மாறாக அவனது உடல் உறுப்புகளை அறுத்து சித்ரவதை செய்யக் கூடாது. ஏனெனில், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சித்ரவதை செய்வதை விட்டும் தடுத்துள்ளார்கள்”. என்று கூறினார்கள்.

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் வெள்ளிக் கிழமை காலையில் தாக்கப்பட்டார்கள். ஆயினும் ஞாயிற்றுக் கிழமை இரவுதான் வஃபாத் ஆனார்கள். அதற்கிடையில் ஜன்துப் பின் அப்துல்லாஹ் அவர்கள் வந்து, “தாங்கள் எங்களை விட்டும் பிரிந்து சென்று விட்டால், நாங்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பைஅத் செய்யலாமா?” என்று கேட்டார்கள். அதற்கு ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், “அதைப்பற்றி நான் எதுவும் கூறமாட்டேன். உங்களுக்கு எது சரியாகப் படுகிறதோ அதன்படியே செயல்படுங்கள்” என்று கூறினார்கள்.

தமது திருப் புதல்வர்கள் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரையும் தம்மிடம் அழைத்தார்கள். அவர்களிடம்,

“பிரியமுள்ள பிள்ளைகளே! நீங்கள் வல்ல அல்லாஹ் ரப்புல் இஜ்ஜத் மீது தக்வா (கடவுள் பற்று) கொள்ளும்படியும், உலக வாழ்வில் சிக்காமல் இருக்கும்படியும் உங்களுக்கு வஸியத்து செய்கிறேன். உங்களுக்கு கிடைக்காத ஒன்றைப் பற்றி வருத்தம் கொள்ளவேண்டாம். எப்போதும் உண்மையே பேசவேண்டும். அநாதைகள் மீது கருணை பொழிய வேண்டும். ஆதரவு இல்லாதவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். கொடுமை செய்பவனுக்கு எதிரியாகவும், கொடுமை இழைக்கப்பட்டவனுக்கு தோழனாகவும் இருக்க வேண்டும். திருக்குர்ஆனைக் கொண்டே செயலாற்ற வேண்டும். இறைக் கட்டளைகளுக்கு எதிராக குற்றம் சாட்டுவோரைக் கண்டு அச்சப்பட வேண்டாம்” என்று வஸியத்து செய்தார்கள்.

பிறகு, மற்றொரு புதல்வரான ஹழரத் முஹம்மத் பின் ஹனஃபீயா ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அழைத்து, “உமக்கும் இதே விஷயங்களை வஸியத்து செய்கிறேன். மேலும், உமது இரு சகோதரர் களையும் கண்ணியப் படுத்தும் படியும் வஸியத்து செய்கிறேன். அவ்விருவரின் உரிமை உம்மீது அதிகம் உள்ளது. அவர்கள் விரும்பாத எதையும் செய்யவேண்டாம்” என்று வஸியத்து செய்தார்கள். அதனைத் தொடர்ந்து ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இருவரையும் மீண்டும் அழைத்து, “உங்கள் சகோதரர் ஹழரத் முஹம்மத் பின் ஹனஃபிய்யா அவர்களுடன் அழகிய முறையில் நடந்துக் கொள்ளுங்கள்” என்று கூறினார்கள். பிறகு இந்த வஸிய்யத்தை எழுத்து வடிவமாக்கினார்கள். அதே சமயம் வஃபாத்துடைய நேரமும் நெருங்கியது. அச்சமயம் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் புனித வாயிலிருந்து “லா இலாஹ இல்லல்லாஹு” என்னும் கலிமாவைத் தவிர வேறு எந்த வார்த்தையும் வரவில்லை! இன்னா லில்லாஹி வ இன்ன இலைஹி ராஜிஊன். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 600, தாரீக் இப்னு கல்தூன், பாகம் 1, பக்கம் 438)

ஹழரத் ஜுஹரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஷஹீதான காலையில், பைத்துல் முகத்தஸில் எந்த ஒரு கல்லை எடுத்தாலும் அதன் கீழே இரத்தம் வெளிப்பட்டது. (ஹாகிம், பைஹகீ, அபூ நுஅய்ம், கஸாயிஸுல் குப்ரா, பா 2, பக் 253)

ஹழரத் ஜுஹரீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், ஹழரத் ஸயீத் இப்னு முஸய்யப் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் வாயிலாக அறிவிக்கிறார்கள், “ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள் ஷஹீதான காலையில், இந்த பூமியில் எந்த ஒரு (கூழாங்)கல்லை எடுத்தாலும் அதன் கீழே பச்சை இரத்தம் காணப்பட்டது”. (அபூ நுஅய்ம், கஸாயிஸுல் குப்ரா, பா 2, பக் 253) இதன்

மூலம் ஒரு மாபெரும் மனித புனிதருக்கு இந்த உம்மத்துக்கள் செய்த கொடுமையை வல்ல அல்லாஹ் வெளிப்படுத்தினான்!

ஒரு பக்கம் கலகக்காரர்களின் சூழ்ச்சிகள். ஒரு பக்கம் ஹழரத் உஸ்மான் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களுடைய படுகொலையைக் காரணமாக்கி பழி வாங்கத் துடித்த உமையாக்களின் போர்த் தந்திரங்கள். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களுக்கு இருந்த நெருக்கம், சிறப்பு ஆகியவற்றை அறிந்திருந்தும் எதிர்த்து நின்ற நபித் தோழர்கள். முஸ்லிம்களின் வாட்கள் முஸ்லிம்களையே கொன்று குவிக்கும் அவலத்தை எண்ணி உண்டான மன உளைச்சல்கள். இவற்றுக்கு இடையில்தான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் தமது ஆட்சிக் காலத்தை கழித்தார்கள். இதனால், பதவியேற்ற நாள் முதல் படுகொலை செய்யப்பட்ட நாள் வரை நிம்மதியை இழந்து தவித்தார்கள். இவ்விதமான நிலையிலே நான்கு வருடங்கள் எட்டு மாதங்கள் ஒன்பது நாட்கள் வரை கிலாஃபத்தின் சுமையை தாங்கி நின்றார்கள். ஹிஜ்ரி 40 ஆம் ஆண்டு, ரமளான் மாதம் 20 ஆம் நாள் இரவில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கிலாஃபத் பதவியிலிருந்தும், உலக வாழ்விலிருந்தும் நிரந்தர ஓய்வு பெற்றார்கள்.

## நல்லடக்கம்:

ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் ஷஹாதத்திற்குப் பிறகு இப்னு முல்ஜிம் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் முன்பாக கொண்டுவரப்பட்டான். ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அவனை ஒரே வாள் வீச்சில் தலையை கொய்துவிட்டார்கள். அதன் பிறகு, ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் அப்துல்லாஹ் இப்னு ஜஃபர் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய மூவரும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திரு உடலை குளிப்பாட்டினார்கள். பிறகு மூன்று துணிகளைக் கொண்டு கபன் அணிவிக்கப்பட்டது. ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ஜனாஸா தொழுகையை தொழுவித்தார்கள்.

சில அறிவிப்புகளில் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் புனித உடல் கூபா மஸ்ஜிதில் நல்லடக்கம் செய்யப்பட்டது என்றும், சில அறிவிப்புகளில் அன்னாருடைய வீட்டில் நல்லடக்கம் செய்யப் பட்டார்கள் என்றும், சில அறிவிப்புகளில் கூபாவிலிருந்து பத்து மைல் தொலைவில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. இன்னும் சில அறிவிப்புகளில் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், அன்னாரின் புனித உடலை காரிஜிய்யாக்கள் அவமதித்து

விடுவார்களோ என்ற அச்சத்தால், அன்னாரின் புனித உடலை எடுத்து, வேறு இடத்தில் நல்லடக்கம் செய்தார்கள் என கூறப்பட்டுள்ளது.

மற்றொரு அறிவிப்பில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திரு உடலை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருகில் நல்லடக்கம் செய்யும் பொருட்டு, அன்னாரின் திரு உடலை ஜனாஸா பெட்டியில் வைத்து, அதை ஒரு ஒட்டகத்தின் மேல் வைத்து கட்டினார்கள். திடீரென அந்த ஒட்டகம் ஓடி காணாமல் போனது. பிறகு அது, 'தே' என்னும் இடத்தில் கிடைத்தது. உடனே, ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களின் திரு உடலை அதே இடத்தில் நல்லடக்கம் செய்தார்கள் என கூறப்பட்டுள்ளது.

மற்றொரு அறிவிப்பில், ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் இறந்து சில ஆண்டுகள் கழிந்த பின்னர், அப்பாஸியக் கலீஃபா ஹாரூன் ரஷீத் அவர்கள், கூஃபாவிற்கு வெளியே மான் வேட்டையாடச் சென்றார்கள். மான்கள் அதிகமாக வாழக்கூடிய ஒரு பகுதியின் பக்கம் அவர்கள் சென்ற பொழுது, ஒரு குறிப்பிட்ட இடத்தை நோக்கி வேட்டை நாய்கள் செல்வதைத் தவிர்த்து திரும்பி வந்துவிடுவதை ஆச்சரியத்தினூடே கண்டார்கள். பிறகு, அவ்விடத்தைப் பற்றி ஹாரூன் ரஷீத் அவர்கள் தம் தோழர்களிடம் விசாரித்தார்கள். அவர்களில் சிலர், 'அப்பகுதியில் ஒரு இடத்தில்தான் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களின் திரு உடல் யாருக்கும் தெரியாமல் அடக்கம் செய்யப்பட்டது' என்று கூறினார்கள். உடனே கலீஃபா ஹாரூன் ரஷீத் அவர்கள், அவ்விடத்திலேயே ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களுக்கு ஒரு நினைவுக் கட்டிடத்தை எழுப்பினார்கள். பிறகு அவ்விடம் சிறிது சிறிதாக வளர்ச்சி பெற்றது. அதுவே இப்போது ஈராக்கில் உள்ள நஜஃப் என்னும் பகுதியாகும்.

இதில் ஆச்சரியமான விஷயம் என்ன வென்றால், இவ்வளவு சிறப்பான, உயர்வான ஒரு மனிதருடைய அடக்கத்தலம் இன்றுவரை எங்கு இருக்கிறது என்பதே தெரியாமல் இருப்பதுதான்!

## **குடும்பம்**:

அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், பல்வேறு சந்தர்ப்பங்களின் காரணமாக ஒன்பது திருமணங்களை செய்து கொண்டார்கள். இவர்கள் மூலமாக பதினான்கு பிள்ளைகளும், பதினேழு பெண் மக்களும் பிறந்தனர்.

1. அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்கள், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருப் புதல்வியும், சுவனத்

தலைவியுமான ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை நிகாஹ் செய்தார்கள். அவர்கள் மூலமாக ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு, ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு ஆகிய இரண்டு ஆண் மக்களும், ஹழரத் ஸைனப் ரலியல்லாஹு அன்ஹா, ஹழரத் உம்மு குல்ஸூம் ரலியல்லாஹு அன்ஹா ஆகிய இரண்டு பெண் மக்களும் பிறந்தனர். சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் நலமோடு இருக்கும் வரை அமீருல் முஃமினீன் ஹழரத் அலீ கர்ரமல்லாஹூ வஜ்ஹஹூல் கரீம் அவர்கள் வேறு எவரையும் நிகாஹ் செய்துக் கொள்ளவில்லை. அவர்களின் மறைவுக்குப் பிறகே வேறு பெண்களை நிகாஹ் செய்தார்கள்.

2. இரண்டாவதாக உம்முள் பனீன் பின்த் குஸாமா அவர்களை நிகாஹ் செய்தார்கள். இவர்கள் மூலம் ஹழரத் அப்பாஸ், ஹழரத் ஜஃபர், ஹழரத் அப்துல்லாஹ், ஹழரத் உஸ்மான் ஆகிய நான்கு ஆண் மக்கள் பிறந்தனர்.
3. மூன்றாவதாக, லைலா பின்த் மஸ்ஊத் தமீமி அவர்களை நிகாஹ் செய்தார்கள். அவர்கள் மூலமாக ஹழரத் அப்துல்லாஜ், ஹழரத் அபூபக்கர் ஆகிய இரு பிள்ளைகள் பிறந்தன.
4. நான்காவதாக அஸ்மா பின்த் உமைஸ் அவர்களை நிகாஹ் செய்தார்கள். அவர்கள் மூலமாக ஹழரத் யஹ்யா, ஹழரத் முஹம்மத் அஸ்கர் ஆகிய பிள்ளைகள் பிறந்தன.
5. ஐந்தாவதாக, அண்ணல் நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் அவர்களின் பேத்தியும், ஹழரத் ஸைனப் நாயகி அவர்களின் மகளாருமான உமாமா ரலியல்லாஹு அன்ஹா அவர்களை நிகாஹ் செய்தார்கள். தமது இறப்புக்கு பிறகு இவரை நிகாஹ் செய்துக் கொள்ளும்படி சுவனத் தலைவி ஹழரத் ஃபாத்திமா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறியிருந்தனர். இவர்கள் மூலமாக ஹழரத் முஹம்மத் அவ்ஸத் அவர்கள் பிறந்தார்கள்.
6. ஆறாவதாக, ஹழரத் கவ்லா பின்த் ஜவ்ஃபர் அவர்களை நிகாஹ் செய்தார்கள். அவர்கள் மூலமாக ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா அவர்கள் பிறந்தார்கள்.
7. ஏழாவதாக, ஹழரத் ஸஹ்பா பின்த் ரபீஃஆ அவர்களை நிகாஹ் செய்தனர். அவர்கள் மூலமாக ஹழரத் உமர், ஹழரத் ருகையா ஆகிய இருவர் பிறந்தனர்.
8. எட்டாவதாக, ஹழரத் உம்மு ஸஈத் பின்த் உருவா அவர்களை நிகாஹ் செய்தனர். அவர்கள் மூலமாக ஹழரத் உம்முல் ஹுஸைன், ஹழரத் ரமலா ஆகிய இரு பெண் மக்கள் பிறந்தனர்.
9. ஒன்பதாவதாக, ஹழரத் மிஹ்யாத் இப்னு இம்ரவுல் கைஸ் அவர்களை நிகாஹ் செய்தார்கள்.

இவர்களில் ஹழரத் இமாம் ஹஸன் ரலியல்லாஹு அன்ஹு மற்றும் ஹழரத் இமாம் ஹுஸைன் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஸில்ஸிலாவில் வந்தவர்கள் ‘ஸாதாத்துகள்’ ஆவார்கள்.

ஹழரத் முஹம்மத் இப்னு ஹனபியா, அப்பாஸ், மற்றும் உமர் ரலியல்லாஹு அன்ஹும் ஆகியோரின் ஸில்ஸிலாவில் வந்தவர்கள் தங்களை அலவிகள் என அழைத்துக் கொள்கின்றனர். (தாரீக் இஸ்லாம், பாகம் 1, பக்கம் 601)

## ஸில்ஸிலா

இவ்வுலகில் திக்கெட்டும் பரவி ஆன்மீகப் பணி செய்த அவுலியாக்கள், ஷைகுமார்கள் அனைவருமே தங்களுடைய ஞான வழித் தொடரை - 'ஸில்ஸிலா' என்னும் பாரம்பரிய சங்கிலித் தொடரை ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களைக் கொண்டே அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களோடு இணைகிறார்கள். இச்சிறப்பும் ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹு அவர்களுக்கே கிடைத்துள்ளது!

இந்த உலகத்தில் காதிரிய்யா (ஹழரத் அப்துல்காதிர் ஜீலானி ரலியல்லாஹு அன்ஹு), ஷுஹரவர்த்திய்யா (ஹழரத் ஷிஹாபுத்தீன் ரஹ்மதுல்லாஹி அலைஹி), ரிபாயிய்யா (ஹழரத் அஹ்மத் அல் கபீர் அர் ரிபாயி, பஸரா) ஷாதுலிய்யா (ஹழரத் நூருத்தீன் அஹ்மத் அஷ் ஷாதுலி, மொராக்கோ) நக்ஷபந்திய்யா (ஹழரத் பஹாவுத்தீன் நக்ஷபந்தி ரஹ்மதுல்லாஹி அலைஹி, புகாரா) ஜிஷ்திய்யா (ஹழரத் குவாஜா அபூ இஸ்ஹாக் ரஹ்மதுல்லாஹி அலைஹி) போன்று சுமார் 125 தரீக்காக்கள் தோன்றி வளர்ந்ததாக கூறப்படுகிறது. இவற்றில் பெரும்பாலான தரீக்காக்களின் ஸில்ஸிலா ஹழரத் அலீ கர்ரமல்லாஹு வஜ்ஹஹுல் கரீம் அவர்களுடன் இணைகிறது. நக்ஷபந்தியா தரீக்காவின் ஸில்ஸிலா ஹழரத் அபூபக்கர் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் முடிவடைகிறது.

## துஆ

இறைவா! ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மீதும், ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ அருள் புரிந்ததைப் போல, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீதும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தார் மீதும் அருள் புரிவாயாக! நிச்சயமாக நீ புகழுக்குரியவனாகவும், கண்ணியத்திற் குரியவனாகவும் இருக்கின்றாய்.

இறைவா! ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கும், ஹழரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் குடும்பத்தாருக்கும் நீ பரக்கத் (விருத்தி) செய்தது போல, அண்ணல் நபி ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தாருக்கும் விருத்தி செய்வாயாக! நிச்சயமாக நீ புகழுக்குரியவனாகவும், கண்ணியத்திற் குரியவனாகவும் இருக்கின்றாய்!

اَللّٰهُمَّ مَنْ كُنْتَ مَوْلَاهُ فَعَلِيٌّ مَوْلَاهُ ه اَللّٰهُمَّ وَالِ مَنْ وَالَاهُ
وَعَادِ مَنْ عَادَاهُ وَانْصُرْ مَنْ نَصَرَهُ وَاخْذُلْ مَنْ خَذَلَهُ وَاَدْرَ
الْحَقَّ حَيْثُ دَارَ ه

இறைவா! திரும்பிவிடாத உறுதியான ஈமானையும், தீர்ந்துவிடாத நிலையான இன்பங்களையும், மிக மேலான அந்தஸ்துகளை உடைய சுவனத்தில் உன் நபியின் தோழமையையும் நிச்சயமாக நான் (உன்னிடம்) கேட்கிறேன்.

**நூல்கள்:**


**அல் முர்துஜா (கரம்),** இருபதாம் நூற்றாண்டின் இஸ்லாமிய அறிஞர் மவ்லானா அபுல் ஹஸன் அலி நத்வீ அவர்கள்.

**அஸ் ஸப்ஈன் ஃபீ ஃபளாயிலே அலீ,** சுல்தானுல் அஸ்ஃபியா தாஜுல் அவ்லியா, ஸய்யத் அமீர் கபீர் அலீ ஹமதானீ

**கஸாயிஸுல் குப்ரா,** அல்லமா ஜலாலுத்தீன் ஸுயூத்தி

**கஸாயிஸ் அலீ,** ஹழரத் இமாம் நஸாயீ

**அன்வாரே அலீ,** ஹழரத் இமாம் நஸாயீ

**ஸீரதே ஹழரத் அலீயுல் முர்துஜா,** ஹழரத் முஹம்மத் ஹஸீப் காதிரீ

**ஹழரத் அலீ இப்னு அபீதாலிப்,** ஹழரத் ஷாஹ் வலியுல்லாஹ் திஹ்லவி

**ஃபிகாஹ் ஹழரத் அலீ,** டாக்டர் முஹம்மத் ரவ்வாஸ் அவர்கள், சவூதி

**அல் முஅஜம் அல் கபீர் தப்ரானீ,** இமாம் அல்ஹாபிழ் அபுல் காஸிம் சுலைமான் பின் அஹ்மத் பின் அய்யூப் அல் தப்ரானீ.

**பர்காதே ஆலே ரஸூல்,** இமாம் அல்லமா யூசுப் பின் இஸ்மாயீல் நபஹானி

**அஸ்ஸவாயிகுல் முஹர்ரிகா,** அல்லமா இமாம் இப்னு ஹஜர் மக்கீ

**தபகாத் இப்னு ஸஅத்,** ஹழரத் முஹம்மத் இப்னு ஸஅத்

**தாரீகுல் குலஃபா,** ஹழரத் இமாம் ஸுயூத்தி

**தாரீக் இஸ்லாம்,** அக்பர் ஷாஹ் கான் நஜீப் ஆபாதி

**தாரீக் இப்னு கல்தூன்**, அல்லமா அப்துர் ரஹ்மான் இப்னு கல்தூன்

**ஜமாலுல் அவ்லியா,** ஷாஹ் வலியுல்லாஹ் திஹல்வி

**முகம்மல் தாரீக்கே இஸ்லாம்,** முஃப்தி ஷவ்கத் அலி ஃபஹ்மீ

**ஹழரத் அலீ இப்னு அபி தாலிப்,**

**ஸஹீஹ் புகாரீ,**

**ஸஹீஹ் முஸ்லிம்,**